# சில பிரச்னைகள் சில வார்த்தைகள்



மஞ்சுளா ரமேஷ்

இந்தத் தடவை 10-வது தேறியவர்கள் பற்றி ஷோபனா ரவி டீ.வி.யில் சொல்லிக் கொண்டிருந்தார். சென்ற வருடம் தேறியவர்கள் எத்தனை சதவீதம், இந்த வருடம் என்ன கதை, சென்ற வருடத்திய மார்க்குகள் இந்த வருடத்திய மார்க்குகள்.. விலாவாரியாகப் படித்தார். மறுநாள் பேப்பரில் படித்தோம். என்ன ஆச்சு...? எல்லாம் இறங்கு முகம்தான்!

நம் குழந்தைகளுக்கு என்ன ஆச்சு...? எல்லாவிதத்திலும் இந்த வருடம் குறைந்த சதவீதம் மார்க்குகள், தேர்ச்சி... கேட்கும் போது கஷ்டமாக இருந்தது.

மாணவ, மாணவியர்க்கு இந்த வருடம் 'ஐக்யூ' குறைந்து விட்டதா? புத்திசாலித்தனத்தில் குறைந்து விட்டார்களா? படிக்காமல் கோட்டை விட்டார்களா? இந்தச் சரிவின் ஆரம்பத்திற்குக் காரணம் என்ன...?

எல்லாம் நாம்தான். இந்தப் பெரியவர்கள் வாழும் இரட்டை வாழ்க்கைதான் காரணம். பல முக்கியமான சமூகப் பொறுப்புகளில் இருப்பவர்கள் என்ன செய்கிறார்கள்...? தன் வீட்டுக் குழந்தை வசதியாக இருக்க வேண்டும், நன்றாகப் படிக்க வேண்டும், நல்ல எதிர்காலம் இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். ஆனால் அதற்காக பணம் சம்பாதிக்க "எதை வேண்டுமானாலும்" செய்வது என்றுதானே நினைக்கிறார்கள். நாம் செய்யும் காரியங்களால் ஒட்டுமொத்தமாகச் சமுதாயம் கெடும் போது அந்தப் படுகுழியில் நம் குழந்தைகள் மட்டும் விழாமல் போய் விடுவார்களா? இவர்களுக்கெல்லாம் மனசாட்சி என்பதே கிடையாதா?

இப்போது வந்து கொண்டிருக்கும் சினிமாப் பாட்டுக்களைப் பற்றி எழுதியும், ஒவ்வொரு கூட்டத்திலும் பேசியும், பார்க்கும் பெண்களிடம் எல்லாம் புலம்பியும் ஆச்சு. டீ.வி. அதையேன் கேட்கிறீர்கள்? ஒவ்வொரு ப்ரோக்ராமும் எப்படித்தான் இருக்கிறது? இங்கே ஆதங்கப்பட்டு எழுதுகின்ற வாசகர்களின் கடிதங்களைப் படிக்கும் போது வருத் தம்தான் பொங்குகிறது.

தம்பதியாக மேடைக்கு வருபவர்களிடம் முதல் இரவைப் பற்றிப் பேசுகிறார்களாம். கூட்டத்தில் இருந்த பெற்றோர் மேடைக்குப் போகத் தயங்கிய மகளிடம், "போயேண்டி, ப்ரைஸா ஒரு குக்கரோ, மிக்ஸ் பாய்லரோ கிடைக்குமில்லே" என்று தள்ளுகிறார்களாம். ஒரு வாசகி குமுறி எழுதியிருந்தார். நாம் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை ஆதரித்து ஊக்குவிப்பதால்தானே நடத்துகிறார்கள்? இந்தப் பொது மக்களின் புத்தி எங்கே போயிற்று என்று சாடுகிறார் அவர்.

பத்திரிகைகள்... அவர்கள் சொல்வதைக் கேளுங்கள். 'இந்த மாதிரி ரொம்பக் கேவலமாக சீன்கள் எல்லாம் எடுக்கிறார்கள், இப்படி பாட்டெல்லாம் மகாமோசமாக இருக்கிறது' என்று ஆட்டுக் குட்டிக்கு வருத்தப்பட்டு அழுத ஓநாய் கதையாக அந்தக் குறிப்பிட்ட படத்தையும், அந்தக் குறிப்பிட்ட பாடலை பதவுரை பொழிப்புரையோடு போடுகிறார்கள்.

ஆனால் இவர்கள் வீட்டுக் குழந்தைகள் எல்லாம் மூடிய காரில் பள்ளிக்கும் கல்லூரிக்கும் போய் வந்து விடுகின்றன. தெருவில் நடக்கும் இளம் மாணவ மாணவியரைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள்? தெருவெங்கும் முழக்கமிடும் பாடல்கள், ஹாலில் சோளிகேபீச்சே பாடும் டீ.வி., கலர் கலராகப் பாவாடையைத் தூக்கிக் கொண்டு நிற்கும் பத்திரிகைகள்...

ஆனால் நம் குழந்தைகள் மட்டும் நன்றாக இருந்து விட வேண்டும்! எப்படி இருப்பார்கள்? கவர்ச்சிகள் அவர்களின் கண்களை இழுக்கின்றன. கணவன் இருக்கும்போதே மற்றொருவனைப் பார்த்து 'ஐயோ எனக்கு

உன் மேல் இருக்கும் காதல் புனிதமானது' எனப் பேசும் மனைவி... அவளுக்காகத் தவிக்கும் காதலன்... அதைக் கண்கொட்டா மல் இந்தியாவில் அத்தனை பேரும் பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள்.

ஆனால் நம் குழந்தைகள் மட்டும் நன்றா கப் படிக்க வேண்டும், எந்தவிதத்திலும் கெட்டுப் போகக் கூடாது!

எப்படி ஐயா இது சாத்தியம்? சரிவின் ஆரம்பத்தை இதோ இந்தத் தேர்வு முடிவு களே காட்டுகின்றனவே! அம்மாமார்களே, அப்பாமார்களே நம் கைகளில் வளர்ந்து கொண்டு இருக்கிறார்களே, அந்தக் குழந் தைகள் மகாபுத்திசாலிகள், தேசபக்தி மிக்க வர்கள், தீமையைக் கண்டால் பொங்கி எழு பவர்கள். ஆனால் நாம் அவர்களை என்ன செய்து கொண்டு இருக்கிறோம்...?

அந்தப் புத்திசாலித்தனத்தை டீ.வி. பார்ப்பதிலும், சினிமாக் கதாநாயகி போல நடந்து கொள்ள வைப்பதிலும் மழுங்கடித்துக் கொண்டிருக்கிறோம். தேசபக்தியை நசுக்கி, 'அட போடா, சொல்ல வந்துட்டான். ஸ்டேட் ஸுக்குப் போ, ஆஸ்திரேலியா போ' என விரட்டி விட்டு, 'எம் புள்ளை நாளை ப்ளைட்ல சிட்னி போறான்' எனச் சொல் கிறோம்.

சிறுமைகண்டு பொங்குவதா? மூச்! 'கடனோ உடனோ புரட்டி அந்த ஆள் கேட்ட மாதிரி ஒன் லேக் கொடுத்துடறேன். நீ ஜாப்ல ஜாயின் பண்ணிடு. ரெண்டு வருஷத்துல அறுவடை செஞ்சுடலாம்!' இது தந்தையின் வேதவாக்கு.

இதோ நம் கண் எதிரே இளந்தளிர்கள் இந்தத் தலைமுறை மனிதர்களின் பொறாமை, ஆத்திரம், கண்மூடித்தனம், பணம் பண்ணும் ஆசை இவைகளால் பொசுங்கிப் போய்க் கொண்டு இருக்கிறார்கள்.

நாமெல்லாம் இதை எப்போது உணரப் போகிறோம்?

நம் கண்கள் திறக்குமா திறக்காதா?

ஹாங்.. ஒண்ணு சொல்ல மறந்து விட் டேனே? சமீபத்தில் தாயும் தந்தையும் சேர்ந்து தயாரித்துத் தன் திருமகளை நடிக்க வைத்து 'ஆட்டோ ராணி, வீட்டுலே ஏறி...' அதற்கு மேல் எழுத முடியாத ஒரு பாடலை டைரக்ட் செய்து இன்று அந்தப் பாட்டு பட்டிதொட்டி யெல்லாம் முழங்கிக் கொண்டு இருக்கிறது.

பரீட்சை ரிசல்ட் பத்தி என்ன சார் கவலை..? இளையதலைமுறையினர் பிரமாத மாக முன்னுக்கு வந்து கொண்டு இருக்கிறார் கள் - சினிமா பாட்டு, டூயட் டான்ஸ் இவற் றைக் கற்பதிலும், மணிக்கணக் காக வீடியோ பார்த்து கின்னஸ் ரெகார்ட் புரிவதிலும்.

நமக்கென்ன குறைச்சல்...!

---

# போயே போச்சு!

எனக்குக் கல்யாணம் நிச்சயம் ஆனவுடன் என் மாமியார், 'உன் நாத்தனார்கள் இருவரும் மூக்கு குத்திக் கொண்டிருப்பதால் நீயும் கண்டிப்பாக மூக்கு குத்திக் கொள்ள வேண்டும் என்று சொல்லி விட்டார்கள். ஆகையால் நானும் கல்யாணத்திற்கு ஒரு மாதம் முன்னாலேயே குத்திக் கொண்டு விட்டாலும் அது புண்ணாகி மூக்கு வீங்கிக் கொண்டு மிகுந்த துர் நாற்றத்துடன் தண்ணீர் வடிய ஆரம்பித்தது.

டாக்டரிடம் காண்பித்து ஆன்டி-பயாடிக் சாப்பிட்டும், பல பேர் பல கை வைத்தியங்கள் சொல்லிச் செய்தும் சரியாகாமல் வலியுடன் கஷ்டப்படு வதைப் பார்த்து, மூக்குத்தியைக் கழற்றி விட்டு துள்ளப் போட்டு விடலாம் என்று நினைத்த போது ஒரு மாமி வீட்டிற்கு வந்திருந்தார்கள்.



'அடடே, இதற்கு ஒரு நல்ல வைத்தியம் இருக்கே. பெருங்காயத்தைச் சிறிது தண்ணீர் விட்டு உரைத்து புண்ணாகிய இடத்தில் வை' என்று சொன்னார். அதே மாதிரி செய்து பார்த்து விடலாம் என்று பெருங்காயத்தை மூக்கில் உரைத்துப் போட்டதுதான் தாமதம், பட்டு மாதிரி காய்ந்து போய் விட்டது. இப்பொழுது அழகாக மூக்குத்தியுடன் மூக்கு மின்னிக் கொண்டிருக்கிறது.

– விஜயா நாகராஜன்

# கறைபடாத புடவை



அருமையான பட்டுப் புடவை! கலரும், ஜரிகையும் அற்புதமான காம்பினேஷன். கட்டிக் கொண்டு பொருத்தமான நகைகளைப் போட்டுக் கொண்டு ஒரு கல்யாணத்திற்குப் போகிறோம். சிரித்துப் பேசி, சாப்பிட்டு.. அடடா ஐஸ்கிரீம் புடவையில் பட்டு ஊறி... அல்லது ஓடி வந்த ஒரு வாண்டு கையிலிருந்த ஸ்குவாஷை உங்கள் புடவையில் ஊற்றி... போச்சு, அத்தனையும் போச்சு. அழுகையே வந்து விட்டதா உங்களுக்கு?

"கவலைப்படாதீர்கள். பெண்களின் இந்தக் கஷ்டத்தைப் போக்கத்தான் நாங்கள் 'சில்க் கார்ட்' (Silk guard) தயாரிக்கிறோம். எங்கள் புடவையில் இதனை அமைத்துத் தயாரிக்கிறோம். இனி நீங்கள் தைரியமாக விசேஷங்களுக்குப் போகலாம். காப்பியோ, கோகோகோலாவோ உங்கள் புடவையில் பட்டால் தாமரை இலைத் தண்ணீர் போல ஓடி விடும்!''

என அபயக்கரம் நீட்டுகிறார்கள் கிரிஜா புடவைத் தயாரிப்பாளர்களான பதி அசோக், பதி துவாரகநாத், மனோஜ்பதி, பதி ஹரேந்திரா ஆகியோர். இரண்டு, மூன்று தலைமுறைகளாக பெங்களூரில் பட்டு வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் இவர்களுடைய குடும்பத்தில் இந்தத் தலைமுறையினர் நவீன காலத்திற்குரியவர்கள்.

கோலார் மாநிலத்தில் முங்கனபள்ளி என்ற சிறிய கிராமத்தில் நகை வியாபாரம் செய்த பதி ஆதிநாராயணாவும், பதி பாஸ்கரையாவும் புடவை வியாபாரத்திற்கு மாறினார்கள். இவர்கள் மாறிய வேளை நல்ல வேளையோ என்னவோ வியாபாரம் சக்கை போடு போட்டது. தங்கள் குலதெய்வமான சிவனை மனத்தில் கொண்டு 'கிரிஜா புடவைகள்' எனப் பெயர் வைத்தனர்.

"எங்கள் தாத்தா, தந்தை போன்றவர்கள் சில்க் தயாரிப்பில் கரைகண்டவர்கள். இப்போது எங்கள் குடும்பத்தில் நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் இந்த வியாபாரத்தைக் கவனித்து வருகிறோம். நாங்கள் இந்தத் துறையில் ஏதேனும் புதுமையைப் புகுத்த வேண்டும் என நினைத்தோம். அதுதான் இந்த 'சில்க் கார்ட்' புடவைகள். இதனை கிரிஜா என்ற பெயரில் வெளியிடுகிறோம். வாருங்களேன் எங்கள் தொழிற்சாலைக்கு..." என்று அழைத்தார் பதி தாமோதர். புடவை பார்க்கக் கஷ்டமா என்ன...? புறப்பட்டு விட்டோம்.

தூய பட்டு இழைகளை முதலில் புடவையாக நெய்கிறார்கள். அப்படி நெய்யப்படும் போது இங்கு ஒரு

'ஸ்பெஷல் ப்ராஸஸ்' செய்யப்படுகிறது. இழைகளினூடே ஒரு இரசாயனச் சேர்க்கை காற்றின் மூலம் உட்செலுத்தப்படுகிறது. இதனை வியாபார இரகசியமாகக் காப்பாற்றுகிறார்கள். இந்த இரசாயனச் சேர்க்கைதான் புடவையின் ஒவ்வொரு இழையிலும் உட்புகுந்து பட்டுப் புடவையின் மேல் கறை படியாமல் பாதுகாக்கிறது.

"இந்த 'சில்க்-கார்டு' முறையினை வேறு சிலர் கூடச் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் புடவையை முழுமையாக நெய்து, பிரிண்ட் செய்த பிறகு இறுதியில் சேர்க்கிறார்கள். ஆனால் நாங்கள் இழைகளினூடே இதை 'பம்ப்' செய்வதால் ஒவ்வொரு இழையிலும் 'சில்க்-கார்ட்' சேருகிறது" என்கிறார் பதி அருண்.

அதன் பிறகு அதற்குச் சாயம் தோய்க்கப்படுகிறது. அனைத்தும் நவீன மெஷின்கள். பிறகு பிரிண்டிங் செக்ஷன்.



புடவையை மெழுகு தடவிய டேபிளில் இறுக்கமாகப் பிடித்துக் கொள்ளும்படி பரப்புகிறார்கள். கீழே லேசான வெப்பக் காற்று. இதனால் மெழுகு புடவையைச் 'சிக்'கெனப் பிடித்துக் கொள்கிறது. இதன் மேல் 'பிரிண்டிங்' செய்கிறார்கள். பல்வேறு புதிய புதிய டிசைன்களை இவர்களிடம் உள்ள வல்லுநர்களே உருவாக்குகிறார்கள். இவற்றைப் பிரதி எடுத்து அதற்கான பிளேட்டுகளில் பொருத்தி புடவைகளில் ஒரு சுருக்கம் இழை இல்லாமல் 'பளிச்'சென பிரிண்ட் செய்யப்படுகிறது.



இனி பிரிண்டட் சில்க்காக மாறிய புடவை ஒரு பெரிய துணியோடு சேர்த்து சுருட்டி பெரிய அண்டாவில் கொதிக்கும் நீரில் மூழ்கடிக்கிறார்கள். இப்போது மெழுகு முழுமையாகக் கரைந்து புடவையின் பிரிண்ட் பளிச்சிடுகிறது. அப்படிச் சுத்தப்படுத்தப்பட்ட புடவை அப்படியே வேறொரு மெஷினுக்குச் செல்கிறது. இங்கு ஃபைனல்

பாலிஷ்"ம், புடவையின் மேல் மீண்டும் 'சில்க் கார்ட்' முறையும் சேர்க்கப்படுகிறது. பிறகு தரம் சோதிக்கப்பட்டு பெட்டிகளில் அடுக்கப்படுகின்றன.

"இதனால் வேறொரு பலனும் உண்டு. பட்டுப் புடவைகளில் காற்று நுழைய முடியாமல் இருப்பதாலேயே 'கசகச'வென இருக்கும். ஆனால் இந்தப் புடவைகளின் இழைகளின் ஊடேயே நாங்கள் காற்றைச் செலுத்தி 'சில்க் கார்ட்' செய்வதால் இந்தப் புடவைகள்



'கசகச'வென இருப்பதில்லை" என புடவையினைப் பிரித்துக் காண்பித்தார் பதிவஸந்தகுமார்.

"எங்களுடைய புடவைகள் பெரும்பாலானவை மெஷினில் நெய்பவைதான். ஆனால் கையால் நெய்யும் பட்டுப் புடவைகளுக்கும் ஒரு செக்ஷன் வைத்திருக்கிறோம். 'அபூர்வா' அதன் பெயர். எங்களுடைய ப்ராஸஸிங்கில் எந்த மாற்றமும் இல்லையென்றாலும், பாரம்பரியம் மிக்க 'கை நெசவும்' எங்கள் பெருமையைப் பேச வேண்டும் என்றுதான் இதனையும் வைத்திருக்கிறோம்" என்கிறார் பதிசேகர்.

அதே போல 'பெர்ள் ரேஞ்ச்' என ஒருவித புடவைகளையும் தயாரிக்கிறார்கள். இவை மிகவும் சிறப்பான ப்ராஸஸிங் வகையைச் சார்ந்தவை என்கிறார்கள். இதற்கான பிரிண்டிங், கலர் சேர்த்தல், மெழுகு அகற்றுதல் அனைத்துமே மேலும் சிறப்பான முறையில் 'பெர்ள் டையிங் ப்ராஸஸ்' எனப்படுகிறது.

"பொதுவாகச் சொல்ல வேண்டுமென்றால் அடிப்படையிலிருந்தே நாங்கள் மற்றவர்களிடமிருந்து வித்தியாசப்படுகிறோம். சில்க் இழைகளுக்குச் சாயம் தோய்த்து



புடவையாக நெய்வதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். நாங்கள் அசல் பட்டு இழைகளைப் புடவையாக நெய்து படிப்படியாக கலர், பிரிண்டிங் என அழுத்தமாக தரமான முறையில் செய்கிறோம். இதனால்தான் எங்கள் கிரிஜா புடவைகளுக்கு உலகெங்கும் வியாபாரம் இருக்கிறது."

என்கிறார் கோடிக்கணக்கில் ஏற்றுமதி செய்து கொண்டிருக்கும் பதிதுவாரகாநாத்.

'சில்க்-லைன்' என்ற புதிய உத்தியையும் இவர்கள் கையாளுகிறார்கள். இது சுருக்கம் விழாமல் காப்பதுடன் கலரை 'பளிச்' சென்று எடுத்து புடவைக்கு அழகான நெகிழ்வைத் தருகிறது.

புடவை எனும் பாரம்பரியம் மிக்க

Suresh

ஆடைத் தொழிலில் இந்த நவீன மனிதர்கள் தங்கள் நவீன உத்திகளைப் புகுத்தியிருப்பதைப் பார்க்கும் போதுதான் சந்தோஷம் ஏற்படுகிறது. 'ஏதோ எங்க தாத்தா புடவை வியாபாரம் செய்தார். நாங்களும் செய்கிறோம்' என உட்கார்ந்து இல்லாமல், என்னென்ன நவீன உத்திகளால் மக்களுக்குப் பயன் கிடைக்கச் செய்யலாம் என நாளும் நாளும் யோசித்துச் செய்கிறார்கள்.

பட்டின் சிறப்பினைப் பற்றிப் பேசும் போது சில புருவத்தை உயர்த்த வைக்கும் தகவல்களையும் சொன்னார்கள் :

• இயற்கை இழைகளிலேயே நீளமானது பட்டு இழைதான். நானூறு அடி நீளம் வரை கூட ஓரிழை வருவதுண்டாம்.



• மெழுகு டேபிளில் பிரிண்டிங்!

• ஒரு பட்டுப் புடவை நெய்ய ஆறாயிரம் கக்கூன் கூடுகளைக் கொதிக்க வைத்து பட்டு இழையை எடுக்க வேண்டிய தாக உள்ளது.

• இயற்கை இழைகளில் மிகவும் உறுதியானது பட்டு இழைதான்.

• நெய்வதற்கும் வசதியானதாகவும், எடையில்லாததாகவும், நாம் விரும்பியபடி வளைந்து கொடுப்பதாகவும் உள்ளது பட்டு இழைதான்.

• அதே போல மிகவும் சுத்தமானது பட்டுத் துணிதான். ஏனெனில் பருத்தி, கம்பளிகளில் பாக்டீரியாக்கள், ஃபங்கஸ் வளர்வது போல பட்டில் வளருவதில்லை. படியும் அழுக்குகளை எளிதில் களைந்து விட முடியும்.

எழுபது வருடங்களுக்கும் மேலாக இத் துறையில் இருக்கும் இவர்கள், பட்டுப் புடவையைப் பாதுகாப்பது எப்படி என்றும் சொல்கிறார்கள் .

• பட்டுப் புடவையில் தோய்க்கப்படும் வண்ணங்கள் நேரடியான அதிகபட்ச சூரிய ஒளியில் பாதிக்கப்படும் தன்மை கொண்டவை. எனவே சூரிய ஒளியில் மிகுந்த நேரம் பட்டுப் புடவைகள் படும்படியாக வைக்கக் கூடாது.

• சுத்தப்படுத்தும் போது உலர் சலவை மூலமாகவோ, அல்லது மிகவும் மென்மை யான சோப்பைக் கொண்டோ மட்டும் சுத்தப் படுத்தவும்.

• பிரிண்டட் பட்டுப் புடவைகளை நீண்ட நேரம் நீரில் ஊற வைக்கக் கூடாது.

• வெந்நீரிலும் புடவைகளை



• புடவையை வேறொரு துணியில் சுற்றி கொதிக்க வைக்கிறார்கள்

நனைக்கக் கூடாது. குளிர்ந்த நீரில்தான் அலச வேண்டும்.

• புடவைகளை இஸ்திரி போடும் போது நீரைத் தெளிப்பதோ, நீராவியைப் படச் செய்வதோ கூடாது.

• பட்டுப் புடவையின் மேல் மெல்லிய பருத்தித் துணியை விரித்து, சூடு அதிகமில்லாமல் இஸ்திரி செய்வதே நல்லது.

• பிளாஸ்டிக், பாலிதீன் கவர்களில் நீண்ட நாட்கள் பட்டுப் புடவைகளை வைக்கக் கூடாது. உள்ளே காற்றோட்டம் இல்லாமல் புடவையின் ஜரிகை மங்கி விடும்.

• ஜரிகை மங்கி விடுமானால் சிறிது சூடாக இஸ்திரி (ஜரிகையை மட்டும்) செய்தால் போதும். பழையபடி 'பளிச்'சென்று ஆகி விடும்.

தொகுப்பு : டி. ஆர். ரமேஷ்

# பிரமிக்க வைக்கும் பிரமிடுகள்

'**பி**ரமிடு'!

நாம் சரித்திர புத்தகத்தில் படித் திருப்போம், உலக அதிசயங்களில் ஒன்று. மனித சக்திக்கும் அப்பாற்பட்ட நிலை யில் கட்டப்பட்ட அந்தப் பிரமிடுகள் விந்தையானவை, பிரமிக்கத் தக்கவை என்பதெல்லாம் தெரியும்.

ஆனால் பிரமிடு கட்டிடக் கலை யில் மட்டும் அதிசயமானது அல்ல. அதனுள் பல அமானுஷ்ய சக்திகளும் இருக்கின்றன எனச் சமீப காலமாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். பிரமிடுக் குள் வைக்கப்படும் பொருள் கெடுவ தில்லை. அதன் இரண்டில் ஒரு பங்கு உயரத்தில் ஒரு சக்திமையம் இருக் கிறது. இங்கு தியானம் செய்தால் அற்புதமான அனுபவங்கள் கிடைக் கின்றன. இங்கு வைக்கப்படும் நீர் மருத்துவ சக்தியுள்ள நீராக மாறு கிறது...'இப்படி நிறைய...

பிரமிடுக்குள் சென்று வந்த நெப் போலியன் அதைப் பற்றிய தன் அனு பவத்தைச் சொல்லவே இல்லையாம். அவன் மரணத் தறுவாயில் ஒருவர் அவனிடம் கேட்டபோது, "சொன் னால் நீங்கள் நம்பவா போகிறீர்கள்?" என்று முணுமுணுத்தானாம்.

இப்படி எத்தனையோ அதிசய சக்திகளைத் தன்னுள் புதைத்து வான ளாவ நிமிர்ந்து நிற்கும் பிரமிடைப் பார்த்து வந்த தமிழ் நாட்டைச் சேர்ந்த இராம.அரங்கநாதன் அதே அளவு விகிதாசாரப்படி கோவையில் தன்னுடைய பெர்க்ஸ் கல்வி நிறுவனத்தில் கட்டியிருக்கிறார்.

"நான் ரெண்டு முறை பிரமிடு களைப் போய்ப் பார்த்து அதைப் பற்றி விரிவாகப் படித்திருக்கிறேன். இரண்டாம் உலகப் போர் சமயம் பஞ்சம் வந்தபோது, பிரமிடு வடிவில் அட்டையில் செய்து அதன் நடுவே ஒரு பிளேடை வைத்து இருநூறு முறை அந்த பிளேடைக் கொண்டு ஷேவ் செய்தார் எனப் படித்திருக் கிறேன். மேலை நாட்களில் இப்படிப் பிரமிடுகளைச் செய்து பயன்படுத்து கிறார்கள். பிரமிடு வடிவ மருத்துவ நிலையங்களில் நோய் சீக்கிரம் குணமாகிறது. சரியாகச் செய்யப்பட்ட பிரமிடின் மூன்றில் ஒரு பங்கு உய ரத்தில் ஒரு சக்திமையம் அளப்பரிய ஆற்றலுடன் குவிக்கப்பட்டு இருக்கிறது என்பது உண்மை. அட்டையில் இப்படிச் செய்யப்படும் பிரமிடினை தலையில் வைத்துக் கொண்டால் தலைவலி குணமாகிறது. பி.பி. குறை கிறது. இன்னும் நிறைய அதிசயங்கள் நடைபெறு கின்றன.

இந்த எண்ணங்களுடன் நான் கோயமுத்தூருக்கு வந்தபோது இங்கு வேத வல்லுனர்கள் சகஸ்ரசண்டி ஹோமம் செய்ய இடம் தேடினார்கள். எங்கள் பள்ளியிடம் சிறந்த இட மாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, மிக அபூர்வமான அரிய அந்த ஹோமம் இங்கு நடத்தப்பட்டது. அவர்கள் உலக மக்கள் நலன் வேண்டிச் செய்த அந்த ஹோமத்தை முடித்துக் கொண்டு திரும்பி விட்டார்கள். அந்தப் புனித இடத்தில் தியான மண்டபம் போல எழுப்ப நினைத்து முடியாமல் போய் கடைசியில் 'பிரமிடு' எழுப்பினேன்.

இப்படி ஆன்மீக சம்பந்தமாக நிறையத் தெரிந்து கொள்ள ஆரம்பித்த



போதுதான் நம் முன்னோர்கள் செய்த யாககுண்டம் அப்படியே பிரமிடைத் தலைகீழாகக் கவிழ்த்து வைத்தது போல இருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன். போபால் விஷவாயுக் கசிவில் ஒரு வீட்டில் மட்டும் பாதிக்கப்படாமல் இருந்தார்கள். அவங்கள் இரண்டு வேளையும் அக்னிஹோத்ரம் செய்து கொண்டிருந்தார்கள். இதை 'ஹிண்டு'வில் போட்டிருந்தார்கள்.

'அக்னிஹோத்ரம்' அத்தனை புனிதமானது. இன்றைக்கு மிக அதிக மாக அசுத்தப்பட்டு வரும் சுற்றுச் சூழலைக் காக்க வல்லது. அதன் ஹோம சாம்பல் எத்தனையோ மருத்துவ குணங்களைக் கொண்டது.

'அக்னிஹோத்ரம்' என்றால் ஏதோ ஒரு பெரிய யாகம் எனப் பயப்பட வேண்டாம். இரண்டு நிமிடத்தில் முடிந்து விடும். மிகச் சரியாக சூரியன் உதிக்கும், மறையும் நேரங்களில் அக்னிஹோத்ர பாத்திரத்தில் பசு வரட்டியில் பசுநெய்யை விட்டு முனை முறியாத அரிசிபோட்டு நெருப்பு வளர்த்து அதற்குரிய ஸ்தோத்தி ரத்தைச் சொல்ல வேண்டும். இதை நீங்கள் உங்கள் குழந்தைகளுக்குப் பழக்கலாம். அற்புதமான உடல் ஆரோக்கியத்தை யும், மனவளத்தையும் நீங்கள் காண் பீர்கள்'' என்கிறார் அரங்கநாதன்.

பெர்க்ஸ் பள்ளி மாணவர்கள் கொடுத்து வைத்தவர்கள். பிரமிடு, அக்னிஹோத்ரம் இரண்டையும் இணைத்து விஞ்ஞான பூர்வமாக விளக்கம் தரும் பேராசிரியர் இவர் களுக்குக் கிடைத்திருக்கிறார்.

அரங்கநாதனே பிரமிடின் அதிசய உண்மைகளைப் பற்றியும், அக்னிஹோத்ர மகிமையைப் பற்றியும் புத்தகங்கள் எழுதியிருக்கிறார். கோயமுத்தூருக்குச் செல்பவர்கள் அவசியம் இந்தப் பிரமி டினைப் பார்த்து வரவேண்டும். இந்த பிரமிடு பெர்க்ஸ் கல்வி நிறுவனம், உப்பிலிபாளையம் அஞ்சல், கோவை-641 015 என்ற இடத்தில் இருக்கிறது.

— **ஜெகதீசன்**

(நமக்குக் கோவையில் பிரமிடு இருக் கும் தகவலைத் தந்தவர் : வாசகி **சீதா ராமமூர்த்தி**)

வெளிவந்துவிட்டது!

மஞ்சுளா ரமேஷ்

எழுதிய

# 'சிறப்பாக வாழ்வோம் வாருங்கள்!'

(பள்ளி, கல்லூரி மாணவிகளுக்காகவே எழுதப்பட்ட நூல்)

● "ஒவ்வொரு மாணவியின் கையிலும் பாடப் புத்தகம் இருக்கிறதோ இல்லையோ இந்தப் புத்தகம் இருக்க வேண்டும். ஒவ்வொரு இளம் பெண்ணும் அவசியம் படிக்க வேண்டிய நூல்."

- நூல் வெளியீட்டு விழாவில் உச்சநீதிமன்ற நீதிபதி திரு. மோகன் அவர்கள்.

● "நான் இந்தப் புத்தகத்தை இரண்டு வருஷத்திற்கு முன்னாடி படிச்சிருந்தேன்னா என் வாழ்க்கை இப்படியாகி இருக்காது. காதலைப் பத்தியும், காதல் தோல்வியிலிருந்து மீள்வது பற்றியும் எவ்வளவு அருமையா எழுதியிருக்காங்க. இதிலெல்லாம் சிக்காம ஒவ்வொரு மாணவியும் சிறப்பா இருக்க இந்தப் புத்தகம் நிச்சயம் உதவும்."

- கோவையைச் சேர்ந்த ஒரு மாணவி.

- இளம் பெண்களின் உடலில் டீன் ஏஜில் ஏற்படும் மாற்றங்கள்
- இளம் பெண்களின் மாதவிலக்குப் பிரச்னைகள்
- நன்றாகப் படிப்பது எப்படி?
- சினிமா, டி. வி., காதல் எனும் மாயைகளின் உண்மைத் தோற்றம் என்ன?
- உண்மைக் காதல் என்றால் என்ன?
- தோல்வியுறும் இளம்பெண் மீண்டும் நிமிர்வது எப்படி?
- தாய்மார்கள் இளம்பெண்களைக் கையாளும் விதம் என ஒவ்வோர் அத்தியாயத்தையும் இளம்பெண்களை மனத்தில் கொண்டு எழுதியுள்ளார் ஆசிரியர்.

புத்தகத்திற்கு அணுகவும் : —

விலை ரூ. 20/- தபாலில் அனுப்ப ரூ. 25/-

மதி நிலையம்,
45, செல்லப்பிள்ளையார்கோயில் தெரு,
இராயப்பேட்டை,
சென்னை - 14.
போன் : 840265

**மேலைநாட்டுப் பாணி வீடுகளுக்கான பிளான்கள் விலை ரூ. 30.00**



முப்பது வகையான பிளான்கள் இந்நூலில் முகப்புத்தோற்றத்துடன் தரப்பட்டுள்ளன. வித்தியாசமான, விரும்பத்தக்க, அருமையான மாதிரிகள் தரப்பட்டிருப்பது இந்நூலின் சிறப்பு. இதர நூல்கள்: நீங்களும் சொந்த வீடு கட்டுவதற்குத் தேவையான செங்கல், மணல், இரும்பு, சிமெண்ட் ஆகியவை எவ்வளவு தேவை என்ற விவரங்கள். வீடு கட்டலாம் - 10.00; வீடு கட்ட பல்வேறு கடனுதவிகளைப் பெறுவது எப்படி? - 11.00; இந்தியக் கட்டிட விதிகளும், தரக்கட்டுப்பாடும் - 12.00; பாதுகாப்பாக வீடு கட்டுவது எப்படி? - 9.00; கட்டிட விரிசல்களைச் சரி செய்வது எப்படி? - 15.00; உங்கள் வீடுகளில் நீர்க் கசிவுகளை நிறுத்துவது எப்படி? - 13.00; சிறந்த முறையில் குடிநீர்-கழிவு நீர் குழாய்களை அமைப்பது எப்படி? - 14.00; ஃப்ளாட் (Flat) உரிமையாளர்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டிய உண்மைகள் - 13.00; 110 வகையான காம்பவுண்ட் சுவர் மாதிரிகள் - 23.00; வீடுகட்டுவதற்குத் தேவையான தரமான பொருள்களைத் தேர்ந்தெடுப்பது எப்படி? - 12.00; 30 வகையான ஓட்டு வீடுகளுக்கான மாதிரிகள் பாகம் - 1 - 24.00; பாகம் - 2 - 30.00; குறைந்த பட்ஜெட் வீடுகளுக்கான சிறந்த பிளான்கள் - பாகம் 1 24.00; பாகம் 2 30.00; பாகம் 3 30.00; நடுத்தர பட்ஜெட் வீடுகளுக்கான நல்ல பிளான்கள் - பாகம் 1 25.00; பாகம் 2 30.00; பாகம் 3 30.00; பெரிய பட்ஜெட் வீடுகளுக்கான பிளான்கள், பாகம் 1 30.00; பாகம் 2 30.00; பல்வேறு ஷெட்டுகளுக்கான பிளான்கள் - 24.00; வாடகை லைன் வீடுகளுக்கான பிளான்கள் - 24.00; கடைகளுக்கான பிளான்கள் - 24.00; பல்வேறு தண்ணீர்த் தொட்டிகளுக்கான பிளான்கள் - 24.00; மருத்துவமனை, திருமண மண்டபம், உணவு விடுதிகளுக்கான பிளான்கள் - 25.00; பல்வேறு ஃப்ளாட் (Flat) வீடுகளுக்கான பிளான்கள் - 30.00; சாஸ்திரப்படி வீடு கட்டுவது எப்படி? - 18.00; வீட்டை சாஸ்திரப்படி திருத்தி அமைப்பது எப்படி? - 11.00; உங்கள் லக்னமும், சாஸ்திரப்படி வீடு கட்டுதலும் - 18.00; உங்கள் நட்சத்திரப்படி அதிர்ஷ்டம் தரும் மனைகளும், வீடுகளும் - 18.00; வீடுகளுக்கு ஜன்னல், கிரில், வாயிற்கதவு மாதிரிகள் - பாகம் 1 15.00; பாகம் 2 15.00; நூறு நவீன இரும்பு வாயிற் கதவுகள் - 13.00; நவீன ஜன்னல், கிரில் வாயிற்கதவு மாதிரிகள் - 20.00; சிமெண்ட் ஜாலிக்களுக்கான 170 மாதிரிகள் - 20.00.

**எய்ட்ஸ் நோயும் பாதுகாப்பு முறைகளும்: ரூ. 15.50**

உலக மக்களைப் பயமுறுத்தி வரும் இந்த வியாதியைப் பற்றி அறிந்துகொள்வது அவசியம். இந்நூலாசிரியர் திரு. கே. சந்தான கிருஷ்ணன் பி.எஸ்ஸி., எம்.ஏ., மிக எளிமையாக அனைவரும் புரிந்து கொள்ளும்படியாக எழுதியிருக்கிறார். ஊசி மூலமும் பரவக்கூடிய நோய் இது என்பதால் அலட்சியம் வேண்டாம். இதர நூல்கள் : இளம் பிள்ளை வாதம் - 9.00; கண் நோய்கள் - 5.00; பிளட் பிரஷர் - 12.00; காச நோய் டி.பி. - 12.00; தோல் தொல்லைகள் - 9.00; பல் நோய்கள் - 15.50; ஹார்ட் அட்டாக் - 12.00; மூல நோயும் சிகிச்சை முறையும் - 17.00; மலச்சிக்கலும் தீர்க்கும் வழிமுறைகளும் - 8.00; கண்ணாடியின்றிச் சிறந்த கண் பார்வை பெறுங்கள் - 11.00; பல்வேறு தலை வலிகளும் போக்கும் முறைகளும் 6.00; மூட்டுவாத நோய்கள் - 18.00; வயிற்றுக் கோளாறுகள் - 9.00; நீரிழிவு - டயாபடீஸ் - 13.00; ஆஸ்துமா - 8.50; ஜலதோஷமா? - 5.00; புற்று நோய் - 6.50; நரம்புக் கோளாறுகள் - 11.50; உடல் நலக் குறிப்புகள் - 11.00; காது, மூக்கு, தொண்டை வைத்தியம் - 25.00; நல்ல தூக்கம் இல்லையா? - 16.00; எப்பொழுதும் களைப்பாய் இருக்கிறதா? - 7.50; உங்கள் உடலைப் பற்றித் தெரிந்து கொள்ளுங்கள் - 18.50; மருந்து மாத்திரைகளால் ஆபத்து! - 5.00; வைத்தியச் செலவைக் குறைக்க வழிகள் - 7.50; ஆரோக்கியமும் ஆயுள் விருத்தியும் - 9.50; 100, ஆண்டுகள் வாழ்வது எப்படி? - 6.50; மாமிசம் சாப்பிடலாமா? - 6.25; டாக்டரிடம் நீங்கள் கேட்க விரும்பும் கேள்விகளும் அவற்றிற்கான பதில்களும், 14.00; மருத்துவம் தோன்றிய கதை - 13.00; இயற்கை வைத்தியம் - 45.00; நாட்டு வைத்தியம் - 22.00; தமிழ் மூலிகை அகராதி - 24.00; சித்தர்களின் மூலிகை வைத்தியம் - 25.00; ஹோமியோபதி முறையில் குடும்ப வைத்தியம் - 35.00.

மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை விபிபியில் பெறக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் புத்தகங்களை உங்களிடம் தரும்போது பணம் செலுத்தினால் போதும். (தபால் செலவு தனி). சென்னையில் இருப்பவர்கள் நேரில் வந்து வாங்கிக் கொள்வது சிக்கனம். ஷோரூம் விற்பனை நேரம்: காலை 9 மணி முதல் மாலை 6 மணி வரை : ஞாயிறு விடுமுறை. கடிதம் எழுத வேண்டிய முகவரி :



**மணிமேகலைப் பிரசுரம்**



**தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை,**
**தியாகராய நகர், சென்னை - 600 017.**
**தொலைபேசி : 442926, தொலைநகல் : 044-446082**

சுமங்கலா ஸ்தோத்திரம்

ஸ்ரீசூக்தம், துர்கா சூக்தம் போன்ற ஸ்தோத்திரங்கள் ஹோம விதானங்களுடன். விளக்குபவர்கள் - கே. என். சரஸ்வதி, பால. அர்த்தநாரீஸ்வரர்.

விலை ரூ. 12.00

(கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேச அய்யர் தெரு, தி. நகர், சென்னை - 17)

கீதாஞ்சலி

நோபல் பரிசு பெற்ற ரவீந்திரநாத் தாகூரின் கவிதையை தமிழில் வழங்குபவர் மனோஜ். அழகிய தமிழில் மொழிபெயர்ப்பு.

விலை ரூ. 15.00

(கற்பகம் புத்தகாலயம், 18, ராஜா பாதர் தெரு, தி. நகர், சென்னை - 17.)

ஐஸ்கிரீம் பேக்கரி வகைகள் தயாரிப்பு முறை

கிளிட்டோஸ்ட், பட்டர் நான் போன்ற 65 வகைகள். ஆசிரியர் - தங்கமணி.

விலை ரூ. 20.00

ருசிமிகு இனிப்பு காரம்

தட்டை, ஓமப்பொடி, பனீர் பால்ஸ் என நாற்பது வகைகள். ஆசிரியர் : ஸ்ரீமதி உமா.

விலை ரூ. 22.00

(இரண்டும் - சங்கீத வாணி, 91, வி.எம். தெரு, மயிலாப்பூர், சென்னை - 4.)

நன்றி

செருவை நாகராசன் எழுதிய சிறுகதைத் தொகுப்பு.

விலை ரூ. 14.00

(தேவகி பதிப்பகம், 1151, ராசகோபாலபுரம் வீட்டு வசதி வாரியம், புதுக்கோட்டை - 622 003)

சோகத்தைக் கொன்று விடு

ஸ்ரீப்ரியாவின் சிறுகதைத் தொகுப்பு. இன்றைய சமூக நிலைமைகளைப் பல கோணங்களில் படம் பிடிக்கிறார் ஆசிரியர்.

விலை ரூ. 25.00

(தேவகி பதிப்பகம், புதுக்கோட்டை.)

ஸங்கடஹர சதுர்த்தி உபாசனை

ஸ்ரீதுர்க்கைச் சித்தர் சதுர்த்தியின் மகிமைகளைச் சொல்லி ஸ்தோத்திரம் பூஜையும் தந்திருக்கிறார்.

விலை ரூ. 6.00

(பைலட் பப்ளிகேஷன்ஸ், 309, லிங்கி செட்டித் தெரு, சென்னை - 1.)

ஜே. கே.

சுஜாதாவின் வழக்கமான விறுவிறுப்பான துப்பறியும் நாவல்.

விலை 22.00

(குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி. நாகப்பட்டினம் - 611 001.)

துளசி மருத்துவம் - 100

பல்வேறு நோய்களுக்கு சித்தவைத்திய முறையில் துளசிச் செடியின் மூலம் மருந்து சொல்பவர் பி. என். ஆச்சார்யா.

விலை ரூ. 12.00

500 அழகுக் குறிப்புகள்

தொகுப்பு : ஆர். ரேணுகா.

விலை ரூ. 20.00

மகளிர் நலமும் குடும்பக் கட்டுப்பாடு முறைகளும்

பிரசவம், கணவன்-மனைவி உறவு, குடும்பக் கட்டுப்பாடு எனப் பல செய்திகளைக் கூறுகிறார் எம். ஜனார்த்தனன்.

விலை ரூ. 14.00

(மூன்றும் - நர்மதா பதிப்பகம், 16/7 ராஜபாதர் தெரு, பாண்டிபஜார், சென்னை - 600 017.)

இந்திய பறவைச் சரணாலயங்கள்

சரணாலயங்கள் இருக்கும் இடங்கள் தவிர பறவைகள் ஏன் அவ்வாறு செல்கின்றன எனப் பல அரிய தகவல்கள் தரப்பட்டுள்ளன. ஆக்கியோர் - மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு.

விலை ரூ. 12.00

கௌசிக ஜோதிட சிந்தாமணி

ஆசிரியர் - விட்டலபுரம் ராஜன்.

விலை ரூ. 17.00

(இரண்டும் - மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 600 017.)

வாழும்போதே ஒரு வரலாறு

மூத்த எழுத்தாளர்களில் ஒருவரான கலைமாமணி விக்ரமனின் வாழ்க்கைச் சரித்திரம். ஆசிரியர் பின்னலூர் மு. விவேகானந்தன்.

விலை ரூ. 34.00

(மகாகவி பதிப்பகம், 2, ஜயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.)

உயர்வு உன்னிடமே!

விலை ரூ. 18.00



**நல்ல எண்ணம் நன்மையைத் தரும்**

விலை ரூ. 16.00

**மென்மையான பேச்சு மேன்மை தரும்**

விலை ரூ. 14.00

மூன்று நூல்களுக்கும் ஆசிரியர் மெர்வின். மனிதன் வாழ்க்கையில் முன்னேற யோசனைகளைக் கூறி வரும் மெர்வின் இந் நூல்களிலும் மனோதத்துவரீதியாக வெற்றிகரமாக வாழ யோசனைகளைக் கூறுகிறார்.

(குமரன் பதிப்பகம், 2, முத்துகிருஷ்ணன் தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

**இயர்புக்**

தினமலர், இயர்புக் 1994 எனும் மாபெரும் நூலைத் தந்துள்ளது. உலகளாவிய முக்கிய நிகழ்ச்சிகள், அரசியல் பொருளாதார சமூக மாறுபாடுகள் என நிறைய நிறைய செய்திகள். ஆசிரியர் - இரா. கிருஷ்ணமூர்த்தி.

விலை ரூ. 45.00

(தினமலர், அண்ணாசாலை, சென்னை - 600 002.)

**அற்புத தரிசனம்**

பரமாச்சாரியாரைப் பற்றிய 100 பேரின் அனுபவத் தொகுப்பு. தொகுத்தவர் பானுமதி இராமச்சந்திரன்.

விலை ரூ. 12.00

(வி. ஆர்.பி. பப்ளிகேஷன்ஸ், 22/1, வாசுதேவபுரம், திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.)

**வள்ளுவர் கண்ட அறிவியல்**

ஆசிரியர் : க. முத்து. ஆய்வுக் கட்டுரைகள்.

விலை ரூ. 15.00

**பறவைகள் பறக்கின்றன**

மென்மையான பெண்மையின் உணர்வுகளை வெளிப்படுத்தும் நாவல்.

ஆசிரியர் : வாஸந்தி

விலை ரூ. 22.00

**பெண்ணால் முடியும்**

தலைப்பே நாவலின் கருவைச் சொல்கிறது. பெண்ணுக்குத் தன்னம்பிக்கை தர எழுதியவர் பி. சி. கணேசன்.

விலை ரூ. 32.00

(மூன்றும் வானதி, கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

**தலைவாழை**

தலைவாழை இலையிட்டு விருந்து வைத்தது போல பல மூத்த எழுத்தாளர்களின் சிறுகதைத் தொகுப்பு. கே.சி.எஸ். அருணாசலம், அசோகமித்திரன், மீ.ப. சோமு என பெரும் எழுத்தாளர்களுடையது.

தொகுப்பாசிரியர் - இ. எஸ். தேவசிகாமணி.

விலை ரூ. 110.00

(அன்னம் (பி) லிட்., 2, சிவன் கோவில் தெற்குத் தெரு, சிவகங்கை.)

## சில பொன்னான நேரம்... வாழ்க்கையில் என்றென்றும் ஆனந்தம் !

நேரம் வரக் காத்திருந்து,
புதிய வாழ்க்கையைத் துவங்கும் தருணம்...
ஆப்கோ மங்களகரமாய் முழுமைபெறச் செய்கிறது.

போசம்பள்ளி, தர்மாவரம், கட்வால்,
வெங்கடகிரி, நாராயண்பேட்,
கோதகோட்டா ஆகிய
இடங்களிலிருந்து புடவைகள்...
ஒவ்வொன்றும் தனிச்சிறப்பு
வாய்ந்தவை.

உங்களுக்கு விருப்பமான புடவை ரகத்தை எங்களுக்கு எழுதுங்கள். உங்கள் பெருநகரிலுள்ள ஆப்கோ ஷோரூமில் உங்கள் விருப்பத்தேர்வுக்கு ஏற்ப பல ரகங்களை 10 நாட்களுக்குள் காண்பிப்போம் நிச்சயமாக.

**apco**

**மனம் நிறைந்த**
**வாழ்க்கைத் தேர்வு**

செக்ரெட்டரி
மேனேஜிங் டைரக்டர்
**தி ஆந்திர பிரதேஷ் ஸ்டேட்**
**ஹேண்ட்லூம் வீவர்ஸ்**
கோ-ஆப்பரேடிவ்
சொசைட்டி லிமிடெட்,
3-5-770, வீவர்ஸ்
பவன் நாராயண்குடா,
ஹைத்ராபாத்-500 029

## 20%
தள்ளுபடி
திருமண
சீஸனுக்கு

ஆப்கோ ஷோரூம்கள் : **சென்னை :** ■ உஸ்மான் ரோடு, தி. நகர் ■ பாண்டி பஸார், தி.நகர் ■ உம்முடியார்ஸ் ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், எண் : 881, அண்ணா சாலை ■ தாராபூர் டவர்ஸ், 826 அண்ணாசாலை, 1-ம் மாடி ■ 317, ராஜா தெரு, **கோவை** கார்ப்பொரேஷன் ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், துல்லக்குளம் 5% **மதுரை**.

LIVEWIRES/APCO/1294 M

# தலைசிறந்த பிரில்® தயாரிப்புகள் !

• இங்க் (INK) • கம் (GUM)
• பேஸ்ட் (PASTE)
• ஜியாமெட்டரி பாக்ஸ் (GEOMETRY BOX)
• கலர் கிரேயான்கள் (COLOUR CRAYONS)
• பால் பென்கள் (BALL PENS) • ரீ-பில்கள் (REFILLS)
• பென்கள் (PENS) • பென்சில் ஷார்ப்பெனர் (PENCIL SHARPENER)
• கலர் ஸ்கெட்ச் பென்கள் (COLOUR SKETCH PENS)



**இண்டஸ்டிரியல்**
**ரிஸர்ச்**
**கார்ப்பொரேஷன்**

பெங்களூர்-560 055
போன்: 3341567
சென்னை-600 041
போன்: 411166

ADWAVE/IRC/4727/TAM

# பெண்டிர் மனது வைத்தால்

நம் திருமணங்களில் பெண்டிர் மனது வைத்தால், சில பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்து, இல்லங்களில் மகிழ்ச்சி நிலவச் செய்யலாமோ எனத் தோன்றுகிறது.

பிள்ளையைப் பெற்றவர்கள் செய்யக்கூடிய சில காரியங்கள் :

வரதக்ஷிணை, சீர் செனத்தி என்று எதையுமே பெண் வீட்டாரிடம் கேட்காமல் இருத்தல் முதல் விஷயமாகும். வைரத் தோடு மட்டும் போட்டு விடுங்கள் என்று சிலர் கேட்கிறார்கள்! (ஏதோ ரொம்பச் சின்ன விஷயம் மாதிரி!)

"எங்கள் பெண்ணுக்கே அதில் விருப்பமில்லையே" என்றால், "மற்ற மருமகள்கள் போட்டுக் கொண்டிருக்கும் போது, இவளுக்கு மட்டும் இல்லாவிட்டால் எப்படி?" என்று ஒரு கேள்வி.

"உங்கள் பெண்தானே அனுபவிக்கப் போகிறாள்" என்றெல்லாம் சப்பைக் கட்டுகள்.

இந்த மாதிரி போலி கௌரவங்களுக்கு முக்யத்வம் தர வேண்டாமே? உடம்பில் போட்டுக் கொண்டாலும் சரி, பீரோவில் வைத்துப் பூட்டினாலும் சரி பத்திரமில்லை என்னும் போது, அப்படி கசக்கிப் பிழிந்தாவது அந்த நகையை வாங்குவானேன்? ஆலோசியுங்களேன், ப்ளீஸ்!

பிள்ளைக்குப் பெண்ணைத் தேர்ந்தெடுக்கும் போது, அவனுடைய ருசிக்கேற்ற பெண்ணைத் தேர்ந்தெடுப்பதில் உதவியாக மட்டும் இருங்கள். உங்கள் அபிப்ராயத்தை அவனிடம் திணிக்க வேண்டாம். பிள்ளைக்கு அந்த அளவு கூட சமர்த்து இல்லாவிட்டால் மட்டும் அந்த




உரிமையை எடுத்துக் கொள்ளலாம். நாம் நம் பிள்ளைக்குப் பொருத்தமில்லை என்று நினைக்கக்கூடிய பெண், அவன் மனஸுக்குப் பிடிக்கலாம்; அழகிலோ நிறத்திலோ, படிப்பிலோ, குறைவாக, கூடுதலாக இருந்தாலும் கூட!

கல்யாணத்தில் ஆடம்பரச் செலவுகளைக் குறைப்பதில் பெண் வீட்டாருக்கும் உதவ வேண்டும். சின்னச் சின்ன விஷயங்களிலெல்லாம் குற்றம் கண்டுபிடிக்கும் மனப்பான்மையை அறவே விட்டு, திறந்த மனத்தோடு பிரச்னைகளை அலச வேண்டும். எந்த ஒரு விஷயத்தையும் இப்படிச் செய்ய வேண்டும் என்று அவர்களிடம் எதிர்பார்க்கும் போது, அது அவசியம்தானா என்று ஒரு முறைக்கு இருமுறை ஆலோசிக்கவும். உதாரணமாக கல்யாணச் சத்திரம் பெரியதாக இல்லை, வசதியாக இல்லை என்றெல்லாம் குறைகூறுவதை விட, சத்திரம் தேடித் தருவதில் தாங்களும் உதவலாம். அதே சமயத்தில், அனாவசியமாக அதிக வாடகை கொடுக்கும்படியும் இருக்கக் கூடாது. மூன்று நாள் கல்யாணம், சாப்பாடு இவையெல்லாம் அவசியமில்லாத விஷயங்கள். இரண்டே வேளை போதும். முதல் நாள் மாலை நிச்சயதார்த்தமும் வேண்டுமானால் நண்பர்களுக்கு வரவேற்பும், திருமணத்தன்று காலைச் சாப்பாடும் போதும். ஒருவேளை தாமதித்த முகூர்த்தமாயிருந்தால் டிபன் வைத்துக் கொள்ளலாம். முதல் இரவுக்கு யாருமே கூட்டம் கூட வேண்டிய தேவையில்லை. பேசாமல் பிள்ளை, பெண்ணை ஒரு ஹோட்டல் ரூமுக்கோ, தன் வீட்டுக்கோ அனுப்பி விடலாம். பிற்பகலில் சத்திரத்தைக் காலி செய்து விடலாம். வெளியூராக இருந்தால் மட்டும் கட்டுச் சாதம் கட்டித் தந்தால் போதும்.

இன்னொரு யோசனை : பிள்ளை வீட்டுக்காரர்கள் வந்து இறங்கியதும் ஏதோ வேறு ஒரு கிரகத்திலிருந்து மனிதர்கள் வந்து இறங்கியதாக பெண் வீட்டார் பயந்து நடுங்க வேண்டியதில்லை. அவர்களும் ஆகாசத்திலிருந்து குதித்ததாக நினைத்துக் கொண்டு ஆட்டி

வைக்க வேண்டாம்.

சகஜ பாவத்தை ஏற்படுத்த ஒரு சின்ன அறிமுகப் படலத்தை வைத்துக் கொள்ளலாமே. (முன்னெல்லாம் பெண்ணை நமஸ்காரம் செய்யச் சொல்லும் வழக்கம் இருந்தது!) வந்தவர்களை அமரச் சொல்லி, சிரமபரிகாரம் செய்து கொண்ட பின் காப்பி, டிபன் கொடுத்து உபசரிக்கும் போதே, இரு வீட்டாரும் எதிரும், புதிருமாக அமர்ந்து, இன்னின்னார் என்று அறிமுகப்படுத்தலாம். இன்னார், இன்ன உறவு, படிப்பு, வேலை பற்றி எல்லாம் ஒருவர் சொல்லி வரும் போது, மற்றவர்கள் அப்படியா, வெரி குட், சந்தோஷம் போன்ற வார்த்தைகளை தாராளமாக மனதார, சந்தோஷத்தோடு, மலர்ந்த முகத்தோடு சொல்லலாம்.

அதை விட்டு, "யார் அந்தச் சிவப்பு நெக்லெஸ் மாமியா, அவதான் மாமியார் போலிருக்கு, அந்த நீலப் புடவைக்காரியைப் பார்த்தியோ, மூஞ்சியிலே எள்ளும், கொள்ளும் வெடிக்கிறதே, அவதான் நாத்தனார் போலிருக்குன்னு" அனாவசிய விமர்சனங்கள் வேண்டாம். இனிய சொல்லாலும், இனிய முகத்தாலும் சாதிக்க முடியாதது எதுவுமில்லை.

ஒப்பிட்டுப் பார்த்துப் பொறாமைப்படு வதையும், குறைகூறுவதையும் அறவே தவிர்க்க வேண்டும். என் பெண்ணுக்கு அத்தனை செய்தேன் என்பன போன்ற விமர்சனங்கள் தேவையேயில்லை. தங்களுக்கு வசதி இருந்திருக்கலாம். இல்லாவிட்டால் 4 கைகளால் சம்பாதிக்கக்கூடிய உத்யோகத்தில் இருந்திருக்கலாம்! எப்படியானாலும் விலைவாசி எக்கச்சக்கமாக ஏறி வரும் இந்தக் காலத்தில் பெண்ணும் வேலை பார்த்தால் தேவலை என்று எதிர்பார்ப்பதில் தவறில்லை. (அதற்குத் தகுந்தபடி வீட்டில் வேலைகளைக் குறைத்துக் கொள்ள வசதி செய்து தர வேண்டும்.)

கல்யாணத்தில் சில விஷயங்கள் - பெண்ணுக்குப் புடைவை உடுத்துவது தலை பின்னுவது போன்ற விஷயங்களில் பிள்ளை வீட்டார் தலையிடாமல் இருந்தால், நாகரீகத்துக்கு உகந்ததாக இருக்குமல்லவா? அதை விட்டு, நாத்தனார்தான் உடுத்த வேண்டும். அத்தைக்குத்தான் தெரியும், பாட்டிக்குத்தான் தெரியும் என்றெல்லாம் சொல்லிக் கொண்டு, 10 பேர் அந்த அறைக்குள் நுழைவது அவ்வளவாக வரவேற்கப்படாத செயல்தானே?

ஒவ்வொரு கட்டத்திற்கும், ஒவ்வொரு வேளைச் சாப்பாட்டுக்கும் வருந்தி அழைக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதும் தேவையில்லை. கூடியவரை குற்றம் சொல்லாமல் இருப்பதுடன், நன்றாக இருப்பதை மனதாரப் பாராட்டத் தெரிந்து கொள்ளுங்கள். அனாவசியமாக முகத்தைக் கடுத்துக் கொண்டு, பெண்ணைப் பிரியப் போகும் வருத்தம் போதாமல் எப்படி வைத்துக் கொள்வார்களோ என்ற கவலையையும் தராதீர்கள். நீங்களும் மகிழ்ந்து, மற்றவரையும் மகிழச் செய்யலாமே?

- லக்ஷ்மி தேவநாதன்

---

**ஒரு சகோதரி எலுமிச்சை தோலின் உபயோகத்தைப் பற்றி எழுதியிருந்தார். இதே போல் கமலா ஆரஞ்சுத் தோலை வெங்காயம் நறுக்குவதைப் போல் சிறு துண்டுகளாக்கி இரண்டு மூன்று நாட்கள் வெயிலில் காய வைக்கவும். சிறிய மிக்ஸியில் போட்டால் நன்கு மாவாகி விடும். பாட்டிலில் சேர்த்து வைத்துத் தினம் உடம்புக்குத் தேய்த்துக் குளித்தால் வெயில் சரும நோய்கள் வராது. தேய்த்து தலைக்குக் குளித்தால் முடி பளபளப் பாகும். வற்றல் குழம்பு செய்யும் போது சிறிது சேர்த்தால் சுவையான ஆரஞ்சு குழம்பு ரெடி. பாலுடன் சேர்த்து முகத்தில் போட்டால் ஆரஞ்சு ஃபேஸ்பேக் ரெடி.**

**- நிரஞ்சனாபட்டாபிராமன்.**



பல தேசப்
பெருமைகளை
முகத்திலே பிரதிபலிக்கும்
பேரெழில் பெண்மணி

குட்டிகூராவின் மூன்று இண்டர்நேஷனல் பியூட்டி டால்க்குகள். உலகின் சிறந்த நறுமணங்கள் நிரம்பியவை. பட்டுப்போன்று மென்மை யானவை. உங்கள் முகத்திற்குப் பேரெழில் சேர்ப்பவை. பல தேசங் களின் பெருமைகளின் சிறப்பை உங்கள் முகத்தில் பிரதிபலிக்கச் செய்பவை.




**Cuticura**
*International*
BEAUTY TALCS



# டெபாசிட் தொகையைத் தடங்கல் இல்லாமல் திருப்பித் தரக்கூடிய

உங்கள் பணத்தை ஒரு நிதி நிறுவனத்தில் டெபாசிட் செய்யும் போது நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? அதன்மூலம் ஒரு நிலையான வருமானத்தைப் பெற வேண்டும்; பொருளாதார மாற்றங்கள் அந்த வருமானத்தைப் பாதிக்கக் கூடாது... என்பதுதானே! அந்த வகையில், நீங்கள் டெபாசிட் செய்ய மிகவும் ஏற்ற நிறுவனம் ஸ்ரீராம்தான். காரணம்—

ஸ்ரீராம் லாரிகளுக்கு நிதியுதவி அளிக்கும் பாதுகாப்பான வழிமுறையில் ஈடுபட்டுள்ளது. தவிர, லாரிகளைத் தயாரிக்கும் டெல்கோ, அசோக் லேலண்ட் நிறுவனங்களும் ஸ்ரீராம் நிறுவனங்களில் முதலீடு செய்துள்ளன. லாரிப் போக்குவரத்து ரொக்க அடிப்படையில் நடைபெறும் தொழில். உரிமையாளருக்கு ஒவ்வொரு நிமிடமும் வருமானத்தை ஈட்டிக் கொடுக்கும் சாதனமாக லாரி விளங்குகிறது. எனவே, லாரி உரிமையாளரால் தவணைத் தொகைகளை ஒழுங்காகச் செலுத்திவிட முடிகிறது. அப்படி அவரால் செலுத்த முடியவில்லையா? அந்த லாரியைக் கையகப்படுத்தி விற்பனை செய்து கடனை எளிதில் வசூலித்து விட முடியும்.

**இதர நிதி நிறுவனங்கள் ஈடுபட்டிருக்கும் வீடுகள் அல்லது நகைகளின் மீது கடனுதவி அளிக்கும் தொழிலை விட இது எவ்வாறு உயர்வானது?**

எந்தவிதமான வருமானத்தையும் பெறாத சொத்துகளின் மீது சில நிதி நிறுவனங்கள் தங்கள் முதலீட்டை முடக்கிவிடுகின்றன. கடன் பெறுகிறவர் திருப்பித் தருவதைப் பொறுத்தே இந்நிறுவனங்களின் நிதிவளம் அமைகிறது. வீடுகளின் மீது கடன் வழங்கும்போது, அந்தச் சொத்தைக் கையகப்படுத்தி உடனடியாக விற்பனை செய்வதும்

**ப ண த் தி ன் அ ரு மை கெ ரி ந் த வ ர் க ள் நா ங் க ள். அ தை வி ட,**

# என் நம்பிக்கைக்குரிய நிதி நிறுவனம்...

## நிதிவளம் எந்த நிறுவனத்தில் இருக்கிறதோ, அதுவே.

எளிதல்ல. நிதிவளம் என்று பார்க்கும்போது, எப்போதும் வருமானத்தை ஈட்டிக்கொண்டிருக்கும் லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பது உயர்வானது.

**ஸ்ரீராம் — லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பதில் முன்னணி நிறுவனம்**

ஸ்ரீராமின் பின்பலமாக இருப்பவை — ரூ.500 கோடி மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்கள். ரூ.170 கோடிக்கும் கூடுதலாகவுள்ள வலுவான டெபாசிட் ஆதாரம். உங்களுக்கு மிகச் சிறந்த சேவையை அளிப்பதற்கு வசதியாக நாடு முழுவதும் 65 அலுவலகங்கள். உங்களுடைய தேவைகளையும் அக்கறைகளையும் புரிந்து கொண்டு அவற்றை உண்மையான ஈடுபாட்டுடன் நிறைவேற்றும் ஸ்ரீராமின் பண்பாடு.

இன்று 1,50,000 டெபாசிட்தாரர்கள் ஸ்ரீராமைத் தங்கள் சொந்த நிதி நிறுவனமாக நம்புகிறார்கள். அது உங்களுடையதாகவும் இருக்க வேண்டாமா?




ஸ்ரீராம் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட்
ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிமிடெட்
ஸ்ரீராம் சிடி யூனியன் ஃபைனான்ஸ் லிமிடெட்

இப்போது டெல்கோ, அசோக் லேலண்ட், சிடி யூனியன் வங்கி ஆகிய நிறுவனங்களின் சக்விடி பங்கேற்புடன்.

நிர்வாக அலுவலகம்: மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 4 லேடி தேசிகா ரோடு, மயிலாப்பூர், சென்னை 600 004. போன்: 4991363, 4990960, 4993968.

டெபாசிட்டுகள்
திரட்டும்
கேம்பெய்ன்
இப்போது

உங்கள் அக்கறைகளையும் உணர்ந்தவர்கள்.

# நரகம் வாழ்க்கை

"டம்" பீரோவை அழுத்தி சாத்தும் ஓசை கேட்டது.

"என்ன சட்டை துவச்சிருக்கே நீ? ஒரே அழுக்கு."

"ஆமாம் எப்படித் துவைச்சாலும் இதே கதைதான். எனக்கு மட்டும் என்ன தலையெழுத்தா? உங்களுக்கு துவைச்சிப் போட்டும் திட்டு வாங்கணும்னு" - சூடாக இட்லியை தட்டில் எடுத்து வைத்துக் கொண்டே அவர் கேட்டதற்குப் பதிலடி கொடுத்துக் கொண்டிருந்தேன்.

"ம் சீக்கிரம் வை" - என்று கோபமாக டைனிங் டேபிள் முன்பு அமர்ந்து ஒரு இட்லியை விண்டு வாயில் வைத்தவர்,

"அப்பப்பா... ஷ்... என்ன சூடு இட்லி வைத்தானாம் இட்லி" என்று கத்தியபடி சாப்பிடாமல் கூட எழுந்து கொண்டார்.

"சூடாக வைத்தால், சுடச்சுட இட்லியா? என்பீங்க. சரி, கொஞ்சம் சீக்கிரம் எடுத்து ஆற வைத்தால், ஆறிப் போனதை எவன் தின்பான் என்பீங்க, சே.. டெய்லி உங்களோட இதே ரோதனையா போச்சு. நானும் தினம், தினம் இதே பேச்சு... வாங்கிட்டே தான் இருக்கணும் என் தலையெழுத்து."

"என்னடி கத்தறே பல்ல உடைப்பேன்" - கோபக் கண்களுடன் கிட்டே வந்தார்.

"அப்படித்தான் கத்துவேன். நான் ஒன்றும் உங்களுக்கு எதிலும் குறைஞ்சவள் இல்லை. நானும் படிச்சவதான். நல்ல குடும்பத்திலிருந்து வந்தவதான். ஞாபகம் வைச்சிக்குங்க. உங்களுக்கு வேலைகாரியில்லே" என்றபடி சமையலறையில் புகுந்து கொண்டேன்.



சிறிது நேரம் கழித்து வெளியே வந்து பார்த்த பொழுது அவர் ஆபீஸ் போய் விட்டிருந்தார்.

"சொல்லிக் கொள்ளாமல் கூடப் போகிறார். சே... எதைச் செய்தாலும், குற்றம், குறை என்ன வாழ்க்கை... இவரைக் கல்யாணம் செய்துகிட்டு என் வாழ்க்கையே வீணாகிடுச்சே" - தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது.

"அம்...மா" - மூன்று வயது தீபு.

"பசிக்குது பால்..." - என்று நீட்டி முழங்கியபடி வந்தது.

"ஏண்டா கத்தறே" - என்றபடி டம்ளரில் கலந்து வைத்திருந்த பாலை நீட்டினேன்.

"டமார்" - பால் தரையில் ஓடியது.

"பட் பட் பட்"

"அம்மா வலிக்குதும்மா"

"எட்டு மணி வரைக்கும் தூங்கிட்டு பாலையா கொட்டறே."

அவர் மீது இருந்த ஆத்திரம் முழுவதும் தீபுவின் முதுகிற்கு இடம் மாறியது.

தீபு அழுது கொண்டே ஓடியது.

தரையைச் சுத்தம் செய்ய உள்ளே சென்றேன். விசும்பல் கேட்டுக் கொண்டிருந்தது.

சாப்பிட மனம் வரவில்லை. படுக்கையறையில் வந்து பார்த்த பொழுது தீபு அழுது கொண்டே தூங்கி விட்டிருப்பது தெரிந்தது.

"என்ன பிள்ளை... அப்படியே அப்பாவைப் போல!" என்று எண்ணியபடி சோபாவில் கண்மூடி சாய்ந்திருந்தேன் - தலையை வலித்தது.

"ட்ரிங்" - காலிங்பெல் ஓசை.

எழுந்து சென்று கதவைத் திறந்தேன்.

"அட தேவியா... வா" - என்றேன் சுரத்தில்லாதபடி.

தேவி என்னுடைய தங்கை. என்னை விட ஏழு வயது சிறியவள் மூன்றாமாண்டு பி.எஸ். மாணவி.

"என்ன காலையிலே" - என்றேன்.

"வழக்கம் போல காலேஜ் ஸ்டிரைக் - சரின்னிட்டு வந்துட்டேன்" - என்றபடி சோபாவில் அமர்ந்தாள்.

"என்னக்கா"

"என்ன?"

"காப்பியிலே சர்க்கரையேயில்ல உனக்குத் தெரியலையா? குடிக்கறே?"

"என்ன ஆச்சு? ஏன் ஒரு மாதிரியிருக்கே? தீபு எங்கே?" என்று கேள்விகளை அடுக்கினாள்.

"தீபு உள்ளே தூங்கறான், நல்லா நாலு வைச்சேன். பாலையெல்லாம் கொட்டிட்டுது."

"அதற்கு ஏன் குழந்தையை அடிச்சே" - கடிந்து கொண்டாள்.

"காலையிலிருந்து மனசே சரியில்லை, என்ன செய்யறது என் வாழ்க்கையே போச்சு... எதை செய்தாலும் குறை... சொல்றாரு... என் தலையெழுத்து... நான் அவருக்கு எதில் குறைந்தவள்? வேலைக்காரியா என்ன? எவ்வளவு எதிர்பார்த்து கல்யாணம் செய்துகிட்டேன் அவரை" - காலையில் நடந்தது முழுவதும் சொன்னேன். மனதிலிருந்த பாரமனைத்தும் இறங்கியது போலிருந்தது.

நான் சொன்னது முழுவதும் கேட்டுக் கொண்டிருந்தவள் சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு,

"அக்கா நான் உன்னைவிட வயசில சின்னவதான்... ஆனா... சில விஷயங்கள் சொல்ல நினைக்கிறேன். நீ தப்பா எடுத்துக்கக் கூடாது.

அத்தான் இங்கிருந்து 30 கி.மீ. பஸ்ஸில போய் அங்கிருந்து ஆபீஸ் போகணும். இதில கொஞ்சம் லேட்டாயிடுச்சின்னா அவரு

[illegible]



அத்தான் தன்னுடைய கோபத்தை யார் கிட்டே காட்டுவார்!

யோசித்துப் பார்... என்றைக்காவது அத்தான் உன்னுடைய கருத்துக்கு மதிப்பு கொடுக்காமல் இருந்திருக்கிறாரா? இல்லை உனக்கு ஏதாவது குறை வைத்திருக்கிறாரா?

அவருக்கு நான் வேலைக்காரியா என் கிறியே? இந்தக் குடும்பத்தின் தேவைகளுக் காகத்தானே அத்தான் வேலைக்குப் போறார்? அப்போ அவர் இந்தக் குடும்பத்து வேலைக்காரனா? ஒரு கணவருடைய தேவைகளை நிவர்த்தி செய்யும் மனைவி கணவருக்கு வேலைக் காரியா என்ன? ம்...

நீ மட்டும்தான் எதிர்பார்ப்போடு கல் யாணம் செய்ஞ்சிகிட்டியா? அதே எதிர் பார்ப்பு அத்தானுக்கும் இருக்காதா? தனக்கு வரப் போகும் மனைவி எப்படி அன்பாக இருக்கனும்னு நினைச்சிருப்பார்? நீ என்னன்னா, எதற்கெடுத்தாலும் சண்டைக் கோழி மாதிரி இருந்தால் அவருக்கு உன் மேல் வெறுப்பு வராதா? இதில உன்னோட வாழ்க்கையே வீணாயிட்டது போல புலம்புறியே... அத்தானிடம் வேறு ஏதேனும் கெட்ட பழக்கங்கள் இருக்கிறதா?"

"சீ... சீ... அதெல்லாம் இல்லை" - அவசரமாக இடைமறித்தேன்.

"பின்னே ஏன் இப்படியெல்லாம் சின்ன விஷயத்தைப் பெரிது பண்ணி உன்னை நீயே குழப்பிக்கறே? இதிலே குழந்தை மீது வேற கோபம்...

யோசி... அக்கா, நீ உன் கோபத்தை குழந்தை மீது காட்டுறது போலத்தானே அத்தான் தன்னுடைய கோபத்தை உன் மீது காட்றார்? நீ உன்னை மாத்திக்கலாம்... ஆனால் தீபு மூன்று வயதுதான்... மாத்திக்க முடியுமா? அடி வாங்கி அதற்கு உன்னைப் பார்த்தாலே பயமும் வெறுப்பும் உண்டாகும்... இப்படிப்பட்ட பிள்ளைகள்தான் பின்னாலே கெட்ட பழக்கங்களுக்கு அடிமையாகின் றனர். முரடர்களாகவும் மாறுகின்றனர்... உங்கள் சண்டைக்கு அவன்தானா பலிகடா?

எல்லாவற்றையும் பொறுமையாகவும் அன்பாகவும் அணுகக் கற்றுக் கொள் அக்கா...

கடைசியா ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க... எவ்வளவு புயல் மழை வெள்ளம் வந்தாலும் நாணல் எப்படி வளைந்து கொடுத்து தன் ஆயுளை நீட்டித்துக் கொள்கிறது... ஆனால் எவ்வளவுதான் பெரிய மரமாயிருந்தாலும் வேகமாக காத்தடிச்சா 'மொளுக்' என்று உடைந்து விடுகிறது. உடைஞ்சி போகணுமா? இல்லே நாணலைப் போல வளைஞ்சி கொடுத்து வாழணுமா? என்று நீயே முடிவு செய்து கொள்ளுக்கா."

பொலபொலவென்று என்னுள் இருந்த ஈகோ அனைத்தும் உடைந்து விட்டது. இந்தச் சின்னப் பெண் எப்படி இவ்வளவு அழகாக பேசக் கற்றுக் கொண்டாள்? ஆச்சரியத்துடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"நேரமாயிடுச்சி அம்மா தேடுவாங்க, இந்தச் சாக்லெட்டை தீபுவிற்குக் கொடு... நான் வர்றேன்..." தேவி போய் விட்டாள்.

எவ்வளவு நேரம்தான் அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தேனோ தெரியவில்லை.

"அம்மா பசிக்குது" - தீபு.

"வா ராஜா" -அவனை அள்ளி அணைத்தேன். கன்னம் லேசாக வீங்கி இருந்தது. பாவி நான் இந்தப் பிஞ்சை எப்படி அறைஞ்சுட்டேன். எனக்கு நானே கடிந்தபடி சாதத்தைப் பிசைந்து ஊட்டலானேன்.

"அம்மா... காரம்" - அப்படியே என் மேல் துப்பியது.

சுறுசுறுவென்று வந்த கோபத்தை அடக்கிக் கொண்டேன். நாணல் வாழ்க்கை ஞாபகத்திற்கு வந்தது.

பயந்து மிரண்டு நான் அடித்து விடுவேனோ என்று, என்னையே பார்த்துக்

---

## தயாரிப்பாளருக்கு யோசனை

குவாலிட்டி ஐஸ்கிரீம்-க்ரன்ச் நட்ஸ் வாங்கும் போது **Plastic Container**-ல் கொடுக்கிறார்கள். சுவைத்த பிறகு அந்த **Container** -ல் ஏதாவது போட்டு வைத்தால் அது நிற்பதில்லை. எனவே அதன் அமைப்பு படம் -1-ல் உள்ளதை படம் 2-ல் உள்ளது போல் மாற்றி அமைத்துத் தந்தால் பெண்களாகிய எங்களுக்கு அதை சமையலறை யில் உபயோகிப்பது எளிதாய் இருக்கும். உங்களுக்கும் விளம்பரமாகும். தயாரிப்பாளர் சிந்திக்க லாமே!



**- மல்லிகாமனோகர்**

கொண்டிருந்தது.

"சரி.. எல்லாம் அழுக்காயிடுச்சி பார்... இப்படித் துப்பக் கூடாது... ம்... கொஞ்சம் கொஞ்சமாக சாப்பிட்டு தண்ணி குடி. என்ன" என்றேன்.

அடுத்த கவளம் வைத்த சாதத்தை துப்பு வதற்கு வெளியே கொண்டு வந்தது என்னைப் பார்த்து.

"காரம் இல்லை அப்படியே சாப்பிட்டு டுவேன்" - ஹார்லிக்ஸ் அட்வர்டைஸ்மென்ட் பேபி மாதிரி சிரித்தது. எனக்கும் சிரிப்பு வந்து விட்டது. தேவி சொன்னது எவ்வளவு உண்மை!

மாலை ஆபீஸிலிருந்து வரும்போதே முகம் கருகருவென்றது.

"அப்பா நான் காரம் சாப்பிட்டேனே" - குழந்தை பெருமையாகச் சொன்னது.

"அப்படியா? குட் பாய்"

உடை மாற்றிக் கொண்டு வந்து குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருந் தார், என்னிடம் பேசவேயில்லை, இன்னும் கோபம் தணியவில்லை போலும்!

சூடாக அடை வார்த்து பிளேட்டில் கொண்டு போய் வைத்தேன். அடையை விண்டு வாயில் வைத்தவர் "காரமா இருக்கு" - முறைத்தார்.

நான் மெதுவாக புன்னகைத்தபடி "கொஞ்சமிருங்க மாவு தனியாக எடுத்து வைச்சிருக்கேன் வார்த்து எடுத்துட்டு வர் றேன்" என்றபடி உள்ளே சென்று மேலும் இரண்டு அடைகளை கொண்டு வந்து வைத்தேன்.

என்னையே அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தவர் புன்னகைத்தபடி "காரம் கூட இருந்தாதான் அடை ருசியாக இருக்கும்" என்றார். நானும் புன்னகைத்தபடி அவரரு கில் அமர்ந்தேன்.

"ஏங்க என்னை மன்னிச்சிடுங்க காலைல உங்களை அப்படி எதிர்த்துப் பேசியிருக்கக் கூடாது" என்றேன்.

"போக, போக, ஆனால் ஆபீஸ் கிளம்பற நேரத்தில் பேசாதே" என்றவர் "நானும்தான் உன்னை ரொம்ப திட்டிட்டேன்" என்றார் வாஞ்சையுடன்.

தீபு ஓடி வந்து அப்பா எனக்கு என்றது. இவர் அவனுக்கு ஊட்டி விட்டுக் கொண்டே, "குட்டி ராஜாவும், ராணியும் கிளம்புங்க பீச்சுக்குப் போலாம்" என்றார்.

ஒருவர் மீது ஒருவர் வன்மம் பாராட்டிக் கொண்டு வாழ்வதை விட வளைந்து கொடுத்து வாழும் நாணல் வாழ்க்கைத் தத்துவம் எத்தனை மகத்தானது.

# செல்லம் கொடுத்து கெடுத்த பிள்ளைகள்



முந்தாநாள் ஒரு சூப்பர் மார்க்கெட்டுக்குள் வேடிக்கைப் பார்க்கப் போனேன். அங்கெல்லாம் போய்ச் சாமான் வாங்குகிற அளவுக்கு என்னிடம் காசில்லை ஸ்வாமி. சும்மா உள்ளே போய் அழகழகாக அடுக்கி வைத்திருக்கிற பொருள்களை ரசித்துப் பார்த்து விட்டு எனக்குத் தேவைப்பட்ட பொருள் காணப்படாதது போல முகபாவத்தை வைத்துக் கொண்டு வெளியேறி விடுவதுதான் என் வழக்கம்.

திடீரென்று "யப்பா!" என்று ஒரு பொடியன் கத்தினான். அவனுக்கு மூணு அல்லது நாலு வயசுதானிருக்கும். ஆனால் ஐந்தாறு வயசு மதிக்கிற மாதிரி வளப்பமான, உயரமான உடல். அவனுடைய அப்பாவும் அம்மாவும் ரொம்ப சீரியசாக ஒரு மிக்சியை ஆராய்ந்து கொண்டிருந்தார்கள். அப்பா திடுக்கிட்டுத் திரும்பி "என்னம்மா கண்ணு, என்ன வேணும் உனக்கு?" என்று கொஞ்சினார். அவருடைய கவனத்தைத் தன் பால் திருப்புவதில் வெற்றி கண்டு விட்ட திருப்தியுடன் பொடியன் அவருக்கு முதுகைக் காட்டியவாறு திரும்பி நின்று கொண்டான். அவர் ஒன்றும் புரியாமல் சில விநாடிகள் விழித்து விட்டு மீண்டும் மிக்சியின் மேல் தனது கவனத்தைச் செலுத்தத் தொடங்கினார்.

மீண்டும் அந்தப் பயல் "யப்பா!" என்று அலறினான். வேறு வழியின்றி அப்பா மிக்சியை விட்டு அவனிடம் வந்து "என்னம்மா செல்லக்குட்டி, என்ன ஒணும் கண்ணணுக்கு?" என்று கொஞ்சினார்.

"அது... அது வேணும்!... வாங்கித்தா!" என்று அவன் கையை நீட்டிய திசையில் கடையிலிருந்த எல்லாரும் பார்த்தார்கள். உயரத்திலிருந்த பொருள்களை எடுப்பதற்காகக் கடைச் சிப்பந்திகள் பயன்படுத்துகிற ஏணி அது.



எனக்கு எரிச்சலாக வந்தது. மிட்டாய், சாக்லேட் என்று ஏதாவது கேட்டால் அர்த்தமுண்டு. கருப்பாய் அசிங்கமாயிருக்கிற ஒரு ஏணியைப் போய் ஒரு குழந்தை கேட்குமோ? ஏணியை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று அவனுக்கே தெரியாது. அப்பா

வும், அம்மாவும் தன்னைக் கவனிக்காமல் மிக்சியைப் பார்த்துக் கொண்டிருந்தது அவனுக்குப் பொறுக்கவில்லை. அவ்வளவுதான். அப்பாவுக்கும் அது புரிந்து விட்டது. "சரி, சரி, வா, நாளைக்கு வந்து மிக்சியைப் பார்ப்போம்" என்று அவர் மனைவியைக் கூப்பிட்டார். அந்த அம்மாள் ஏமாற்றமும் அவமானமும் முகத்தில் தெறிக்க வந்தாள். அவள் வந்த வேகத்தைப் பார்த்தால் அந்தப் பயலை ஓங்கி அறையப் போகிறாள் என்று தோன்றியது. ஆனால் அவளோ குனிந்து அவனைக் கொஞ்சத் தொடங்கினாள்.

உடனே அவன் அவளுடைய கழுத்தைக்



கட்டிக் கொண்டு "தூக்கிக்கோ" என்று அலற ஆரம்பித்தான். வேறு வழியின்றி அம்மா அவனை இடுப்பில் தூக்கிக் கொண்டாள். பையன் நல்ல உயரம். அவனுடைய கால்கள் அவளுடைய கால்களுடன் மோதி அவளை நடக்க விடாமல் செய்தன. உடனே அவள் அவனைக் கீழே இறக்கி விட்டாள்.

அவன் தரையில் படுத்துக் கொண்டு, "எனக்குப் பசிக்கிறது" என்று கத்த ஆரம்பித்தான். அம்மா ஒரு பிஸ்கட்டை எடுத்துக் கொடுத்தாள். அதை அவன் தூக்கியெறிந்து விட்டு, "எனக்குச் சாதம் வேணும்!" என்று அலறினான்.

"இப்பத்தானேடா ஓட்டலிலே ஒரு முழு தோசை தின்னே? அதுக்குள்ளே எப்படிப் பசிக்கும்?" என்று அப்பா கேட்டார்.

"எனக்குக் காலை வலிக்கிறது!" என்று பையன் அடுத்ததாக ஆரம்பித்தான். அவனுக்குப் பசியுமில்லை, வலியுமில்லை. போரடித்தது. அவ்வளவுதான். சரியான கண்டிப்பு இல்லாமல் செல்லம் கொடுத்து வளர்த்து விட்டார்கள். அதற்குத் தண்டனை அனுபவிக்கிறார்கள்.

கெட்டுப்போன குழந்தை.

என்ன சொன்னாலும் ஆட்சேபிப்பது. செய்யாதே என்று சொன்ன காரியத்தை வீம்பாகச் செய்வது. ஓடாதே, நில், இங்கே வா என்பன போன்ற உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய மறுப்பது. தன்னிஷ்டப்படி நடக்க வேண்டுமென்று அடம் பிடிப்பது. மற்றவர்களை அளவுக்கு மீறி அதிகாரம் பண்ணுவது. இல்லாததைக் கொண்டு வா என்று கேட்பது. சிறு சிறு ஆசா பங்கங்களுக்குக் கூட பெரிதாக அழுது ஆர்ப்பாட்டம் செய்வது. அடிக்கடி அழுவது, சீறுவது, வன்னென்று விழுவது ஆகியவை செல்லம் கொடுத்துக் கெடுக்கப் பட்ட குழந்தையின் அடையாளங்கள்.

உங்கள் குழந்தையுடன் பொழுது போக்கும் போது, அவன் கேட்கிற பொருள்களை வாங்கிக் கொடுக்கும் போது உங்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தால், உங்கள் குழந்தை கெட்டுப் போகவில்லை என்று அர்த்தம். அடம் பிடிக்கிறதையும், அழுது ஆர்ப்பாட்டம் செய்கிறதையும் தவிர்ப்பதற்காக நீங்கள் வேண்டா வெறுப்பாக அந்தக் காரியங்களைச் செய்கிறீர்கள் என்றால் உங்கள் பிள்ளை கெட்டுப்போய் விட்டது எனலாம். நல்ல குழந்தை நீங்கள் எதை வாங்கிக் கொடுத்தாலும் சந்தோஷமாக வாங்கிக் கொள்ளும். கெட்ட குழந்தைகள் பிஸ்கட் வாங்கிக் கொடுத்தால் சாக்லேட் கேட்கும். சாக்லேட் கொடுத்தால் பிஸ்கட் கேட்கும். இரண்டையும் வாங்கிக் கொடுத்த பிறகு கடலை மிட்டாய் வேணும் என்று அலறும்.

இல்லை, கிடையாது, முடியாது என்ற சொற்களை நல்ல குழந்தைகள் மிகப் பெரும்பாலான வேளைகளில் ஏற்றுக் கொள்ளும். தனக்கு எது நல்லது அல்லது தேவை என்பதைப் பெற்றோர் தீர்மானிக்க உரிமையுண்டு என்பதை அது புரிந்து கொண்டிருக்கும். சில வேளைகளில் அது கூடப் பிடிவாதம் செய்யலாம். அப்போது கூட "இன்னிக்கு உனக்கு ஜலதோஷமாயிருக்கு. உடம்பு சரியான பிறகு ஐஸ்கிரீம் வாங்கித் தருவேன்!" என்று

சொன்னால் சரியென்று ஒத்துக் கொள்ளும். "இப்பவே எனக்கு ஐஸ்கிரீம் வேணும்" என்று அழுது, அடம் பிடிக்காது.

## குழந்தை எப்போது கெட ஆரம்பிக்கிறது?

ஒரு மாதக் குழந்தை சரியாகத் தூங்காமல் நை, நை என்று அழுது கொண்டேயிருந்தால் பெற்றோர் அதைத் தோளில் சாய்த்துக் கொண்டு, முதுகில் தட்டிக் கொடுத்தவாறு, அங்குமிங்கும் நடப்பார்கள். அதற்கு வயிற்றில் வலியிருக்கலாம். பெற்றோரின் அணைப்பின் இறுக்கத்தில், நடையின் குலுக்கலில் அது வலியை மறந்து அமைதியடையக் கூடும். மூன்று மாதங்கள் ஆன பிறகு இந்தச் சின்ன வலிகளெல்லாம் வராது. பெற்றோர் தன்னைத் தூக்கிக் கொண்டு அலைவது குழந்தைக்குப் பழகி விடும். அந்தச் சமயத்தில் பெற்றோர்கள் தமது பரிவுணர்ச்சியைச் சிறிது மட்டுப் படுத்திக் கொள்ளலாம்.

சாதாரணமாக முதல் குழந்தையைப் பெற்றோரும், தாத்தா, பாட்டிகளும் சற்று அளவுக்கு மீறிச் சீராட்டுவார்கள். அதன் காரணமாக அது தான் விழித்துக் கொண்டிருக்கிற நேரமெல்லாம் தன்னுடன் யாராவது வந்து விளையாடிக் கொண்டிருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கத் தொடங்கி விடுகிறது. ஆனால் வயதாக வயதாக அதன் எடை கூடுவதால் அதைத் தூக்கி வைத்துக் கொள்வது கஷ்டமாகிறது. நமக்கு மற்ற வேலைகளையும் கவனிக்க வேண்டியிருக்கிறது. தனது தேவைகளைக் குழந்தை தானே பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்று நாம் எண்ணத் தொடங்குகிறோம். அதிகமான செல்லம் கொடுக்கிறோமோ என்ற பயம் எழுகிறது. அந்த நிலையில் நாம் குழந்தையை விட்டு விலக முயலுவோம்.

குழந்தைக்குத் துணை நிற்பது வேறு, சீராட்டுவது வேறு பணிவிடை செய்வது வேறு என்பதைப் பல பெற்றோர்கள் புரிந்து கொள்வதில்லை. குழந்தைக்குத் துணை நிற்பது என்பது அது வளருவதற்கு வழிகாட்டுவதாகும். பேச்சு பழகவும், உடல் வலுப் பெறவும், தனது காரியங்களைத் தானே செய்து கொள்ளும் திறனை வளர்க்கவும் அது தேவை. அது அளவு மீறிப் போனால் அது செல்லம் கொடுப்பதாகி விடும். குழந்தை பக்கத்திலேயே சுற்றிச் சுற்றி வருவது, எப்போதும் அதைத் தூக்கி வைத்துக் கொஞ்சிக் கொண்டேயிருப்பது, அதன் விளையாட்டில் குறுக்கிடுவது ஆகியவை குழந்தை தன் தற்சார்புத் திறனை வளர்த்துக் கொள்ளாமல் தடுக்கும். குழந்தை யைத் தரையில் விட்டுத் தள்ளி நில்லுங்கள். அப்போதுதான் அது தவழ்ந்து, எழுந்து, நடந்து, ஓடி உங்களிடம் வரப் பழகும். கையும், காலும் வலுப் பெறும்.

குழந்தை பசித்தாலும் அழும். வலித்தாலும் அழும். பக்கத்திலிருக்கிற கைக்கடிகாரம் எட்டவில்லையே என்றும் அழும். பசி, வலி என்றால் உடனடியாக ஓடிப் போய்க் கவனித்துத் தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டும். ஆனால் கைக் கடிகாரத்தை எடுத்துக் கொடு என்று அழுகிற குழந்தையைக் கண்டு கொள்ளாமலிருப்பதே உத்தமம். குழந்தையின் எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்ய வேண்டும். ஆனால் எல்லா ஆசைகளையும் நிறைவேற்ற முயலுவது தவறு.

அழுது அடம் பிடிக்கிற குழந்தையை விட்டு விலகிப் போய் விடுங்கள். பெற்றோருக்கு வேறு வேலைகளும், தேவைகளும் உண்டு என்பதைக் குழந்தை புரிந்து கொள்ள வேண்டும். அப்பா போனில் பேசிக் கொண்



### உருளைக்கிழங்கு வாங்கும் போது

உருளைக்கிழங்கு வாங்கி அதிக நாட்கள் வைத்திருந்து சமைத்துச் சாப்பிடாதீர்கள். நாள்பட்ட உருளைக் கிழங்கில் 'சொலானால்' என்ற நச்சு உற்பத்தி ஆகிவிடுகிறது இதனால் தலைவலி, ஜுரம், வயிற்றுப் போக்கு இவை ஏற்படக் கூடும். இவ்விதமே பச்சை நிறம் தெரியும் கிழங்குகளையும் உபயோகிக்கக் கூடாது. இது குளோரோபில் இருப்பதைக் குறிக்கும். அதிகமாக வெயிலில் இருந்திருக்கக் கூடும். முளை வந்த கிழங்குகள், மென்மையான கிழங்குகள் முதலியவை உண்ண லாயக்கில்லாதவை. கசப்பான கிழங்குகள் சொலானால் அதிகமுள்ளவை. தாட்சண்யமில்லாமல் வீசியெறியுங்கள்!

# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 6 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்ல மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.

**இலவசம்**
**நெஸ்டம் செய்முறை**
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25,
புதுதில்லி-110016

# நெஸ்டம்

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

TS McCann/NESTUM/1492 TM

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபின் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்

## தயாரிப்பாளருக்கு வாசகியின் யோசனை!



எவர்சில்வர் குடத்தின் கழுத்துக்கு மேல் விளிம்புப் பகுதி சற்று கனமாக இருப்பதற்கு அதன் உள்ளே இரும்பு வளையங்கள் வைத்துள்ளார்கள். அந்த விளிம்புப் பகுதி நாளடைவில் சிறிது சிறிதாக விரிந்து (வெடித்துக்) கொண்டு அதன் உள்ளே பொருத்தி இருக்கும் இரும்பு வளயம் துருப் பிடித்து வெளியே நீட்டிக்கொள்வதுடன் பொடிப் பொடியாக உதிர்ந்து கையில் குத்தி ஆபத்தை விளைவிக்கிறது. அதில் இரும்பு வளையம் வைக்காமல் தவலையில் இருப்பது போல் விளிம்பை உருட்டையாக மடித்து விடலாம். அல்லது குடத்தின் அழகிற்காக வளையம் பொருந்த வேண்டியது அவசியமானால் சற்று கனமான இண்டாலியம் வளையம் அல்லது பித்தளை வளையம் பொருத்தலாம். இந்த மாதிரி இரும்பு விளிம்பு பொருத்தப்பட்ட வாளிகளும் உள்ளன.

*பின் குறிப்பு : இது மாதிரி விளிம்புப் பகுதி விரிந்த குடம் ஒரு சமயம் என் காலில் தண்ணீருடன் விழுந்து இரும்பு குத்தி ஊசி போட்டுக் கொள்ளும்படி ஆகிவிட்டது.*

**- ஜானகி ரங்கநாதன்**

டிருக்கும் போது, அம்மா காய்கறி நறுக்கிக் கொண்டிருக்கும் போது அல்லது குளித்துக் கொண்டிருக்கும் போது குழந்தை சில நிமிஷங்களுக்காவது தனியாக விளையாடிக் கொண்டிருக்க அல்லது பொழுது போக்கிக் கொள்ளப் பழக வேண்டும். இரண்டு வயதாகிற ஒரு குழந்தை அப்பா படித்துக் கொண்டிருக்கிற போது தொந்தரவு செய்யக் கூடாது என்பதைப் புரிந்து கொள்ள முடியும். அதற்குப் பழக்க வேண்டும். அவ்வளவுதான். அப்பா ஆபீசுக்குக் கிளம்பும் போது தானும் வருவேன் என்று அடம் பிடிக்காமல் டாட்டா காட்டி அனுப்ப வேண்டும் என்பதைப் புரிய வைத்து விடலாம்.

குழந்தை பசியினால் அழுதால் உடனடியாக ஓடிப் போய்ப் பால் கொடுக்க வேண்டியதுதான். அது தேவை. "என்னுடைய பொம்மையை எடுத்துக் கொடு" என்று அழுதால், விழுந்தடித்துக் கொண்டு ஓட வேண்டாம். கையிலிருக்கிற பந்தை வைத்துக் கொண்டு இன்னும் சிறிது நேரம் விளையாடட்டுமே. அது மாதிரி தாமதித்தால் தன் கையிலிருக்கிற பந்தின் அருமை குழந்தைக்குத் தெரியவரும். தான் கேட்கிறதெல்லாம் உடனே கிடைக்காது. சில தாமதமாகத்தான் கிடைக்கும். சில கிடைக்கவே கிடைக்காது என்பதையெல்லாம் சிறார்கள் புரிந்து கொள்வது அவசியம்.

சிறு குழந்தைகளுக்குச் சுய நலமும், பொறுமையின்மையும் அதிகம். அது இப்பவே எனக்கு வேணும் என்பதுதான் அவர்களுடைய தாரக மந்திரம். அதை மாற்றிக் காத்திருத்தல் என்ற குணத்தை உண்டாக்க வேண்டும். ஏழெட்டு மாதம் ஆன குழந்தை கூடக் காத்திருக்கப் பழக வேண்டும். பெற்றோர் கொஞ்சம் பொறு, சித்த நாழி இரு, சாயங்காலம் போகலாம், நாளைக்கு வாங்கித் தரேன் என்பன போன்ற சொற்களை அடிக்கடி உறுதியான குரலில், அழுத்தமாக ஆனால் கோபத்தைக் காட்டாமல் சொல்ல வேண்டும்.

காத்திருத்தல் நேரம் குழந்தையின் மனோபாவத்தையும் வயதையும் பொறுத்தது. அந்த நேரத்தில் பொழுது போக்குவதற்கான வசதிகள் இருந்தால் நல்லது. இரண்டு வயதுக் குழந்தை ஐந்து நிமிஷத்துக்கு மேல் காத்திராது. அதனிடம் சின்னதாக ஒரு டம்ளரைக் கொடுத்து, "இதை அலம்பிண்டுவா" என்று சொல்லி அனுப்பி விடலாம். ஆறு வயதுச் சிறுவன் ஒரு மணி நேரம் வரை காத்திருப்பான். அவனை டிவி முன்னால் உட்கார வைத்துச் சினிமா பார்க்கச் சொல்லலாம்.

### கெட்ட குழந்தையைத் திருத்துவது எப்படி?

முதலில் குழந்தையைத் தோளில் அல்லது மடியில் போட்டு ஆட்டித் தூங்க வைக்கும் பழக்கத்தை நிறுத்துங்கள். படுக்கையில் போட்டுத் தட்டித் தூங்க வையுங்கள். சில நாட்கள் முயன்று குழந்தைக்குத் தானாகவே படுக்கையில் போட்டதும் தூங்கும் பழக்கத்தை உண்டாக்கி விடலாம்.

குழந்தை விளையாடும் போது தொலைவிலிருந்தவாறு கண்காணியுங்கள். உங்கள் துணையின்றி அது விளையாடப் பழகட்டும். அதனால் உங்களுடைய காரியங்களையும் பார்த்துக் கொள்ள முடியும்.

அவசியமில்லாத போது குழந்தையைத் தூக்காதீர்கள். அது விளையாடும் போது அடிக்கடி அதன் கண்ணில் படாமல் போய் விடுங்கள். கொஞ்சம் கொஞ்சமாக அதற்குத் தன்னம்பிக்கையும் தற்சார்புத்திறனும் வளர்ந்து அது நல்ல குழந்தையாகிவிடும்.

**- கே.என். ராமசந்திரன்**




நவீன யுகத்தின் நங்கை.
மிகச்சிறந்ததை தவிர
வேறெதற்கும் மசிய மாட்டாள்.
முழுமை சிறிது குறைந்தாலும்
போர் முரசுதான்!

# போராட்டம்!

திருப்தி வகை கோதுமை மாவு
மைதா, ரவை இவளுக்காகவே
தயாரிக்கப்பட்டவை.

அசல் பஞ்சாப் கோதுமையின்
முழுநலத்துடன், அதன் முக்கிய
ஊட்டச் சத்துக்களும் முழுமையாக
பொதிந்தது. இயற்கையின்
வரத்தில் எவ்வித சேர்ப்போ
குறைப்போ இன்றி.

விளைவு, இன்றைய பெண்மணிக்கு
மிக ஆரோக்கியமான,
ஊட்டமிக்க மாற்றம்.
கூடவே... முழுதிருப்தியும்.
(ஆக, இப்போது
வெள்ளைக்கொடிதான்!)

HTA.7447.95

## ஃபை:.பே TRUPTHI மயம்!

தரத்துடனும், முழுதிருப்தியுடனும் பேக் செய்யப்பட்டவை
• கோதுமை மாவு • மைதா • ரவை மற்றும்
பலவகை வாசனைப் பொருட்கள்.

இலவச சமையல்கலை புத்தகத்திற்கு எழுதுக :
NEPC AGRO FOODS LIMITED
36, வாலாஜா ரோடு, சென்னை-600 002.
போன் : 848075, 845870, 849031 பேக்ஸ் : 044-847353.
ஸ்டாக்கிஸ்ட் விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன.



# 'ரஜனிராஜா' ஆலயம்

**லே**-அவுட் மனைகள் போட்டுப் பிரிக்கும்போது சில மனைகள் வாகில்லாமல் நீளமாகவோ, முக்கோணமாகவோ நின்றுவிடும். அது அப்படியே கிடக்கும். அதிலே குப்பைப் போட்டு அத்தனை அசிங்கங்களையும் செய்து, கடைசியில் அந்தப் பக்கமே போகமுடியாமல் செய்து விடுவார்கள்.

வடசென்னை ஜவஹர் நகரிலும் அப்படி ஒரு குறுகலான நீண்ட ப்ளாட் மிகுந்தபோது குப்பை போட ஆரம்பித்தார்கள். அதைப் பார்த்த ஒரு பெண்மணி,

"தம்பி இந்த இடத்திலே ஒரு கோயில் கட்டலாமே!" என்றார். அதை வேத வாக்காக எடுத்துக் கொண்ட ராஜ் மோகன் 'ரஜினி ராஜா ட்ரஸ்ட்' நிறுவி அந்த இடத்தில் அழகிய பாலாஜி கோயிலை கட்டி முடித்து விட்டார். அதை நிர்வகிக்கும் பொறுப்பை ஜவஹர் நகர் இளைஞர்களிடமும் ஒப்படைத்திருக்கிறார்.

சுத்தம் சுத்தம் மகாசுத்தமாக சுற்றுப் புறம். அழகிய தியான மண்டபம். ஸ்ரீதேவி பூதேவி புடை சூழ பாலாஜி... விநாயகர் முதல்



அமிர்த கடேஸ்வரர், சாஸ்தா வரை அவரவர் இஷ்டதெய்வங்கள்... என ஒரு அருமையான ஆன்மீகச் சூழ்நிலையைப் பரப்பிக் கொண் டிருக்கிறது. ஒட்டியிருக்கும் நந்த வனத்தில் இறைவனுக்காக மலர்ந்த மலர்கள் வாசத்தைப் பரப்பிக் கொண்டு இருக்கிறது.

'மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது' என்பார்கள். கோயில் சிறியதாக இருந்தாலும் இங்கு முக்கிய பிரமுகர்கள் நிறையபேர் வந்து சென்று இருக்கின்றனர். கவர்னர் சென்னாரெட்டி சமீபத்தில் இங்கு வந்திருக் கிறார்.

இருப்பதி பாலாஜி உடுத்திய நினைவை பாலாஜி பக்கம் திருப்பும்" என்கிறார் ஜவஹர் நகர் வாசி ஒருவர்.

"ஐயோ இந்த இடம் அசுத்தமாகி விடக் கூடாதே என்பதற் காகத்தான் இங்கு கோயில் கட்டத் தீர்மானித்தோம். ஆனா இதற்கெல்லாம் எப்படிப் பணம் வந்தது, கும்பாபிஷேகம் வரை எப்படி முடித்தோம் என்பதே ஆச்சர்யமான தெய்வீக விஷயம்தான். எல்லாம் 'அவனே' பார்த்துச் செய்து கொண்டதுதான். நாங்கள் சமூகப் பணியும் இந்த இறைவனின் கூடத்தில் செய்ய ஆசைப்பட்டோம். முதிய பெண்களை (விச்ராந்தி)யிலிருந்து ஒருநாள் அழைத்த வந்து உணவு, துணிமணிகள்





வஸ்திரம் இவர்களுக்கு அனுப்பப்படுகிறது. பக்தி, சிரத்தையுடனான பூஜை... மாதம் ஒரு திருவிளக்குப் பூஜை நடை பெறுகிறது. காலையிலிருந்து தெய்வப் பாசுரங்கள் பிரகாரத்தில் ஒலித்த வண்ணம் இருக்கின்றன.

"சும்மா கிடந்த கிரௌண்டில் இப்படி ஒரு கோயில் எழுப்பியது எங்கள் பாக்கியம். சதா ஓடிக் கொண்டே இருக் கும் இந்தக் காலத்தில் இறைவனை உட் கார்ந்து தியானிக்க நினைவு படுத்திக் கொண்டே இருக்கிறதே. ஆபீஸ் போகும் போதும் வரும் போதும் ஒரு கும்பிடு போட்டுச் செல்கிறோம். கோயில் மணி யோசையும், தெய்வப் பாடல் களும் எங்கே இருந்தாலும் எங்கள்

அளித்தோம். பார்வையிழந்தவர்களை ஒருநாள் எங்கள் விருந்தாளியாக்கினோம். மருத்துவமனை, அனாதைச் சிறுவர்கள், ஏழைக் குழந்தைகள் என இயலாதவர் களுக்கு உதவுவது என்றெல்லாம் எங்கள் திட்டத்தில் வைத்துக் கொண்டு இருக் கிறோம். ஒவ்வொன்றாக நிறைவேற்று வோம்" என்கிறார் ட்ரஸ்டின் சேர்மேன் ராஜ்மோகன்.

'குப்பைமேடு கோபுரமானது' என்பார்கள் உண்மையிலேயே குப்பைமேடாக ஆக இருந்த ஒரு இடம் கோபுரமாக உயர்ந்தது இறைவின் செயல்தானே!

-'புவன்'

BPL

உங்கள் முதலீட்டை மதிக்கும் எந்த ரெஃப்ரிஜிரேட்டரும் ஆயுளுக்கும் உழைக்க வேண்டும்; ஆயுளுக்கும் புத்தம்புது உணவு தர வேண்டும்.

உங்கள் முதலீட்டுக்கு மதிப்பளித்து, உங்கள் வாழ்க்கை முறைக்கு மதிப்பு கூட்டும் ஒரு ரெஃப்ரிஜிரேட்டிங் ஸிஸ்டத்தை வழங்குகிறோம்.

முழுமையான ஃபாமிலி–ஸைஸ். அல்லது 230 லிட்டர் உறைபனி இல்லாத பிபிஎல் ரெஃப்ரிஜிரேட்டிங் ஸிஸ்டம். (3–டோர் மற்றும் 2–டோர் மாடல்களில்) உங்களுடையது போன்ற குடும்பங்களுக்காகவே பிரத்தியேகமாக டிஸைன் செய்யப்பட்டது. மிக நவீன, சர்வதேச அம்சங்களுடன் வரும் இது ஆயுள் முழுதும் ஆரோக்கியமான, புத்தம் புதிய உணவைத் தரும் பலவகையான அனுகூலங்களுடன் வருகிறது. அதே சமயம் உங்கள் வாழ்க்கை முறைக்கும் இது பெருமை கூட்டுகிறது.

முழுமையான ஃபாமிலி–ஸைஸ் – இந்தியாவின் மிகப் பரந்த, உறைபனி இல்லாத ரெஃப்ரிஜிரேட்டிங் ஸிஸ்டம்களின் வரிசையிலிருந்து. நீங்கள் வாங்கக் கூடியது. கூடுதல் இடம் கொண்டது. அதி நவீன தொழில் நுட்பம். வருங்கால அம்சங்களுடன் இன்றே வருவது.



**புத்தம் புதிய உணவு – தினந்தோறும்.** இதன் உறைபனி இல்லாத உட்பக்கங்கள் காரணம் உணவு இன்னும் கூடுதல் காலம் புத்தம் புதிதாக இருக்கும். டிஃப்ராஸ்ட் செய்து கொண்டு உங்கள் மனைவி பாடுபட வேண்டாம். ஒவ்வொரு விதமான உணவுக்கும் துல்லியமான டெம்பரேச்சர் பகுதிகள் இருப்பதால் உணவு புதுத்தன்மை மாறாமல் அப்படியே புதிதாக இருக்கிறது.

**கூடுதல் இடம், கூடுதல் நன்றாகப் பாதுகாத்தல்.** இதன் உள்ளே கூடுதல் இடம் இருப்பதால் உங்கள் மனைவி அடிக்கடி மார்க்கெட் செல்ல வேண்டாம். மின்சக்தி திறனுள்ள, நம் நாட்டு சீதோஷ்ணத்துக்கேற்ற இதன் கம்ப்ரெஸ்ஸர் உங்கள் மின்சார பில்களில் கணிசமான சேமிப்பைத் தருகிறது. இதன் நேர்த்தியான, பின் பக்கம் ஒரே சீரான டிஸைன் உங்கள் குழந்தைக்குப் பாதுகாப்பானதாக, உங்கள் இல்லத்துக்கு அழகூட்டி, உங்களுக்குப் பெருமிதம் தரும்.

முழுமையான ஃபாமிலி – ஸைஸ் ரெஃப்ரிஜிரேட்டிங் ஸிஸ்டம். உங்கள் வாழ்க்கை முறைக்கு இது வேண்டாமா!

உறைபனி இல்லாத உட்பக்கங்கள். மிக நவீன வேல்வோ தொழில் நுட்பம் வெவ்வேறு உணவு வகைகளுக்கு வெவ்வேறு டெம்பரேச்சர் பகுதிகள். –18°C ஃப்ரீஸர். நம் நாட்டு சீதோஷ்ண நிலைக்கேற்ற கம்ப்ரெஸ்ஸர் நேர்த்தியான, பின்பக்கம் ஒரே சீரான, ஹாண்டில்கள் இல்லாத டிஸைன்.



BPL REFRIGERATING SYSTEMS

நவீன வாழ்க்கை முறையின் சாராம்சம்




230 லிட்டர். உறைபனி இல்லாதது. பல்வேறு கம்பார்ட்மென்டுகள். மேம்பட்ட முறையில் உணவைப் பாதுகாக்கும் தன்மை.

40, Oliver Road, Madras 600 004, Tel: 4992926.

# ஒவ்வொருவரும் வி.ஐ.பி.தான்!



ஹோட்டல் அறையில் பணியாளரை அழைக்க பஸ்ஸரை அழுக்கி விட்டுக் கையெடுக்கும் முன்பே அறைக் கதவைத் தட்டி நிற்கும் பணியாள், ஒவ்வொரு ஃப்ளோரிலும் சாதாரண குடும்பத் தலைவி தோற்றத்தில் பெண் சூபர்வைசர், 'பளிச்'சென அறையின் ஒவ்வொரு மூலையிலும் பிரத்யேகமாகக் கவனம் செலுத்தப்பட்ட அறிகுறி... 'பாஷாக' அதே சமயம் 'ஹோம்லி'யாக இப்படி ஒரு கூட்டுறவுடன் கோவை அன்னபூர்ணா ஹோட்டல் இருக்கிறது என்றால் பின்னணியில் நிச்சயமாக ஒரு பெண் இருக்க வேண்டுமே...

இருக்கிறார்... அவர்தான் ஹோட்டல் மானேஜர் திருமதி. இந்திரா. ஆனால் அவர் புன்னகையோடு அந்தப் பாராட்டினை மறுக்கிறார்.

"என் வாழ்க்கையின் அத்தனை ஏற்ற இறக்கங்களிலும் எனக்கு ஆதரவு தந்து, என்னிடம் நம்பிக்கையோடு இந்தப் பொறுப்பினை தந்து, என்னை நாளும் ஊக்கு விக்கும் அன்னபூர்ணா உரிமையாளர்கள் தான் இதற்குக் காரணம். அவர்களுடைய உதவி இல்லாமல் நான் இத்தனை தூரம் இயங்க முடியுமா?" என்கிறார்.

அன்னபூர்ணா ஹோட்டல் நிர்வாகம் தங்கும் அறைகளைக் கட்டியவுடனேயே இவரை மேனேஜராக நியமித்திருக்கிறது. பல ஹோட்டல்களுக்கும் சென்று அங்குப் பணியாளர்களும், ஹவுஸ் கீப்பிங் செக்ஷனைச் சேர்ந்தவர்களும் எப்படிப் பணிபுரிகிற ார்கள் எனக் கவனித்த இந்திரா, கோவைக்குத் திரும்பி அதோடு தன்னுடைய சுய யோசனை களையும் இணைத்து இங்கு நிர்வாகம் நடத்து கிறார்.

அதில் ஒன்றான ஃப்ளோர் மேனேஜராக பெண்களை நியமித்துள்ளதைப் பாராட்டினோம்.

"ஹோட்டல் அறைகளில் பெண்கள் தங்கும் போது பயமாக இருக்கும். அலுவலகப் பணியாக வரும் கணவன், மனைவியை நாளெல்லாம் தனியே விட்டு விட்டுப் போவார். அதே போல படிக்க, கான்ஃப்ரன்ஸில் கலந்து கொள்ள எனப் பெண்களும் தனியே வர வேண்டியது இருக்கிறது. இங்கு அறைகளைக் கண்காணித்துக் கொண்டு ஒரு பெண்மணி இருக்கிறார் என்றால் அவர்கள் பயமில்லாமல் இருக்கலாமே!" என்கிறார் இவர்.

"இங்கு வந்து தங்கிய வி.ஐ.பி.க்கள்...?"

"எல்லோரும் எனக்கு வி.ஐ.பி.க்கள்தான்..." என்றவர்,

"டைரக்டர் கே. பாலச்சந்தரும் அவர் மனைவியும் என்னை அவர்கள் குடும்பத்தில் ஒருத்தியாக ஏற்றுக் கொண்டு இருக்கிறார்கள். அதே போல தூர்தர்ஷன் டைரக்டர் நடராஜனின் குடும்பத்தினர். இன்னும் நிறைய பேரின் அறிமுகம் எனக்கு இங்கு கிடைத்தது..."

எப்போதும் மலர்ந்த முகமும், அதிராத பேச்சும், நிர்வாகம் என வரும் போது அவர் காட்டும் கண்டிப்பும்... சாதனை படைக்கும் பெண்கள் வரிசையில் மற்றுமோர் பெண்மணி... திருமதி. இந்திரா!

- 'புவன்'

## மங்கையர் மலரும், எம்.டி.ஆர். ஃபுட் ப்ராடக்ட்ஸும் இணைந்து கோவையில் நடத்திய மகளிர் விழாவில்...

**27.5.94** காலை பத்தரை மணி...

"நாங்க காலையில ஏழரை மணியிலேர்ந்து காத்திருக்கோம். திருப்பூர் போயாகணும். பதினோரு மணிக்குதான் கோலப்போட்டிக்குப் பதிவுன்னு போட்டிருக்கு, வாஸ்தவம்தானே. ஆனாலும் கியூ வரிசையிலேதான் உட்கார்த்தி வச்சிருக்கீங்க. லேட்டா வர்றவங்க எப்படியும் பின்னாடிதான் வருவாங்க. எங்க பேரை ரெஜிஸ்டர் செஞ்சுகிட்டு அனுப்பக் கூடாதா?"

கேட்பதற்குப் பரிதாபமாகத்தான் இருந்தது. சரிதான், என்று பதிவு செய்துவிட்டால் போச்சு, பத்தே முக்கால் மணிக்கு வருபவர்கள். "அது எப்படி நீங்க முன்னாடியே



• கோலப்போட்டி நடுவர்கள்

ரெஜிஸ்டர் பண்ணுவீங்க? பதினோரு மணின்னுதானே போட்டிருக்கீங்க. இப்படின்னு தெரிஞ்சிருந்தா நாங்க கூட முன்.. னாடி வந்து பதிவு செஞ்சுகிட்டு இருப்போம்" என்று சண்டைக்கு வந்துவிடுவார்கள். இது திருச்சி விழா அனுபவம். அதனால் அவருக்குப் பொறுமையாகச் சொல்லிச் சமாளித்தோம்.

வழக்கம் போல கோவையில் உற்சாகமான வரவேற்பு. இந்த முறை குழந்தைகளுக்கான மாறுவேடப் போட்டி கூட முதல் நாளே பதிவு என்று வைத்துவிட்டோம். இல்லையென்றால் மறுநாள் அலுவலர்கள் திண்டாடிப் போய்விடுகிறார்கள்.

28.5.94... கோவை மணி மேல்நிலைப் பள்ளியில் நானி பல்கிவாலா கலையரங்கத்தில் திருமணக்களை கட்டிவிட்டது. ஆங்காங்கே மங்கையர் மலர், எம்.டி.ஆர். பேனர்கள். குழந்தைகளும், பெற்றோர்களும் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார்கள்.

ஒன்பதே முக்காலுக்குக் கோலப் போட்டி நடுவர்களான திருமதி லலிதா ராமசாமியும், லட்சுமி சுப்ரமண்யமும் வந்து விட்டார்கள். இருவருமே இத்துறையில் வல்லுனர்கள். கோலம் மட்டுமல்லாமல் நிறைய கைவேலைகள் செய்வது மட்டுமின்றி கண்காட்சிகள் நடத்தும் அளவிற்குத் திறமை பெற்றவர்கள். இவர்களுடன் சென்னையிலிருந்து வந்த ஓவியர் ராஜுவும் நடுவராக இருந்து, பெண்களின் கைநுட்பத்திறனை பரிசீலித்தார்.

அவர்களுடனே கோவையின் நட்சத்திர எழுத்தாளர் விமலா ரமணியும் வந்திருந்தார். முதலிலிருந்தே மங்கையர்மலர் மகளிர் விழா என்றவுடன் ஆர்வத்துடன் பாடுபட்டவர்களில் அவரும் ஒருவர். எனவே காலையிலேயே வந்து, 'விழா நல்லபடியா ஆரம்பித்ததா? நல்லா போய்கிட்டு இருக்கா?' என அன்போடு விசாரித்தார்.

அவர் மட்டுமா? கோவையின் மங்கையர் மலர் ஏஜெண்ட் மணிகண்டன், சிங்கநல்லூர் ஏஜெண்ட், பி. சுப்ரமண்யம், துடியலூர்ப் பகுதி ஏ. சுப்ரமண்யம் என இவர்கள் மட்டுமல்லாமல் அவரவர்களுடைய நண்பர்கள், மகன், மகள் என அனைவரையும் அழைத்து வந்து பம்பரமாகச் சுழன்று கொண்டிருந்தார்கள்.

அதே போல கோவை அன்பர்களான வழக்கறிஞர் ஆனந்த பிரகாஷ், அவர் குடும்பத்தினர், சி.வி. கிருஷ்ணன் அவர் மனைவி ஜெயந்தி இவர்களெல்லாம் வெற்றிக்குப் பின்பலமாக இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

வகுப்பறைகளிலே இருக்கும் மேஜை நாற்காலிகளைத் தூக்கிப் போட்டு, அறையைச் சுத்தம் செய்து, அளந்து, கோலக் கட்டங்களைப் போட்டு... இவர்களின் பாடுபடல்களைச் சொல்லிக் கொண்டே போகலாம். அவை இவர்கள் அனைவருமே காட்டிய அன்பிற்கு ஈடாகாது.

கோலப் போட்டி ஆரம்பமாகியது. சரியாக அரைமணி நேரம். தரையிலே வண்ணமிகு கோலங்கள் உருவாகின. பூவும், புல்லும், கலர்ப் பொடிகளும் கோலங்களாக உயிர் பெற்றன. இல்லத்தரசிகளோடு போட்டி





போட்டுக் கொண்டு கல்லூரி மாணவிகளும், சிறுமிகளும் போட்டுக் கொண்டிருந்தது வியப்பாக இருந்தது. அவர்கள் முடித்த பிறகு கோலப் போட்டி நடுவர்கள் பரிசுக்குரியவற்றைத் தீர்மானிக்கச் சென்றார்கள்.

அடுத்து குழந்தைகளுக்கான மாறு வேடப் போட்டி. விழாவில் ஒரு மீசை கீழே கிடந்ததை வைத்துக் கொண்டு நம் வாலண்டியர் ஒருவர் அல்லாடிக் கொண்டிருந்தார். எந்த பாரதியின் மீசையோ தெரியவில்லை. மேடையிலே பாரதியார்களும், சிவாஜிகளும், ஔவைப் பாட்டியும், வக்கீலும், தருமியும் வலம் வந்தார்கள். சிறு குழந்தைகள் மேடையேறியவுடன் பயந்து போய் அம்மா புடவையைப் பிடித்துக் கொண்டு அழுத போது சிரிப்பு வந்தது. அப்படி ஓரிரண்டு பேர்தான். மற்றவர்கள்தான் என்னமாகப் பொரிந்து தள்ளுகிறார்கள்.

பம்பாய் வெடிகுண்டு விபத்தில் சிக்கிய ஒருவர் தன் காயங்களோடு வந்து, "ஒரு போதும் வன்முறை வேண்டாம்" எனச் சொல்வது போல ஒரு சிறுவன் வேடமிட்டு வந்தபோது மனதைச் சுட்டது.

மாறுவேடப் போட்டிக்கு நடுவர்களாக சவுத் இண்டியா விஸ்கோஸ் லிமிடெடின் பொதுமக்கள் தொடர்பு அதிகாரி சி.எஸ். கண்ணன், தொழிலதிபர் ஜெயலட்சுமி வரதராஜ், ஆல் இந்தியா ரேடியோ அதிகாரி திரிபுர சுந்தரி கமலநாதன் ஆகியோர் பங்கு பெற்றனர்.

ஆமாம், கோலப் போட்டி நடுவர்கள் என்ன ஆனார்கள்? இன்னும் அவர்கள் தீர்மானிக்கவில்லையாம். சுற்றிச் சுற்றி வந்து கொண்டு இருக்கிறார்கள்.

மாறு வேடப் போட்டிக்கான நடுவர்கள் பரிசுக்குரியவர்களைத் தேர்ந்தெடுத்து லிஸ்ட் கொடுத்த பிறகுதான் கோலப் போட்டி முடிவுகள் வந்தன.

இத்தனை நேரம் கண்ணுக்கு விருந்தளித்தார்கள். நாக்குக்கும் மூக்குக்கும் சுவையூட்ட எம்.டி.ஆர். நிறுவனத்தினர் தீர்மானித்தனர். அவர்களுடைய தென்னிந்திய விற்பனைப் பொறுப்பாளர் சுந்தர்ராஜன் முன்னிருந்து நடத்த, எம்.டி.ஆர். நிறுவனத்தினர் தங்களின் குலோப் ஜாமூன், பாதாம் அல்வா ஆகிய தயாரிப்புகளை மேடையில் செய்து காட்டினார்கள். தவிரவும் எல்லோருக்கும் சாப்பிட குலோப் ஜாமூன். தவிர எல்லோருக்கும் ஒரு பாக்கெட் குலோப் ஜாமூன் ரெடி மிக்ஸ்! வந்தவர்களுக்கு வெகு சந்தோஷம்!

மதிய இடை வேளைக்குப் பின் ஆரோக்கியப் போட்டி. ஹால் நிரம்பி விட்டது. மேடையிலிருந்து சமையல், மருத்துவம், உடல் நலம் பற்றிக் கேள்விகள் கேட்க கேட்க, விநியோகிக்கப்பட்ட தாள்களில் பதில்களை எழுதினார்கள். இருபத்தைந்து கேள்விகளும்



• விழா வெற்றிக்கு உழைத்த ஏஜெண்ட்கள்





முடிந்தவுடன் சில நிமிடங்கள் நேரம் கொடுத்து, எல்லோரிடமிருந்தும் விடைத்தாள்கள் பெறப்பட்டன. உடனடியாக தனியிடத்தில் விடைத்தாள்கள் திருத்தும் படலமும் ஆரம்பிக்கப் பட்டது.

அடுத்ததாக ஆரம்பித்த நாடகப் போட்டியில் இம்முறை அனைவரும் அவர்களுடைய கோயமுத்தூர் வட்டார பாஷையில் வெளுத்துக் கட்டினார்கள். எப்போதும் போல வரதட்சணைக் கொடுமை, மாமியார்க் கொடுமை என இல்லாமல் ஒவ்வொரு நாடகக் குழுவுமே வித்தியாசமாக சிந்திக்க முயன்றது நன்றாக இருந்தது.

பெண்கள் பொறாமை காரணமாக நல்லது செய்ய நினைப்பவர்களைக் கூடத் தப்பாகவே வம்பு பேசுவது, நாள் பூரா குடும்பத்தில் உழைக்கும் இல்லத்தரசியை,

"அவளா? 'சும்மா'தான் இருக்கா வீட்ல. வேலைக்கொண்ணும் போறதில்லை."

என்பது., எனப் பெண்மையை ஒவ்வொரு கோணத்தில் படம் பிடித்துக் காட்டினார்கள்.

நடுவர்களாக கோவையின் பிரபல எழுத்தாளர் ராஜேஷ் குமாரும், சி.எஸ். கண்ணனும் இருந்தார்கள். நடுவர்களுக்குள் ஒத்த கருத்து. தேர்ந்தெடுப்பதில் கஷ்டமே இருக்கவில்லை.

அடுத்ததாக வாசகர்களின் கருத்துப் பரிமாற்ற அரங்கம். ஒருவர் பேச ஆரம்பிக்கும்போதே நிறைய கியூவரிசை. உஷா பாலகிருஷ்ணன், திருமகள், ஆனந்தகுமாரி, சுலோசனா, அமிர்தம், ராஜேஸ்வரி, கீதா ஸ்ரீதரன், ஜெயஸ்ரீ, சந்திரா, மகாலட்சுமி, விசாலம், சுகந்தபுஷ்பம், நாகரத்தினம் என போய்க் கொண்டே இருந்தது. எல்லோரும் வெறும் மேடைப் பேச்சு அலங்காரமாக இல்லாமல் ஆக்கபூர்வமான கருத்துக்களைச் சொன்னது நன்றாக இருந்தது. கல்லூரி மாணவி ஒருத்தி, 'எங்களுக்காக எழுதக் கூடாதா' என்றாள்.

அவர்களுக்காகவே நான் எழுதிய புத்தகம் அடுத்ததாக வெளியிடப்பட இருக்கிறது எனச் சொன்னபோது ஒரே ஆரவாரம். ஆமாம், இந்த நிகழ்ச்சி புதியதாக மகளிர் விழாவில் சேர்ந்து கொண்டது எதிர்பாராததுதான். உச்சநீதிமன்ற நீதிபதி திரு. மோகன் 'சிறப்பாக வாழ்வோம், வாருங்கள்!' என்ற பள்ளி, கல்லூரி மாணவிகளுக்காகவே நான் எழுதிய அந்தப் புத்தகத்தை வெளியிட, புத்தக உலகின் விற்பனையில் பெரும் புரட்சி செய்து வரும் விஜயா பதிப்பகம் உரிமையாளர் வேலாயுதம் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டார். நூலக அதிகாரி கோகிலமும், கண் மருத்துவமனை மருத்துவர் டாக்டர். மனோகர் டேவிட் மற்றும் வேளாண்மைப் பல்கலைக் கழக துணை இயக்குநர் ஆர். விஜயராகவன் ஆகியோர் வாழ்த்திப் பேசினார்கள்.






கல்யாண ஸ்வீட்ஸ், சீர் முறுக்கு சீர்வரிசை பட்சணங்கள் எவ்வளவு தேவை ஆனாலும் அர்ஜெண்ட் ஆர்டர் பேரில் தயார் செய்து தருகிறோம்.

- ☐ சுத்தமான நெய்யில் தயாராகும் ஸ்வீட் வகைகள்
- ☐ சுத்திகரிக்கப்பட்ட, கொலஸ்ட்ரால் தொல்லை இல்லாத தாவர எண்ணெயில் தயாராகும் கார வகைகள்
- ☐ அதிகப்படியான எண்ணெய் அகற்றப்படுவதால் நீண்ட நாள் கெடாமல் இருக்கும் தென்னிந்திய பட்சணங்கள் (FREE OIL)

**OUR SPECIALITIES :**

- ☐ புழுங்கலரிசி கைமுறுக்கு, தட்டை, சீடை, மிக்சர் (FREE OF OIL), ETC.,
- ☐ மைசூர் பாகு, போளி, லட்டு, கோதுமை அல்வா, ETC.,



NAGESH THEATRE
PONDY BAZAR
NORTH BOAG ROAD
HOLY ANGELS CONVENT
RAMAN STREET
'SUSWAAD'
Dr. Nair Road
VENKATRAMAN STREET

# SUSWAAD

**The Delicious Home made Sweets and Savouries**

1/2 Venkatraman street,
T.Nagar, Madras - 17. Ph: 8282324 P.P

Also available at:
C/o. Unique Electronics
160, Royapettah High Road, Mylapore, Madras - 4.
Ph: 4992190
131, Mudichur Road, Thambaram West,
Ph: 403267

Komala Ads.

**EXPORT ORDERS & ENQUIRIES FOR TECH. KNOWHOW SOLICITED**

கோலப்போட்டியில் பரிசு பெற்றவர்கள் :

எம். கவிதா, இருகூர் - முதல் பரிசு
உஷாராணி பாலகிருஷ்ணன், கோவை - 14
- இரண்டாம் பரிசு
ஆர். சித்ரகலா, ஆர்.எஸ். புரம்
- மூன்றாம் பரிசு.
மரியா லிண்டா அனிதா, கோவை - 18
- ஆறுதல் பரிசு
ஆர். கற்பகம், ராம்நகர் - ஆறுதல் பரிசு
சி. உமாமகேஸ்வரி செல்வராஜ், இருகூர்
- ஆறுதல் பரிசு
அனுராதா ஸ்ரீதர், சிங்காநல்லூர்
- ஆறுதல் பரிசு
ஜே. வசந்தி, கே.கே. புதூர்
- ஆறுதல் பரிசு

குழந்தைகளுக்கான மாறுவேடப் போட்டி :

எஸ். லட்சுமி, சூலூர் - முதற்பரிசு
ஓம். அவினாஷ், கோவை - 18
- இரண்டாம் பரிசு
பி. தயாளினி, வேடப்பட்டி - மூன்றாம் பரிசு
என். கௌதம், ஆர்.எஸ். புரம் - ஆறுதல் பரிசு
வி. ராம்பிரபு, ஆர்.எஸ். புரம் - ஆறுதல் பரிசு
பி. கிஷோர் குமார், ராம் நகர் - ஆறுதல் பரிசு
எஸ். ராம் குமார், ராம்நகர் - ஆறுதல் பரிசு
கோகுல் ஸ்ரீபாலாஜி, பி.என்.பாளையம்
- ஆறுதல் பரிசு.

ஆரோக்கியப் போட்டி :

மகாலட்சுமி சுப்ரமணியம், டாடா பேட்
- முதல் பரிசு

யசோதா சண்முகம், சிறுமுகை
- இரண்டாம் பரிசு
ஜெகதா ஆறுமுகசாமி, சிறுமுகை
- மூன்றாம் பரிசு
ராஜேஸ்வரி தாமோதரன், பாப்பநாயக்கன் பாளையம் - ஆறுதல் பரிசு
மீனாட்சி சிவராமன், பீளமேடு - ஆறுதல் பரிசு
வி. ஜெயலட்சுமி, செல்வபுரம் - ஆறுதல் பரிசு
சாந்தி வெங்கடராமன், கோவை - 11
- ஆறுதல் பரிசு
உமா மூர்த்தி, கோவை - 9 - ஆறுதல் பரிசு

நாடகப் போட்டி :

அகில இந்திய ஜனநாயக மாதர் சங்கம், கோவை - 9 - முதற்பரிசு
பாரதி பார்க் லேடீஸ் அசோசியேஷன்
- இரண்டாம் பரிசு
சுவரமகாஜன சங்கம் - மூன்றாம் பரிசு



மாறுவேடப் போட்டியில் பரிசு பெற்ற குழந்தைகள்

இவ்விழாவும் அடுத்து நடந்த மகளிர் விழா பரிசளிப்பு விழாவும் கோவை மாவட்ட கலெக்டர் திரு. சி.வி. சங்கர் தலைமையில் ஜாம் ஜாமென்று நடந்தது. பரிசு பெற்றவர்களுக்குக் கல்பனா சங்கர் சென்னை தி.நகர் எல்.கே.எஸ். ஜுவல்லர்ஸில் வாங்கிய வெள்ளிப் பாத்திரங்களைப் பரிசாகக் கொடுக்க, விமலாரமணி வாழ்த்திப் பேசினார். பேசமாட்டேன் என்ற ராஜேஷ்குமார் வாசகர்களின் வேண்டுகோளுக்கு இணங்க பேசினார்.

இரவு எட்டு மணிக்கு விழா எந்தத் தடங்கலுமின்றி நல்லபடியாக முடிந்த போது எல்லோருக்கும் மனநிறைவு, சந்தோஷம். விழா முடிந்து பெரும்பாலோர் சென்ற பிறகும் ஆங்காங்கே குழுக்களாகப் பிரிந்து அரட்டை... 'அப்பாடா' என்று குதூகலமான அரட்டை...

**- மஞ்சுளா ரமேஷ்**

புகைப்படங்கள் :
**விடிவெள்ளி ஆறுமுகம்.**



பொருள்:
குழந்தைகளுக்கேற்ற உணவு

## முதல் பரிசு

## ரூ. 300/-

## சாக்கோ ப்ரெட்வில்ஸ்

### சாக்லெட் கலவை :

**தேவையான பொருட்கள்:**
பால் - ¼ லிட்டர்
வெண்ணெய் - 200 கிராம்



• புனிதவதி



• வரலட்சுமி



• செல்வி சுமதி

சர்க்கரை - 200 கிராம்
போர்ன்விடா - 3 ஸ்பூன்
(அல்லது)
கோகோ பௌடர் - 1 ஸ்பூன்
முந்திரிப் பருப்பு, வேர்க்கடலை - சிறிதளவு (வறுத்தது)

**செய்முறை :**

ஒரு கெட்டியான வாணலியில், பால், வெண்ணெய், சர்க்கரை எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து மிதமான வெப்பத்தில் அடுப்பில் வைத்துக் கிளறவும். கிளறும் போது, போர்ன்விடா (அ) கோகோ பௌடரைச் சேர்க்கவும். நல்ல கெட்டிப் பாகு பதம் வந்ததும் அடுப்பிலிருந்து இறக்கி வைத்துக் கிளறவும். சாக்லெட் கலவை தயார். தேவையானால் வறுத்த முந்திரிப் பருப்பு, வேர்க்கடலையைப் பொடி செய்து இதில் கலக்கவும்.

### ப்ரெட் பேஸ் :

**தேவையான பொருட்கள் :**
பிரெட் துண்டங்கள் - 12
பேரிச்சம் பழம் டூட்டி ஃப்ரூட்டி ½ கப் இதில், பேரிச்சம் பழத்தையும், செர்ரியையும் பொடிப் பொடியாகக் 'கட்' செய்து கொள்ளவும்.
செர்ரி - ½ கப் (பொடி செய்தது)
எலுமிச்சை ரசம் - ½ கப்
கோகோ - 1 ஸ்பூன்,
பால் பௌடர் - ¾ கப்
காய்ந்த ஆரஞ்சுத் தோல் பவுடர் - 1 ஸ்பூன் (தேவையானால்)

## இம் மாத இல்லத்தரசி



• ராஜி

**செய்முறை :**

முதலில் செர்ரி, டூட்டி ஃப்ரூட்டி, பேரிச்சம் பழம் ஆகியவற்றை எலுமிச்சை பழ ஜூஸில் மூன்று மணி நேரமாவது ஊறவைக்கவும். இதனுடன் காய்ந்த ஆரஞ்சுத் தோல் பவுடரும் கலந்தால், அதன் டேஸ்ட் இன்னும் நன்றாக இருக்கும். இந்த மிக்ஸ் எவ்வளவுக்கெவ்வளவு ஊறுகிறதோ அவ்வளவுக்

கவ்வளவு சுவை நன்றாக இருக்கும்.

கோகோ, பால் பௌடர் இரண்டையும் மிக்ஸ் செய்து வைக்கவும். இப்போது ப்ரெட்டினுடைய ஓரத்தை இன்னொரு ப்ரெட்டின் ஓரத்துடன் ஒட்டிக் கொண்டு வரவும். ஒட்ட வேண்டிய இடத்தில் மட்டும், ஒட்டுவதற்குப் போதுமான தண்ணீர் விட்டு, சப்பாத்தியிடும் குழவியால் சற்று அழுந்த ரோல் செய்து, ஒட்ட வேண்டும். இவ்வாறாக செய்த பிறகு இதன் மேல் சிறிதளவு தண்ணீர் தெளிக்கவும். இப்போது, சூடான சாக்லெட் கலவையை இதன் மேல் விட்டு, ஒரு ஸ்பூனால் ப்ரெட் மேல் பரவச் செய்யவும். இதற்கு மேல் எலுமிச்சை பழ ஜூஸில் ஊறவைத்த ஃப்ரூட்ஸை தூவ வேண்டும். இப்போது இதை உருட்டி ரோல் போல் செய்யவும். சிறிது ஈரப்பசையுடன் இருக்கும் இந்த ரோலை, கோகோ - பால் பௌடர் மிக்ஸில் ரோல் செய்யவும். இதை இப்படியே ப்ளாஸ்டிக் பேப்பரில் சுத்தி ஃப்ரிட்ஜில் வைக்கலாம். அல்லது, ப்ளாஸ்டிக் பேப்பர் மேல் ஈரத் துணியால் சுத்தி வைக்கலாம். அரை மணி நேரம் கழித்து, இந்த ரோலை அரை இன்ச் இடைவெளி விட்டு விட்டு வட்டவாக்கில் 'கட்' செய்யவும். இந்தத் துண்டங்கள் அழகாக சக்கரங்கள் போல் வரும். இதன் சுவை சாக்லேட் கேக்கின் சுவை போலவே இருக்கும். ஓவன் இல்லாமல் சாக்லெட் கேக் சுவையில் - சாக்கோ ப்ரெட் வீல்ஸ் தயார்! செய்வதும் எளிது. குழந்தைகளும் மிகவும் விரும்பி சாப்பிடுவார்கள்.

**- செல்வி சுமதி சுப்ரமணியன்,**
**சென்னை - 61.**

## இரண்டாம் பரிசு ரூ. 200/-

## பானிபூரி

**தேவையான பொருட்கள் :**

மைதா மாவு - ½ கிலோ
பட்டண ரவை - ¼ கிலோ
உப்பு, எண்ணெய் பூரி பொரிக்க தேவையான அளவு.

**பூரி செய்முறை :**

மைதா மாவை மெல்லிய சல்லடையிலும், ரவையை பெரிய கண் உள்ள சல்லடையிலும் சலித்துக் கொள்ள வேண்டும். இவற்றை உப்புடன், நீர் விட்டுப் பிசைந்து 2 மணி நேரம் ஊறவைக்க வேண்டும்.

**பானி தயாரிக்க :**

புளி - 2 எலுமிச்சம் பழம் அளவு (ஊற வைக்கவும்)
வெல்லம் - 2 மேசைக்கரண்டி,
மிளகாய்த் தூள் - 1½ தேக்கரண்டி,
புதினா இலை - 1 கட்டு,
தனியாத்தூள் - 2 தேக்கரண்டி,
சீரகப் பொடி - 1 தேக்கரண்டி,
கரம் மசாலாப் பொடி - ¾ தேக்கரண்டி,
உப்பு - தேவையான அளவு

**பானி செய்முறை :**

ஊறவைத்த புளியை நன்றாகக் கரைத்து வடிகட்டியில் வடித்து ஒரு பாத்திரத்தில் ஊற்றிக் கொள்ள வேண்டும். பின்பு, வெல்லம், உப்பு தவிர மீதி எல்லாப் பொருள்களையும் அம்மியில் வைத்து அரைத்து புளித் தண்ணீரில் நீர் போல் (ரசம் போல) கரைத்து உப்பு, வெல்லம் போட்டு வைத்து விட வேண்டும்.

**பரிமாறுவதற்குத் தேவையான பொருள்:**

கடலை மாவில் மிளகாய்ப் பொடி, உப்பு கலந்து சேமியா பிடியில் எண்ணெய் கடாயில் பிழிந்தால் வரும்
சேமியா மிக்சர் - 300 கிராம்
பெரிய வெங்காயம் - 8 பெரியது
காரட் - 6 பெரியது
(துருவிக் கொள்ள வேண்டும்)
கொத்துமல்லித் தழை கட்டு - 2 பெரியது.

### எதற்குமே முன் யோசனை....

காஸ் அடுப்பைப் பற்ற வைக்கும் முன்பு மட்டுமல்ல; தேர்வு எழுதுவதற்கு முன், பிஸினஸ் பேசுவதற்கு முன், கல்யாணத்திற்கு முன் என வாழ்வின் பல விஷயங்களிலும் தேவையான எல்லாவற்றையும் தயார்ப்படுத்திக் கொண்டு - பின்னரே ஆரம்பியுங்கள். வெற்றி நிச்சயம். காஸ் அடுப்பைப் போல நல்ல பலன்களைப் பெறலாம்!

– எஸ். மாலதி



1000 பரிசுகள்

ஸ்ரீ லக்ஷ்மி முத்து மாளிகையின்

# பரிசு மழை பொழியும் முத்துத் திருவிழா!

முதல் பரிசு ரூ.10,000

**வாடிக்கையாளர்கள் வேண்டுகோளுக்கு இணங்க 31.7.94 வரை நீடிக்கப்பட்டுள்ளது.**

| | | |
|---|---|---|
| 1 முதல் பரிசு | – ரூ.10,000 | |
| 2 இரண்டாம் பரிசு | – தலா | ரூ.5,000 |
| 4 மூன்றாம் பரிசு | – தலா | ரூ.2,500 |
| 10 நான்காம் பரிசு | – தலா | ரூ.1,000 |
| 50 ஐந்தாம் பரிசு | – தலா | ரூ.500 |
| 100 ஆறாவது பரிசு | – தலா | ரூ.250 |
| 200 ஏழாம் பரிசு | – தலா | ரூ.100 |
| 300 எட்டாம் பரிசு | – தலா | ரூ.75 |
| 333 ஒன்பதாம் பரிசு | – தலா | ரூ.50 |

பரிசுகள் யாவும் முத்து, மற்றும் அமெரிக்கன் டைமண்ட் நகைகளாக மட்டுமே வழங்கப்படும்.

**1000 பரிசுகள்!**

எங்களிடம் நீங்கள் நகை வாங்கும் ஒவ்வொரு ரூ.500–க்கும் ஒரு பரிசுக் கூப்பன் வழங்கப்படும். ஜூன் மாதத்தில் விற்பனையாகும் மொத்தக் கூப்பன்களில் 1000 கூப்பன்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப் பட்டு பரிசுகள் வழங்கப்படும். ஒரே வாடிக்கையாளர் எத்தனை கூப்பன்கள் பெற்றாலும் அத்தனையும் குலுக்கலில் சேர்த்துக் கொள்ளப்படும்.

வாடிக்கையாளர்கள் முன்னிலையில் குலுக்கல் நடைபெறும் நாள் – 15.8.94.

## ஸ்ரீ லக்ஷ்மி டெபாசிட் சேகரிப்பு விழா

டெபாசிட் செய்வோருக்கும் பரிசு. டெபாசிட்டரை அறிமுகம் செய்வோருக்கும் பரிசு. டெபாசிட்டுக்கு வட்டியும் உண்டு. எங்களிடம் தவணை முறையில் நகைகள் வாங்கும் சலுகையும் உண்டு.

டெபாசிட்டரை அறிமுகம் செய்வோருக்கு டெபாசிட் தொகையில் 5% மதிப்புக்கு ஈடான முத்து பரிசாக வழங்கப்படும்.

கிரெடிட் கார்டில் தவணை முறையில் நகை வாங்கினால், முதல் 5 மாதங்களுக்கு வட்டி கிடையாது. அதற்கு மேல் 24% வட்டி வசூலிக்கப்படும்.

கிரெடிட் கார்டை நீங்களும், உங்கள் உறவினர்கள், நண்பர்களும் பயன்படுத்த லாம்.

**டெபாசிட் காலம் – 36 மாதங்கள்**

| டெபாசிட் தொகை | டெபாசிட்டுக்கு பரிசு | வட்டி | கிரெடிட் கார்டு |
|---|---|---|---|
| ரூ.1000 | 5 கி. முத்து | 24% | டெபாசிட் |
| ரூ.2500 | 13 கி. முத்து | 24% | தொகைக்கு |
| ரூ.5000 | 26 கி. முத்து | 24% | ஈடான |
| ரூ.10000 | 55 கி. முத்து | 24% | மதிப்பு |

வட்டி 3 மாதத்திற்கு ஒரு முறை. காசோலை மூலம் முன்னதாக வழங்கப்படும்.

**ஸ்ரீ லக்ஷ்மி முத்து மாளிகை**

கடை எண் 8 & 9, காசி ஆர்கேட்
116, தியாகராயா சாலை,
வடக்கு போக் ரோடு சந்திப்பு,
தி.நகர், சென்னை – 600 017.



Exporters & Wholesale Dealers in : Hyderabad Pearls • Coral Beads • Precious & Semi Precious Stones • Beads and Synthetic Stones • All Faces Rudhraksha Malas • Spatica Malas • Lingam • Tulasi Malas • Fancy American Diamond Silver Jewellery.

இவற்றைப் பொடிப் பொடியாக வெட்டிக் கொள்ள வேண்டும்.

**பூரி தயாரிக்கும் முறை :**

சப்பாத்திக் கல்லில் பூரிக்குத் தேய்ப்பது போல கலந்து வைத்துள்ள மாவைக் கொஞ்சம் தடிமனாக தேய்த்து குங்குமச் சிமிழ் மூடியால் வட்ட வட்டமாக ஒரே அளவில் 'கட்' செய்து கொள்ளவும். பின் காய்ந்த எண்ணெயில் நிதானமாகப் போட்டுப் பொரிக்க வேண்டும். அப்பொழுதுதான் எல்லா பூரியும் உப்பிக் கொண்டு வரும். கொஞ்சம் பிரவுனாக எடுக்க வேண்டும்.

**பரிமாறுவது :**

சிறு தட்டில் 5 பூரிகளை அடுக்க வேண்டும். நடுவில் துளை போட்டு பானியை ஊற்றவும். பின் பெரிய வெங்காயம், கொத்து மல்லி, காரட், மிக்சர், சேமியா இவற்றைத் தூவி விட வேண்டும்.

- புனிதவதி முருகதாஸ், கோவை - 9.

## மூன்றாம் பரிசு ரூ. 100/-

## உப்புமா கொழுக்கட்டை

**தேவையான பொருட்கள் :**

புழுங்கல் அரிசி - 2 டம்ளர்
துவரம் பருப்பு - ½ டம்ளர்
உப்பு - தேவையான அளவு
மிளகு - ஒரு ஸ்பூன்
தேங்காய் - ½ மூடி
மிளகாய் வற்றல் - 6
கொத்துமல்லி, கருவேப்பிலை,
இஞ்சி - தேவையான அளவு
உளுத்தம் பருப்பு - 1 ஸ்பூன்
கடுகு - 2 ஸ்பூன்
க. எண்ணெய் - 2 ஸ்பூன்

**செய்முறை :**

புழுங்கல் அரிசியை நன்றாக ஊற வைத்து ரவை போல் அரைக்க வேண்டும். வழிக்கும் பதத்தில், ஊறவைத்த துவரம் பருப்பையும் சுற்றி அரைத்து எடுக்க வேண்டும்.

தேங்காய்த் துருவி கொட்டி உப்பு சேர்க்க வேண்டும். அடுப்பில் கடாய் வைத்து எண்ணெய் ஊற்றி தாளித்து நீர் வற்றும் வரை கிளற வேண்டும். இறக்கும் போது இஞ்சி, கருவேப்பிலை, கொத்துமல்லி போட்டு இறக்கி கொழுக்கட்டையாகப் பிடித்து இட்டிலி தட்டில் வேகவைத்து எடுக்க வேண்டும். குழந்தைகள் விரும்பிச் சாப்பிடுவார்கள்.

- இ. வரலட்சுமி,
பாண்டிச்சேரி - 9.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## ஜவ்வரிசி வடை

குழந்தைகள் சாதாரணமாக பலகாரமாகச் சாப்பிடுவதை விட நொறுக்குத் தீனியையே விரும்புவார்கள். அதில் ஒன்று ஜவ்வரிசி வடை.

**தேவையான பொருட்கள் :**

ஜவ்வரிசி - 100 கிராம்
அரிசி மாவு - 75 கிராம்
புளித்த மோர் - ½ கப்
காரப் பொடி - 2 டீஸ்பூன்

இப்போது உபயோகத்தில் உள்ள சப்பாத்திக் கல்லில் (தரையில் உட்கார்ந்து) சப்பாத்தி இடும்போது, மிகவும் குனிந்து இட வேண்டியிருப்பதால், முதுகும், தோளும் சீக்கிரமே வலிக்க ஆரம்பித்து விடுகிறது. சப்பாத்திக் கல்லின் பாதங்களை இன்னும் கொஞ்சம் உயரமாக வைத்து வடிவமைத்தால் எவ்வளவு சப்பாத்தி என்றாலும் முதுகு நோகாமல் இடலாமே!

- நிர்மலா ரமணி



பெருங்காயப் பொடி - 1 டீஸ்பூன்
உப்புத் தூள் - தேவைக்கேற்ப
பொறிப்பதற்கு எண்ணெய்
- அவரவர்கள் தேவைக்கும் விருப்பத்திற்கும் ஏற்ப.

**செய்முறை :**

ஜவ்வரிசியை புளித்த மோரில் ஒரு மணி நேரம் ஊறவைக்க வேண்டும். ஜவ்வரிசி நன்கு ஊறிய பிறகு அதனுடன் அரிசி மாவு, காரப் பொடி, பெருங்காயப் பொடி மற்றும் உப்புத் தூள் போட்டு நன்றாகப் பிசைய வேண்டும். மாவு உருட்டிப் போடும் பதம் இருக்க வேண்டும். பிறகு வாணலியை அடுப்பில் போட்டு எண்ணெய் ஊற்றி காய வைக்கவும். மாவை வடை போல் தட்டி காய்ந்த எண்ணெயில் போட்டுப் பொரித்து எடுக்கவும்.

பொறித்து எடுத்த வடையைச் சுவைக்க மிகவும் ருசியாக இருக்கும். குழந்தைகளும் விரும்பிச் சாப்பிடுவார்கள். நமக்கும் வேலை எளிதில் முடியும்.

- ஜெயஸ்ரீ நாகராஜன்,
கோவை - 18.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## ஜம்போன் நிற லட்டு

**தேவையான பொருட்கள் :**
கடலை பருப்பு - 250 கிராம்
பயத்தம் பருப்பு - 25 கிராம்
கசகசா - 10 கிராம்
கொப்பரை - ½ மூடி
சர்க்கரை - 150 கிராம்
ஏலக்காய், ஜாதிக்காய் - சிறிதளவு

மேலே குறிப்பிட்ட பொருட்களில் 15 முதல் 18 வரையான (எலுமிச்சை அளவு) லட்டு பிடிக்கலாம்.

**செய்முறை :**

சர்க்கரையை நன்றாக மிக்ஸியில் அரைத்து வைத்துக் கொள்ளவும். பிறகு மேலே குறிப்பிட்ட சாமான்களை தனித் தனியாக சிவப்பாக வறுத்து ஒன்றாக மிக்ஸி யில் போட்டு நைசாக அரைத்து, கடைசியில் சர்க்கரைப் பவுடரையும் சேர்த்து அரைத்துக் கொள்ளவும். ஜாதிக்காய், ஏலக்காய் பவுடரையும் போட்டு கலந்து கொள்ளவும்.

வாணலியில் நெய் வைத்துக் காய்ந்ததும் ரெடியாக வைத்திருக்கும் மாவு மேல் ஊற்றிச் சூடாக லட்டு (எலுமிச்சை அளவு) பிடிக்கவும்.

- ஆர். ராஜி, மயிலாடுதுறை - 1.




# காயத்ரி

## 6

தனி ஏ.ஸி. அறைக்குள், அந்த லைப்ரேரியன் ப்ரியாவும், மகாவும், வசந்தாவும் அமர்ந்தார்கள்.

உள்ளே வள்ளலார் படம் தொங்கியது.

பூச்சருகுகள் இரண்டு, அதன் சட்டத்தின் ஓரம் ஒட்டி இருந்தன.

"முதல்லே இந்தப் புத்தகம் உங்களுக்கு எங்கே கிடைச்சதுன்னு சொல்லுங்க" என்றாள் ப்ரியா.

பருமனாக உடல். கனமான கன்னங்கள், தடிமனான உதடுகள்.

மகா பேசினாள்.

"பிரசாந்த் வீட்டு பரண் மேலே ஒரு பெட்டி இருந்திச்சு. அதுக்குள்ளே இந்தப் புத்தகத்தை நல்ல கவர் போட்டு ஸீல் போட்டு வச்சிருந்தது. என்னவோ ஏதோன்னு பிரிச்சுப் பார்த்தோம். இந்த ஒண்ணுமில்லாத புத்தகம்தான் இருக்கு."

"நோ, அப்படி நினைச்சுடாதீங்க" என்று குறுக்கிட்டாள் ப்ரியா.

மகா தொடர்ந்தாள்.

"ரைட் மேடம் புரிஞ்சுக்கிட்டேன்! ஏதாவது விசேஷம் இல்லைன்னா இந்த சாதாரண

பழைய நாவலை அப்படி யாரும் பேப்பர்லே மடிச்சு வைக்க மாட்டாங்களே."

"ஆமாம். இந்த நாவல்லே ஒரு ரகசியமே இருக்கு."

வசந்தா முகம் வெறுமனே இருந்தது. எதையும் நம்பாத பாவம் அதில் தெரிந்தது.

லைப்ரேரியன் ப்ரியா ஆரம்பித்தாள்.

"அதெல்லாம் நடந்து எட்டு வருஷம் ஆகி விட்டது. பிரசாத் எங்க லைப்ரரியின் மெம்பர். நிறைய புத்தகம் படிப்பார். தத்துவ புத்தகங்களும் படிப்பார். இந்த நாவல்களை யும் படிப்பார். எங்கேயாவது ஊருக்குப் போக வேண்டும் என்றால் இரண்டு மூன்று நாவல் களை எடுத்துக் கொண்டு போவார்!

ஒரு நாள் அவர் வந்த போது ஒரு அம்மா வந்திருந்தாள். அவள் ஒரு மிட் வைஃப்! நிறைய படிப்பவள். அப்போது நான் கவுண்டரில் இருந்தேன். இந்த 'இரவு நேரத்தில் இரு இளமைகள்' புத்தகத்தைப் படித்து விட்டுத் திரும்பக் கொண்டு வந் திருந்தாள். அந்த மிட்வைப் என்னிடம்,

'மேடம்! தொந்திரவுக்கு மன்னிக்கணும். எனக்கு நாவல் படிக்கிறதிலே ரொம்ப ஆர்வம். துப்பறியும் நாவல் ரொம்ப ரொம்ப பிடிக்கும். அதைப் படிச்சு முடிக்கலைன்னா தூக்கம் வராது.'

நாவல்லே ஏதாவது பக்கம் துளி கிழிஞ்சிருந்தா கூட எனக்குப் பிடிக்காது. தவிச்சுப் போயிடுவேன். ஆனா பாருங்க! இந்த நாவல்லே ஒரு பக்கம் முழுக்கவே காணவில்லை" என்றாள்.

திடுக்கிட்டுப் போனேன். 'எந்தப் பக்கம்மா?' என்று கேட்டேன்.

'37'ஆம் பக்கம் பாருங்க. ஹீரோ உமா காந்த் பணக்கார விச்வா வீட்டுக் காம் பவுண்டிலே ஏறிக் குதிக்கப் போறான். அப் புறம் என்னம்மா நடந்தது? தயவு செய்து சொல்லுங்களேன்' என்று சொன்னாள்.

நான் பரபரப்பாக 37 ஆம் பக்கம் திருப்பினேன்.

அந்தப் பக்கம் முழுசா இல்லை. "மேடம் நீங்கதானே நாவலை எடுத்துட்டுப் போனீங்க? நீங்கதான் அதைக் கிழிச்சிருக்கணும். இப்போ நீங்க ஃபைன் '5' ரூபாயை கட்டணும்" என்





வெந்தயக் குழம்பு பண்ணி இறக்கும் போது, முடிவில் ஒரு ஸ்பூன் சுக்குப் பொடியை போட்டுப்பாருங்கள். வாசனை மூக்கைத் துளைக்கும். சுவையோ வெகு ஜோர். அதே போல் நல்லெண்ணெய் ஒரு ஸ்பூன் விட்டால் ரொம்ப ருசியாக இருக்கும்.

- மாலதி

றேன்.

அந்த மிட்ஸைப் முகம் வெளுத்தது.

'மேடம் மேடம் அப்படிச் சொல்லாதிங்க. அந்த மாதிரி நான் எதுவும் செய்யலை. நான் ரொம்ப ஏழை. எனக்கு ஒரே பொழுது போக்கு இந்த நாவல்தான். அதைத் தடுத்துடாதிங்க. என்னாலே அஞ்சு ரூபாய் கொடுக்க முடியாது. நான் பரம ஏழை' என்று சொன்னாள்.

அந்த அம்மா கண்ணிலே கண்ணீர் வந்தது. கைக் குட்டையை எடுத்து மூடினாள்.

எனக்குப் பரிதாபம் ஏற்பட்டது!

'அழாதிங்க. புத்தகத்திலே பக்கம் கிழிஞ்சிருந்தா அதை எடுத்திட்டுப் போகும்போதே கவனிச்சு என்கிட்டே சொல்லிடணும். அப்புறம் வந்து சொல்லக் கூடாது. யார் கிழிச்சான்னு நாங்க எப்படிக் கண்டுபிடிக்கிறது?' என்று சொன்னேன்.

அந்த அம்மா சமாதானம் ஆகிப் போய் விட்டாள்.

அதே நேரத்தில் பக்கத்திலே பிரசாத் நின்று கொண்டிருந்தார்.

'மேடம்! அந்த அம்மா படிச்ச புத்தகத்தை இப்படிக் கொடுங்க!' என்று கேட்டார்.

கொடுத்தேன்.

புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தார். அவர் படிக்காத புத்தகம்.

'நான் படிக்கிறேன்' என்று எடுத்துப் போனார்.

இரண்டு நாள் ஆகியிருக்கும்.

பிரசாத் திரும்பி வந்தார். ஒருவித பரபரப்பில் இருந்தார்:

என்னைப் பார்த்து, 'மேடம், உண்மையிலே அந்த 37-ஆம் பக்கம் ரொம்ப இன்டரெஸ்டிங்கான பக்கம். உங்க லைப்ரரியிலே இரண்டாவது காப்பி இருக்காதா?' என்று கேட்டார்.

நாங்கள் ஒவ்வொரு நாவலுக்கும் இரண்டு புத்தகம் வாங்குவோம்.

நானும் அவரும் அந்த இரண்டாவது புத்தகத்தை அலமாரிகளில் தேடினோம்.

கிடைக்கவில்லை. எங்கேயோ புகுந்து விட்டது.

"ஸார்! அதிலென்ன ஸார் அப்படி சுவாரஸ்யம்! இதெல்லாம் வெறும் கற்பனைக் கதை. அதிலே ஒரு பக்கம் இல்லாட்டி புரிஞ்சுக்க முடியாதா?" என்று கேட்டேன்.

"அது இல்லை பாயிண்ட் மேடம். இதிலே எனக்குப் பெரிய விஷயம் தெரியறதுக்கு வாய்ப்பு இருக்கு" என்றார், பரபரப்பாக.

- அதென்ன அப்படி பெரிய விஷயம்?" என்றேன்.

· மேடம் இதைப் பாருங்க என்று சொல்லி அந்த நாவலின் 39-வது பக்கத்தைக் காட்டினார்.

நான் பார்த்தேன். அந்தப் பக்கத்தில் வார்த்தைகளுக்குக் கீழேயும் மேலேயும் பல இடங்களில் கோடுகள் விழுந்திருந்தன. கோடுகள் என்றால் நேரடியான கோடுகள் அல்ல. மேல் பக்கத்தில் அழுத்தமாக எழுதினால் அடுத்த பக்கத்தில் அதன் பள்ளம் விழும் இல்லையா? அது போல கோடுகள்.

பால் பாயிண்டையோ, பேனாவாலோ எழுதினால் விழும் கோடுகளைப் போல அவை இல்லை.

ஆழமாக அவை பதிந்திருந்தன.

37 ஆம் பக்கத்தில் கோடு போட்டது ஒரு கூர்மையான ஆணியாக இருக்க வேண்டும்.

அல்லது கத்தி முனையாக இருக்க வேண்டும்.

37-வது பக்கத்தில் வைத்து அழுத்தியது. 39 ஆம் பக்கத்தில் விழுந்து, 41வது பக்கத்திலும் லேசாக விழுந்திருந்தது.

சொல்லப் போனால் 39 ஆம் பக்கத்தில் சில இடங்களில் அவை ஓட்டையும் இட்டிருந்தன."

ப்ரியா இந்த இடத்தில் நிறுத்தி, "உங்க புத்தகத்தை இப்படிக் கொடுங்கள்!" என்று கேட்டாள்.

மகா புத்தகத்தைக் கொடுத்தாள்.

அவசரமாக ப்ரியா அந்த '39'வது பக்கத்தைத் திருப்பினாள்.

வெளிச்சத்தில் இப்படியும் அப்படியும் திருப்பினாள்.

அதிசயம்!

இன்னும் அந்தக் கோடுகள் 39வது பக்கத்தில் அப்படியே பதிந்து இருந்தது.

வருடங்கள் ஆகியதில் சிறிதே மங்கி இருந்தது.

ப்ரியா கூறியது போல் ஏதோ கூரிய ஆணியாலோ, கத்தியாலோ கோடு கிழித்திருக்க வேண்டும்.

அதன் கூரிய அழுத்தம் 39, 41 பக்கங்களில் இன்னும் நன்றாகவே தெரிந்தது.

மகாவிடம் ப்ரியா காட்டினாள்.

மகா வசந்தாவிடம் காட்டினாள்.

எந்தவித ஆர்வமும் இல்லாமல் வசந்தா பார்த்தாள்.

ப்ரியா உள்ளே எழுந்து போய் திரும்பி வேகமாக வந்தாள்.

கையில் ஒரு பைண்ட் புத்தகத்தோடு வந்தாள்.

'ஸாரி!' என்று சொல்லி உட்கார்ந்தவள், கதையைத் திரும்ப ஆரம்பித்தாள்.

"பிரசாந்த் திரும்பிப் போன இரண்டு நாள் திரும்பவில்லை. பிறகு வந்தார். அதே பரபரப்பில் வந்தார்."

"மேடம் 'இரவு நேரத்தில் இரு இளமைகள்' வேறு ஒரு புத்தகம் வாங்கிட்டேன். அந்தப் புத்தகத்தைத் தையல் பிரிச்சு, அதனோட 37-வது பக்கத்தை எடுத்துக்கிட்டேன். எனக்கு ஒரு யோசனை தோணித்து. 39-வது பக்கத்திலே வார்த்தைங்களுக்கு மேலேயும் கீழேயும் பள்ளம் விழுந்திருக்கு. சில இடங்களிலே கீறியும் இருக்கு. அதனாலே 37-வது பக்கத்து வார்த்தைகளை யாரோ வெட்டி எடுத்திருக்கணுமின்னு நினைச்சேன். அது என்ன வார்த்தைகள்னு கண்டுபிடிக்க விரும்பினேன். அதற்காக ஒரு யுக்தி செய்தேன்" என்று சொன்னார்.

அதாவது 39-வது பக்கத்தை மேலே வைத்து, அதன் கீழே சரியாகப் பொருத்தும்படியாக 37-வது பக்கத்தை வைத்திருக்கிறார்.

39-வது பக்கத்திலே பள்ளம் இருந்த இடங்களில் ஒரு மொட்டை பென்சில் வைத்து அழுத்திக் கோடு போட்டிருக்கிறார்.

ஆக, 39 பக்கக் கோடுகள் அப்படியே 37க்கு மாற்றமாகின.

37-ல் விழுந்த அந்தக் கோடுகள் வார்த்தைகளைச் சரியாக வரையறுத்தன. அது என்னென்ன வார்த்தைகள் என்று எழுதிக் கொண்டார். முதலில் விளங்கவில்லை! பிறகு அது விளங்கி விட்டது.

ஒரு முக்கிய விஷயத்தில் அவருக்கு அதன் மூலம் ஒரு துப்பு கிடைத்திருக்கிறது.

'அது என்ன?' என்று அவரிடம் கேட்டேன்.

"ஒரு பெரிய விஷயம்! ஆனா ரகசியமான கேஸ்! வெளியிலே தெரியாது. அந்தக் கேஸ்லே எனக்குத் துப்பு தெரிஞ்சிருப்பது பெரிய ஆச்சரியம்! இதை நானே கண்டு பிடிச்சு அவங்களுக்கு உதவப் போறேன்" என்றார்.

அந்த நாவலை யார் யார் எடுத்துப் போய் படித்தார்கள் என்பதற்கு ஒரு லிஸ்ட் கேட்டார்.

நான் லெட்ஜரை எடுத்துக் கொடுத்தேன்.

அவர் அதிலிருந்து பெயர், விலாசங்களை எழுதிக் கொண்டார்.

"ரொம்ப ஆபத்தான விஷயம் மேடம்! இருந்தாலும் துணிஞ்சு இறங்கப் போறேன்!" என்று சொன்னார்.

இரண்டு நாளில் திரும்பி வந்து முழு விவரமும் சொல்வதாகச் சொன்னார்.

ஆனால் திரும்பி வரவே இல்லை.

அதனாலேதான் எனக்கும் கவலை. அவர் உயிரோடு இருக்கிறாரா? என்று கேட்டேன். இப்போது புரிஞ்சுதா, அப்படிக் கேட்டதற்குக் காரணம்?

என்று சொல்லி முடித்தாள் ப்ரியா.

வசந்தாவும் மகாவும் நிசப்தமானார்கள். அவரவர் சிந்தனையில் அவரவர் மூழ்கினார்கள்.

வசந்தா முதலில் பேசினாள்.

"மேடம்! அப்படி என்ன ரகசியம் அந்த வார்த்தைகளிலே இருந்தது?"

ப்ரியாவுக்குப் புன்னகை வந்தது. "எனக்கும் அதைத் தெரிஞ்சுக்க ஆசை தாம்மா. நானும் துடிச்சுக்கிட்டே இருந்தேன். அப்புறம் அவர் வரவே இல்லை. எனக்குப் பலவிதத்திலே குழப்பம். எப்படியும் அந்த கேஸ் பற்றி தெரிஞ்சிருக்கணுமின்னு ஒரே ஆவல். ஆனால் அதைத் தணிக்க முடியலை. என்ன செய்வது? அப்படியே இருந்துட்டேன். சோதனையப் பாருங்க, போன ரெண்டாம் மாசம் அந்த நாவலோடு இரண்டாம் காப்பி எனக்குக் கிடைச்சது. (கையில் உள்ள புத்தகத்தைக் காட்டினாள்) ஆனால் இதை வைத்து நான் எப்படி துப்பறிய முடியும். நல்லவேளை நீங்க அந்த ஒரிஜினல் புத்தகத்தைக் கொண்டு வந்துட்டீங்க. அதிலேதான் அந்தக் கோடுகள் இருக்கு. உங்களுக்கும் இதிலே ஆர்வம் இருந்தா, இந்த ரெண்டு புத்தகத்தையும் வச்சு அது என்ன ரகசியச் செய்தின்னு கண்டுபிடிச்சுடலாம். சம்மதந்தானா?"

ப்ரியா நிறுத்தினாள்.

"சம்மதந்தான் மேடம்" என்று மகா கூறினாள்!

அதன் பிறகு வேலைகள் மளமளவென்று நடந்தன.

தன் புத்தகத்திலிருந்து 37வது பக்கத்தை பிரித்து வெளியே எடுத்தாள்.

வசந்தா கொண்டு வந்த புத்தகத்தில் 39-வது பக்கத்துக்குக் கீழே பொருத்தமாக வைத்தாள்.

39-ல் ஏற்கெனவே பள்ளமாக இருந்த கோடுகளை ஒரு மொட்டை பென்சிலால் அழுத்தி வரைந்தாள்.

அப்படி அழுத்தி வரைந்த கோடுகள் கீழே 37-ல் விழுந்தன.

37-ஐ எடுத்து அவர்களுக்குக் காண்பித்தாள்.

அவர்கள் அந்தப் பக்கத்தைப் படித்தார்கள்.

"உமாகாந்த் காம்பவுண்ட் சுவர் பக்கம் வந்தான். '**காத்திருக்கவும்**' என்று கூட்டாளி சொல்லி இருந்தான். ஒரு **செய்திக்கு** எவ்வளவு நேரம் காத்திருப்பது? இதற்குள் ஒரு ஆளை அவன் **அனுப்ப** வேண்டாமா?

"காரியத்தை முடித்தால் கையில் **லட்ச ரூபாய்**" என்று கடத்தல் குழுத் தலைவர் கூறி இருந்தார். ஆனால் பலர் அவனிடம் 'காம்பவுண்டுக்குள் போனால் **உன்** கதி அதோகதி. **உயிரோடு** திரும்ப மாட்டாய்!" என்று கூறியிருந்தார்கள்.

பரவாயில்லை! இப்போது **தேவை** பணம்! ஆகவே சவாலாக இந்தக் காரியத்தில் இறங்க வேண்டியதுதான்! உமாகாந்த் எம்பி சுவர் ஏறினான். உள்ளே இருட்டு. பங்களா முகப்பில் மட்டும் வெளிச்சம்! அங்கே அந்த எதிரி தேவராஜா தனது **மகனை** அணைத்தவாறு உலாவிக் கொண்டிருந்தார். **அடுத்த** கணம் உமாகாந்த் உள்ளே குதித்தான்.

அதில் கோடு இட்டிருந்த வார்த்தைகளைத் தனித்தனியாக எழுதினாள்.

காத்திருக்கவும்
செய்திக்கு
அனுப்ப
லட்ச ரூபாய்
உன்
தேவை
மகனை
அடுத்த

"இதென்ன வார்த்தைகள் இப்படி இருக்கு?" என்றாள் மகா!

"இருங்க படிக்கிறேன் பாருங்கள்" என்று சொன்ன ப்ரியா அந்த வார்த்தைகளைச் சரியாக முறைப்படுத்தி படித்தாள்.

'உன் மகனை உயிரோடு அனுப்ப லட்ச ரூபாய் தேவை. அடுத்த செய்திக்கு காத்திருக்கவும்.'

ப்ரியா அதை வாசித்தவுடன் வசந்தாவுக்குச் சிறிது சுவாரஸ்யம் பற்றியது.

(தொடரும்)

கர்நாடகத்தில் மேற்குத் தொடர்ச்சி மலையில் உள்ள குடகுநாடு அழகு கொஞ்சும் மலைப்பிரதேசம். இந்த மலைக்கும் உயர்தர காஃபிப்பயிருக்கும் உள்ள தொடர்பு தொன்மையானது, வளமையானது, என்றும் பசுமையானது.

குடகு தரும் 100% கலப்படமற்ற ஃபில்டர் காஃபியை ஒரு முறை பருகியவர்கள் வேறு எதையும் அருந்த மாட்டார்கள். கூர்க் காஃபியில் அடங்கியுள்ளவையே இதன் தனித்தன்மைக்குக் காரணம். தூய மலைக்காற்றும், கறுத்த நிறமுள்ள செழிப்பான மண்ணும், பொழியும் மழையும், சூரிய கிரணங்களை இதமாகப் பாய்ச்சும் மரங்களடர்ந்த மலைப்பிரதேசமும் சேர்ந்து, காஃபிக் கொட்டைகளை மெல்ல, பதமாக முற்ற வைக்கின்றன.

குடகில் காஃபி வளர்ப்பது ஒரு கலை. குடகு நாட்டவர் பரம்பரை பரம்பரையாகப் படித்து கை தேர்ந்துள்ள அருமையான கலை. இந்த கலையில் விளைவது நறுமணமும் நற்சுவையும் நிறைந்த ஓர் அற்புத காஃபி : சிக்கரி சேர்க்கத் தேவையில்லாத காஃபி. இந்த ஃபில்டர் காஃபியை உங்களுக்கு கன்ஸாலிடேட்டட் காஃபி நிறுவனத்துடன் சேர்ந்து தருவது டாடா நிறுவனம்.

அடங்கியுள்ளவை :

மலைக்காற்று,

செழுமையான

நிலம்,

மழை,

## கூர்க்

இவற்றுடன்

டாடா நிறுவனம்.

குடகின் மரபைப் பின்பற்றித் தயாரிக்கப்படும் " கூர்க் " இந்தியாவின் மிகத் தூய்மையான, கலப்படமற்ற ஃபில்டர் காஃபி. துளியும் சிக்கரி சேர்க்காத 100% காஃபி.

டாடா நிறுவனமும் கன்ஸாலிடேட்டட் காஃபி லிமிடெட்-டும் குடகின் மிகப்பெரிய காஃபித் தோட்டங்களின் உடைமையாளர்களாக இருப்பதால் " கூர்க் " ஃபில்டர் காஃபி 100% சிக்கரி இல்லாமல் வருவது மட்டுமல்ல, மற்ற எந்த காஃபியையும் விட இன்னும் பசுமை மாறாது உங்களுக்கு டாடாவின் தோட்டங்களிலிருந்து வருகிறது.




100% கலப்படமற்ற " கூர்க் " ஃபில்டர் காஃபியை ருசித்துப் பருகுங்கள் ; ஆனந்தத்துடன் அனுபவியுங்கள். இதில் அடங்கியுள்ளவை இப்போது உங்களுக்குத் தெரியுமே - எனவே இனி உங்களுக்கு புரியும் : எதனால் இது இத்தனை அருமையாக இருக்கிறது, எதனால் இதன் மணமும் சுவையும் இத்தனை சிறப்பாக இருக்கிறது, எதனால் இது ஆத்ம திருப்தியை அளிக்கிறது என்பது.







பெருமிதத்துடன்
வளர்த்த காஃபி.



Mudra:CCL:2274:94:TAM

# (அருகம்)புல்லானாலும்

விமலா ரமணி

சந்துரு டைனிங் டேபிளின் முன் வந்து அமர்ந்தான். டம்ளரில் இதென்ன பச்சையா? பாமா புதிதாக ஏதாவது ஓவியம் கிவியம் கற்றுக் கொள்ள ஆரம்பித்திருக்கிறாளா என்ன? பச்சைக் கலரை கரைத்து வைத்திருக் கிறாளோ? சே..சே..பாமா ரொம்ப நல்லவள். எதுவாக இருந்தாலும் தன் கணவனிடம் சொல்லிவிட்டுத் தான் செய்வாள்.

இவன் காபிக்காகக் காத்திருந்த போது தான் பாமா சமையல் அறையிலிருந்து வெளிப் பட்டாள்.

"என்னங்க இன்னும் நீங்க குடிக் கலையா?"

"இன்னிக்கு என்ன விசேஷம்? காபி சாப் பிடக் கூட குளிக்கணுமா?"

"ஐயோ அதில்லீங்க டம்ளர்லே உங்களுக் காக வைச்சிருந்தேனே...அதைக் குடிக்கலை யான்னு கேட்டேன்..."

"இதுவா? இதென்ன? என்னமோ பச்சையா?"

"அருகம்புல் ஜூஸ்...வெறும் வயித்துலே குடிச்சா உடம்புக்கு ரொம்ப நல்லது. பத்திரி கையிலே எல்லாம் பத்தி பத்தியா எழுத றாங்க..."

இவனுக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

பாமா அருகம்புல் ஜூஸின் பெருமை களைக் கூற ஆரம்பித்தாள். "நேச்சர் க்யூர் - டாக்டர் ஒருவர் பக்கத்து வீட்டுக்கு வந் திருந்தாருங்க. பக்கத்து வீட்டுக்காரி ஒடம் புலே இருந்ததெல்லாம் பறந்திடிச்சி!"

"என்ன நகைகளா?"

"சீ...அதில்லீங்க வியாதி...உடம்பெல்லாம் வியாதி...தலைவலி, டயப்படீஸ்...சளி இப் படின்னு நிறைய. அவர் சொன்ன இந்த அரு கம்புல் ஜூஸை ஒரு மண்டலம் அதாவது 48 நாள் குடிச்சா போயே போச்சு!"

"அது சரி இப்போ இது எதுக்கு எனக்கு?"

"பக்கத்து வீட்டுக்காரி கிட்டே இருந்து புல் வாங்கி இன்னிக்கு நானும் ஜூஸ் போட் டிருக்கேன். நான் மட்டும் ஆரோக்கியமா இருந்தா போதுமா? நீங்களும் இருக்க வேண் டாமா? அதான் முதல்லே வெறும் வயித்துலே ஜூஸ் குடிங்க. அப்புறம் ஒரு மணி நேரம் கழிச்சுத்தான் காபி!"

இவனுக்குக் காலையில் எழுந்தவுடன் காபி குடித்தால்தான் எல்லா வேலைகளும் ஓடும். பாரதியார் பாடலையே இவன் மாற்றிப் பாடுவான்.

"காலையில் எழுந்தவுடன் காபி"- என் பான். இவனாவது ஒரு மணி நேரம் கழித்து காபி குடிப்பதாவது?

"அம்மா தாயே ஆளைவுடு. இந்த எக்ஸ்பிரிமெண்ட்டெல்லாம் உன்னோட நிறுத்திக்கோ. எனக்கு வேண்டாம்."

முகத்தை நொடித்தபடி டேபிளில் அவனுக்காக வைத்திருந்த ஜூஸை 'மடக்' கென்று குடித்துவிட்டு பாமா உள்ளே போனாள். சற்று நேரத்தில் கையில் காப்பியு டன் வந்தாள்.

காபியைச் சுவைத்தபடி சந்துரு






# புருஷன்

யோசித்தான்.

காபியில் கூட அருகம்புல் வாசனை வரு கிறதோ? டிகாஷனுக்குப் பதிலாக கொஞ்சம் அருகம்புல் ஜூஸை ஊற்றி இருப்பாளோ?

"ஆமாம் இப்போ புல் சாப்பிட ஆரம் பிச்சிருக்கே. அப்புறம் அந்த இயற்கை வைத்தியர் என்ன சொன்னார்? பருத்திக் கொட்டை, புண்ணாக்கு, கொள்ளு எதை வேணா சாப்பிடு. ஆனா குதிரை மாதிரி மட் டும் கனைக்காதே."

பாமா அவனைப் பார்த்து முறைத்தாள்.

"குதிரைக்கு உதைக்கவும் தெரியும்..."

சந்துரு அவசரமாக அந்த இடத்தைக் காலி பண்ணினான்.

பாமாவின் அருகம்புல் ஜூஸ் வைத்தியம் அமோகமாக நடந்து கொண்டிருந்தது. தினம் தினம் கீரைக் காரியிடம் "காலையிலே அருகம் புல் மறக்காம கொண்டு வா" என்று கட்டளை இடுவது இவன் காதில் விழுந்து கொண்டிருந்தது.

அன்று காலை...

"என்னங்க?" என்று கேட்ட தன் மனை வியை அன்புடன் பார்த்தான்.

"வர வர நீ ரொம்ப அழகாயிட்டு வரே தெரியுமா? எல்லாம் அந்த அருகம்புல் மகிமை..."

பாமாவின் முகம் மலர்ந்தது.

"ஆமாங்க, முந்தி அடிக்கடி தலைவலி வருமே. அது சுத்தமா வரதில்லீங்க. அப்புறம் திடீர் திடீர்னு சளி புடிக்கும்..."

"அதிகமா ஐஸ்கிரீம் சாப்பிட்டா சனி புடிக்கும்"

"இல்லீங்க...அருகம்புல் ஜூஸ் சாப்பிட்டா சனி பிடிக்கவே பிடிக்காது."

"அப்படியா? அப்போ ஏழரை நாட்டு சனி பிடிக்கிறவங்க எல்லாம் அருகம்புல் சாப்பிட்டா போதும்..."

"ஐயோ...உங்க காது வர வர கேக்காதா மாறிட்டு வருது. நான் சொன்னது சளி..."

"ஓ! சரி...இன்னிக்கு என்ன அதி காலையி லேயே என்னைக் கூப்பிடறே?"

"ஆமாங்க சீக்கிரம் பல் தேய்ச்சு காபி குடிச்சு வாக்கிங் கிளம்புங்க..."

"அதான் தினம் தினம் மார்னிங் வாக் போறேனே.. இன்னிக்கு என்ன விசேஷம்?"

"அப்படியே 'வாக்' போயிட்டு வரும் போது அருகம்புல் பறிச்சுட்டு வாங்க..."

"வாட்....?"

"தாட்டும் இல்லை பூட்டும் இல்லை..."

"அது தாட் பூட் தஞ்சாவூர். நான் சினி மாவைப் பத்திச் சொல்லலை..."

"அதில்லீங்க...அந்தக் கீரைக்காரிக்கு உடம்பு சரி இல்லையாம். ஒரு மாசத்துக்கு வர மாட்டாளாம். தவிர வர வர அவ சரியா புல் கொண்டு வரதில்லை. நீங்க தான் தினம் தினம் 'வாக்' போறீங்களே. அப்படியே அருகம்புல் பறிச்சுட்டு வர வேண்டியது தானே. உங்களை நான் என்ன கேட்டேன்? திலுசு திலுசா நகை கேட்டேனா? புடவை கேட்டேனா? ஆப்டர் ஆல் அருகம்புல். அது கூட எனக்காக நீங்க போக வேண்டாம்.



'வாக்' போற இடத்திலே..."

"இல்லே பாமா ரோட்டோரத்துலே இருக் கிற புல்லை கண்டவன் அசிங்கம் பண்ணி வச்சிருந்தான்னா... அதான்"

"புல்லுக்கு ஒண்ணும் தோஷமில்லீங்க. வீட்டிலே வந்து வெந்நீர் தண்ணியிலே நல்லா கழுவிடலாம்..."

இனி இவளிடம் பேசிப் பயன் இல்லை. புல் பறிக்கப் போக வேண்டியது தான். இல்லை என்றால் "சாமி, சத்திய பாமா கதவைத் திற வாய்"- என்று இவனை வாய் கிழிய வைத்து விட்டு 'பெட்ரூம்' கதவைத் தாழ் போட்டு விடுவாள். அழகான பெண்டாட்டி! விட்டு விட முடியுமா என்ன?

இதனால்தான் 'கல்' ஆனாலும் கண வன், புல் ஆனாலும் புருஷன் என்றார்களோ?

தன் விதியை நொந்து கொண்டு சந்துரு படுக்கையை விட்டு எழுந்தான். அருகம்புல் ஜூஸ் உடம்புக்கு நல்லது. அதைப் பற்றி தப் பில்லை. ஆனால் அதைக் குடிக்க இவள் இவன் உயிரைக் குடிக்கிறாளே! சந்துரு சோக மாய் புல் தேய்த்தான்...ஸாரி பல் தேய்த்தான்! வருத்தமாய் காபி குடித்தான்.

சந்துரு இப்போதெல்லாம் கையில் அருகம்புல்லோடுதான் வீட்டிற்கு வருகிறான். சாஸ்திரிகள் தர்ப்பை கட்டுடன் வருகிற மாதிரி புல்லுடன் வருகிற தன்னைப் பார்த்து யாராவது கேலி செய்யப் போகிறார்களோ என்று பயந்து அடையாளம் தெரியாதபடி முண்டாசு கட்டிக் கொண்டு 'வாக்' போகி றான். அக்கம் பக்கம் பார்த்து புல் பறிக்கிறான். இவன் முழிக்கிற திருட்டு முழியைப் பார்த் தால் ஏதோ 'கன்னம்' வைக்கப் போறவன் மாதிரி-உம்-மனைவியின் கன்னத்தில் கன்னம் வைக்க இவன் சின்னபின்னமாகிப் போனான்.

அன்று மாலை---

இவன் ஆபீஸிலிருந்து வந்தபோது இவனை மிக சந்தோஷமாக வரவேற்றாள் பாமா. இவன் வயிற்றில் அமிலம் சுரந்தது. அதிக உற்சாகம் ஆபத்து!

"இப்போ அவுரு வந்திடுவாருங்க. அதுக் குள்ளே நீங்க தயாராகணும்..."

யார் அவர்? இன்னொரு இயற்கை வைத்தியரா? இவர் எதைச் சாப்பிடச் சொல்லுவாரோ?

"ய...யார் வரப் போறாங்க?"

"போனவாரம் ஒரு நாளைக்கு என் பிரண்ட் வீட்டுக்குப் போயிருந்தேன். அவ நிமிஷமா அருகம்புல் ஜூஸ் தயார் பண் ணிட்டா. இங்கே என்னடான்னா மிக்ஸியிலே புல்லை அரைச்சு... அதுவும் கரண்ட் கட் டுன்னா அம்மியிலே அரைச்சு அப்புறம்

தண்ணி ஊத்தி வடிகட்டி ஜூஸ் தயார் பண்ணவே ஒரு மணிநேரமாகுது. இவ என்ன டான்னா அஞ்சே நிமிஷம். ஆச்சர்யமா இல்லை?"

இவனுக்கு எல்லாமே ஆச்சர்யமா இருந்தது!

"அவ 'புட்ப்ராஸஸர்' வாங்கி இருக்காங்க. அவளுக்கென்ன அவ சொந்தக் காரங்க ஸ்டேட்ஸிலே இருக்காங்க. வாங்கி அனுப்பி இருக்காங்க. அந்த புட் ப்ராஸஸர்லே அருகம்புல் ஜூஸ் என்னமா வருதுன்னு சொல்றீங்க.."

"நான் சொல்லலையே?"

"நான் சொல்றேன்...கேட்டுக்கங்க. அதுலே அருகம்புல் ஜூஸ் அரை நிமிஷத்துலே வந்துடுங்க. வெரி சிம்பிள். அருகம்புல் மட்டுமில்லை. எல்லா வெஜிட பிளையும் அதுலே 'கட்' பண்ணலாம். பைன் ஆப்பிள், கிரேப், மாதுளை, கேரட் இப்படி எல்லாத்துலேயும் ஜூஸ் எடுக்கலாம்."

"அதுக்கென்ன இப்போ?"

"இல்லீங்க...ரொம்பப் பிரபலமான பெரிய கம்பெனி ஒண்ணு ப்ரீ டெமான்ஸ்டிரேஷனுக்கு வந்தாங்க. நம்மளாலே பாரின் மிஷின் வாங்க முடியுமா?"

"இரு-இரு புட் ப்ராஸஸர் என்ன விலை தெரியுமா?"

"என்ன விலை வேணா இருக்கட்டுமே. ஃப்ரீ டிமான்ஸ்டிரேஷன்தானே? உங்களை நம்பி அந்த ரெப்ரஸன்டேடிவ்வை வரச் சொல்லிட்டேன். அதுக்காக நிறைய வெஜிடபிள், ப்ரூட்ஸ் கூட வாங்கி வைச்சுட்டேன். சரி...உங்களுக்கு இஷ்டமில்லேன்னா வேண்டாம். நீங்களே திருப்பி அனுப்பிடுங்க..."

இவன் பேசப் பேச அந்த 'ரெப்' கையில் ஒரு பெரிய பையுடன் கூட ஒரு உதவி ஆளுடன் நம்பிக்கை புன்னகையுடன் வாயில் வந்து நின்றார்.

பாமா முகம் திருப்பி உள்ளே போனாள்.

இவன் தான் மாட்டிக் கொண்டான்.

"வா...வாங்க..இப்பத்தான் என் ஒய்ப் சொன்னா..."

வந்தவர் நல்ல சேல்ஸ்மென். தன் கம்பெனியின் பெருமைகளைப் பற்றியும் அந்த மிஷன் பெண்களின் வரப் பிரஸாதமாக இருப்பது பற்றியும் ஒரு பெரிய புராணம், ஐம்பெரும் காப்பியம் எல்லாம் சொல்லி முடித்தார்.

"இப்பத்தான் ஆபீஸிலே இருந்து வரேன்."

"அதனால என்ன? நான் காத்திருக்கேன். போய் ப்ரஷ் பண்ணிட்டு வாங்க. வேணும்னா இந்த மிஷின்லே கோல்ட் காபி ப்ரிபேர் பண்ணித் தரட்டுமா?"

பாமாவின் 'தரிசனமே' தெரியவில்லை.

"பாமா நீ சொன்ன 'சேல்ஸ் ரெப்' வந்திருக்கார். நீ வா..அந்த ப்ரூட்ஸ், வெஜிடபிள் எல்லாம் எடுத்துட்டு வா. எப்படி இருக்குன்னு பார்ப்போம்."

மறுகணம்--

உள்ளே இருந்து மலர்ந்த முகத்துடன் பாமா வெளியே வந்தாள்.

ஒரு மணி நேரம்.. அன்னாசி ஜூஸ். ஆப்பிள் ஜூஸ், கேரட் ஜூஸ் வரிசையா ஜூஸ் மயம்...

எல்லா காய்களையும் 'சிப்ஸ்' போட்டார். சீவிப் போட்டார்!

"நாளைக்கு அவியல் தாங்க சமையல். எல்லா காயும் நிமிஷமா நறுக்கியாச்சு. இதை நான் கட் பண்ணணுமானா ஒரு மணி நேரம் பிடிக்கும். நீங்களும் ஹெல்ப் பண்ண வர மாட்டீங்க."

அந்த சேல்ஸ் ரெப் முன்னால் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான் சந்துரு.

"எப்பங்க மிஷின் டெலிவரி பண்ணட்டும்?"

சந்துரு விலையைக் கேட்டான். இவனையே அந்த மிஷினில் 'ஜூஸ்' போட்ட மாதிரி ஒரு உணர்வு!

"வந்து..."

"நோ. ப்ராப்ளம். நூறு ரூபாய் கொடுத்து

போன மாத மங்கையர் மலரில் தோழி ரேணுகா வளையல் பெட்டியை பற்றிக் கூறியிருந்தார். இந்த மாதிரி பெட்டி இடத்தை அடைத்து கொள்ளவும், கை தவறி கீழே விழவும் வாய்ப்புகள் அதிகம்.

ஆனால் படத்தில் உள்ளது போல் கம்பியில் ஸ்டாண்ட் மாதிரி பண்ணி மேலே கீழே இரண்டு ஆணிகளில் அடித்துச் சுவரில் மாட்டி விட்டால் இடப் பிரச்சனையும் இல்லை. அவசரத்தில் எடுத்து அணிந்து கொள்ளவும் சௌகரியமாய் இருக்கும்.

-கீதா ரெங்கராஜன்



## வீட்டின் பேரில் கடன்

- வீடு/மனை/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்
- மிகக்குறைந்த வட்டிக்கு
- விரைந்த சேவை
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்கவேண்டும்



## நகைக் கடன்

- மிகக்குறைந்த வட்டிக்கு
- 22 ct. தங்க நகைகளுக்கு 1 கிராமுக்கு ரூ.300/- வீதம் கடன் வழங்கப்படும்.
- R.D. கட்ட தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை.







### திரு.வி.க.நகர் பெனி:பிட் :பண்ட் லிமிடெட்

தலைமை அலுவலகம்: 10, 2வது தெரு, ஆண்டாள் அவென்யூ (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்) சென்னை - 82, வேலை நேரம்: 9 முதல் 12.30 வரை; 2 முதல் 5 வரை. ✆ 610390 ஞாயிறு விடுமுறை.

பாரீஸ் கிளை: 49, செங்கல்வ ராய முதலி தெரு, முதல் மாடி, (கந்தகோட்டம் கோவில் அருகில்), பார்க் டவுன், சென்னை - 3. வேலை நேரம்: 10 முதல் 1 வரை; 2 முதல் 5 வரை. ✆ 565760 ஞாயிறு விடுமுறை.

தி.நகர் கிளை: 20, ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 17. வேலை நேரம்: 10 முதல் 1 வரை; 2 முதல் 5 வரை. ✆ 444324. ஞாயிறு விடுமுறை.

# Now, a non-greasy oil for soft, healthy, beautiful hair!

ULTRA PURE







A.K.V OILS MADRAS - 600 087

ADQUEST

'நான்ஸ்டிக்' வாணலியைக் கண்டு பிடித்தவர் ஒரு இல்லத்தரசிதான். 'பாலிடெட்ரா ஃப்ளோரோ தைலின் என்பது நாம் அறிந்த ரசாயனப் பொருள்களி லேயே மிகவும் வழுவழுப்பானது என்கிறது கின்னஸ் புத்தகம். அது மிக அதிக அதிக உஷ்ண நிலைகளை தாங்க வல்லது என்பதுடன் மின்சாரமும் அதன் வழி ஊடுருவதில்லை. இவற்றைப் பயன்படுத்தி டெஃப் லான் என்ற பெயரில் அது பல தொழில் முறை உப கரணங்களுக்குப் பயன் படுத்தப்பட்டு வந்தது. 1950ம் ஆண்டு மார்க்கிரெகாய்ர் என்ற பிரெஞ்சுக் காரர் அதைக் கையாள்வதைப் பார்த்த அவருடைய மனைவி விளையாட்டாக ஒருதட்டில் தடவச் சொன்னாள். அதன் பின் ஒரு பருக்கை உணவு கூட அதில் ஒட்டாதது கண்டு இருவரும் வியப்படைந்தார்கள். புத்திசாலியான கிரெகாய்ர் 'நான் ஸ்டிக்' சமையல் பாத்திரங்களைத் தயாரித்து கோடீசுவரர் ஆனார். இன்று அது உலகெங்கிலும் பரவி விட்டது.

– ஷண்முகசுந்தரம்



'ஆர்டர் புக்'. பண்ணிக்கிறோம். நீங்க எப்போ சொல்றீங்களோ அப்போ மிஷினை கொண்டு வரேன். இதுலே 'இன்ஸ்டால்மெண்ட் சிஸ்டம்' கூட இருக்கிறது."

வேறு வழியில்லை. ஐயாயிர ரூபாய் மிஷினுக்கு 'இன்ஸ்டால்மெண்ட்' சிஸ்டத்தில் ஆறாயிரத்துக்கு மேல் விலை ஆனது.

"இந்த வருஷம் எனக்கு தீபாவளிக்குப் புடவை வேணாங்க... அதுலே ஆயிரம் ரூபாய் மிச்சம்."

கணவனின் செலவைக் குறைத்தாள் மனைவி.

பாமா தீர்மானம் பண்ணிவிட்டால் அதை மாற்ற முடியாது. அதன்பின்...?

இன்ஸ்டால்மெண்ட் சிஸ்டத்தில் மிஷின் வந்தது. ஆபீஸில் இவன் 'லோன்' எடுத்ததில் அதிக வட்டி வந்தது. தினம் தினம் அந்த மிஷினின் ப்ராபாவத்தில் இவனுக்கு எரிச்சல் வந்தது.

"என்னங்க ஆறாயிர ரூபாய் மிஷினை சும்மா ஒரு ஜூஸ் போட மட்டும் யூஸ் பண்ண முடியுமா? இன்னிக்கு ஆபீஸிலே இருந்து வரும்போது ப்ரூட்ஸ் வாங்கிட்டு வாங்க..."

"என்னங்க..நாளைக்கு பைன் ஆப்பிள் ரசம்...நல்லதா பார்த்து அன்னாசிப் பழம் வாங்கிக்கங்க. புளி உடம்புக்குக் கெடுதல் இனிமே தக்காளி ஜூஸ் எடுத்து அதுலே ரசம் வைக்கப் போறேன். அதான் மிஷன் இருக்கே. நல்ல ஆப்பிள் தக்காளி வாங்கிட்டு வாங்க.."

வால் போச்சு கத்தி வந்தது 'டும் டும்' என்கிற மாதிரி, அருகம்புல் போச்சு மிஷின் வந்தது. சந்துருவுக்கு மாதத்தில் காய்கறிகளுக்கும், பழ வகையறாக்களுக்குமாக 'பட்ஜெட்டில்' செலவுத் தொகை கணிசமாக ஏறியது. மிஷின் லோன், அதுக்கு இன்ட்ரஸ்ட், ஆபிஸில் லோன், அதுக்கு இன்ட்ரஸ்ட். ஆக சந்துரு 'லோ' லோ என்று அலைந்து, வாழ்வில் 'இன்ட்ரஸ்ட்' இல்லாமல் போய் விட்டான்.

இப்போது சந்துரு அதிகாலையில் அருகம் புல் பறிக்கப் போவதில்லை. மாலை ஆபீஸி லிருந்து அப்படியே மார்க்கெட் போய் விட்டு பையும், காய்கறியும், பழங்களுமாகத் தான் வீடு திரும்புகிறான். இந்த அலைச்சலின் தொல்லையில் உடம்பு பாதியாய் இளைத்து விட்டது. அன்று ஊரிலிருந்து வந்த இவன் மாமா கேட்டார்.

"என்ன சந்துரு...உடம்பு சரியில்லையா என்ன? பேசாம காலையிலே வெறும் வயித்துலே 'அருகம்புல் ஜூஸ்' குடி. உடம்புக்கு ரொம்ப நல்லது..."

சந்துருவுக்கு வந்ததே கோபம்!

மாமா சொன்னதைக் கேட்டு சந்துரு கத்திய கத்தலைப் பார்த்து இவன் மாமாவே பயந்து போனார்.

நான் அருகம்புல் ஜூஸ்தானே குடிக்கச் சொன்னேன்? அணுகுண்டு ஜூஸா குடிக்கச் சொன்னேன்? சந்துரு ஏன் இப்படிக் கத்து கிறான்?

அவர் திகைத்தார். அவருக்கு என்ன தெரியும். அருகம்புல் அணுகுண்டாக மாறிய கதை சந்துருவுக்கு அல்லவா தெரியும்?

# அனுபவம் பேசுகிறது

நடவுவேலை முடிந்து, ஆட்கள் ஒவ்வொருவராக மேடேறத் தொடங்கிய போது, பொழுது சாய்ந்திருந்தது. எப்போதும், சிரிப்பும் கும்மாளியுமாக இருக்கும் நடவாட்கள், அன்று அமைதியாக இருந்தனர். அதன் காரணம், 'பெரியய்யா' என்று அழைக்கப்படும் பெரியவர் ரங்கசாமி அங்கே இருந்தது தான். 'எல்லோரும் மசமசன்னு நிக்காம, கூலி வாங்கறதுக்கு வரிசையில வந்து நில்லுங்கப்பா! பெரியய்யா காத்திருக்காங்கல்ல !' என்று சின்னான் குரல் கொடுத்தான். உடனே பெரியவர் அமர்ந்திருந்த கயிற்றுக் கட்டிலுக்கு அருகே ஒரு ஒழுங்கற்ற வரிசை உருவானது.

தன் மடியில் இருந்த பணத்தை எண்ணி எண்ணி தனக்கு முன்னே நீண்ட கரங்களில் அவர் போடத் தொடங்கியபோது வேக வேகமாக வந்த பொன்னன், 'எசமான்! பட்டணத்திலிருந்து சின்னய்யா வந்திருக்காருங்க! அம்மா உங்களை வெள்ளென வர சொன்னாங்க' என்று மூச்சிரைத்தபடி சொன்னான்.

'அப்படியா' என்று நெற்றியை சுருக்கியவர் 'எலேய் சின்னான் ! கூலியை பட்டுவாடா பண்ணிட்டு வீட்டு பக்கமா வா! நான் முன்ன கிளம்பறேன்' என்று புறப்பட்டார்.

முருகேசன்... அவரது ஒரே மகன். நன்றாக படித்து இப்போது சென்னையில் பெரிய பொறுப்பில் இருக்கிறான். ஒவ்வொரு முறை ஊருக்கு வரும்போதும் பெற்றவர்களை தன்னோடு வந்து விடுமாறு அவன் அழைப்பதும், விவசாயத்தை விட்டு விட்டு வர முடியாது என்று இவர் மறுப்பதும், வாடிக்கையாக நடப்பவை.

'வாப்பா முருகேசு! எப்ப வந்தே' என்ற குரல் கேட்டு, பணிவாக எழுந்துநின்ற மகனை பார்த்து 'மருமக வரலையா'? என்று வாஞ்சையோடு விசாரித்தார். 'இல்லீங்கப்பா நான் மட்டும் தான் வந்தேன்' என்றவனிடம் 'எல்லாரும் சவுகரியந்தானே' என்று கேட்டபடியே ஊஞ்சலில் உட்கார்ந்தார் ரங்கசாமி!

'சவுகரியந்தாம்பா ! நான் தான் ஒரு விஷயமா யோசனை கேட்டுட்டு போலாம்னு வந்தேன்.' என்றதும் என்ன விஷயம் என்று கேட்பது போல ஏறிட்டு பார்த்தார்.

'கையில இப்ப கொஞ்சம் பணம் சேர்ந்திருக்குது. அதை பயனுள்ள முறையில முதலீடு செய்யலாம்னு நனைச்சேன். அப்பதான் கூட வேலை பார்க்கிறவங்க, அனுபவ் தேக்கு பண்ணைகளை பற்றி நிறைய சொன்னாங்க. அதுல முதலீடு செய்யலாம்னு யோசனை. எதுக்கும், உங்களைக் கேட்டுட்டு முடிவு செய்யலாம்னு வந்தேன்' என்றான்.

தேக்கின் பெயரைக் கேட்டதும், பெரியவரின் முகம் பிரகாசமானது. உற்சாகத்தோடு சொல்லத் தொடங்கினார். 'முருகேசு, ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க ! நானும் நாப்பது வருசமா பார்க்கிறேன். என் அனுபவத்தில, தேக்கு மரம் எப்பவும் தேவைப்படற ஒண்ணு. அதுவும் வர்ற நாட்களில தேக்கோட மதிப்பு அதிகமாயிட்டே போகும். அனுபவ் தேக்கு



பண்ணைகளைப் பத்தி நானும் கேள்வி பட்டிருக்கேன். தேக்கு மரம் நல்லா விளையற இடங்களா பார்த்துதான் தேக்கு பண்ணைகளை அமைச்சிருக்காங்க. ரொம்ப நவீனமான விவசாய முறைகளை எல்லாம் பயன்படுத்தறாங்க. இருபது வருஷம் கழிச்சி 1440 கன அடி தேக்குக்கு உத்திரவாதம் உண்டாம். அதோட மதிப்பே பல இலட்சங்களுக்கு குறையாம இருக்குமே' என்றதும் முருகேசன் நம்பிக்கையோடு பேசத் தொடங்கினான்.

'அது மட்டும் இல்லப்பா! முதலீடு பண்ணினதும் தேக்கு வளர்ற நிலமும், நமக்கே சொந்தமாயிடுது. ஆறாவது, பன்னிரண்டாவது வருஷங்களில இடைக்கால வருமானமும் கிடைக்குமாம். இதுவரைக்கும் 12,000 பேர் அனுபவ் தேக்குப் பண்ணைகளிலே முதலீடு செய்திருக்காங்க' என்றான்.

அப்புறம் என்னப்பா யோசனை? நீ எடுத்த முடிவு சரிதான்! நல்ல படியா முதலீடு பண்ணு! எப்படியோ... நீயும், நேரடியா இல்லாட்டியும், அனுபவ் மூலமாகவாவது விவசாயத்துக்கு வர்றியே! ரொம்ப சந்தோஷம்...!' என்றார் ரங்கசாமி.

அவரது குரலில் இருந்த மகிழ்ச்சியில், விவசாயத்தின் மீது அவருக்கு இருக்கும் பிடிப்பு மட்டுமின்றி மகனின் மீது இருக்கும் வாஞ்சையும் வெளிப்பட்டது.

கதாசிரியர் குறிப்பு : இது போன்ற இன்னும் பல அனுபவங்களை அறிய, தொடர்பு கொள்ளுங்கள் :

அனுபவ் பிளான்டேஷன்ஸ் லிமிடெட்
11, சோமசுந்தரம் தெரு, தி.நகர்,
சென்னை 600 017.
தொ.பே. 8254155, 8282833, 8283316, 8282629
ஃபேக்ஸ் : 044-8284967

கிளைகள் : மதுரை : 119, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, 2வது மாடி, மதுரை 625 001. திருச்சி : ஜெனனி பிளாசா, 5, பாரதியார் சாலை, திருச்சி 621 001. சேலம் : சேலம் பிளாசா (சாரதா காலேஜ் எதிரில்), பேர்லான்ட்ஸ், சேலம் 636 016. கோவை : 101-105, D.B. ரோடு, R.S. புரம், கோவை 641 002. வேலூர் : 8, ராமகிருஷ்ணபுரம், கொசப்பேட்டை, வேலூர் 632 001. திருநெல்வேலி : 49C / 11, பாவா பில்டிங், கைலாசபுரம் வடக்கு தெரு, நெல்லை ஜங்க்ஷன் நெல்லை 627 001.

# மங்கையர் மலர் & மீரா ஹெர்பல் பவுடர்

வழங்கும்

## கூந்தல் பராமரிப்புப் பக்கங்கள்



பெண்களுக்கு அழகு தருவது அடர்ந்த கூந்தல். உணவில் நல்ல ஊட்டச் சத்து, உடல்வாகு இவற்றைப் பொறுத்தும் தலையில் அடர்ந்த முடி வளர்கிறது. தலையில் தினமும் எண்ணெய் தடவுவது அவசியமா என்றால் எண்ணெய் கசிவான கேசம் உள்ளவர்களுக்கு அவசியமில்லை. மெல்லிய முடி உடையவர்கள் எண்ணெய் அதிகம் தடவுவதால் முடி குறைவாக உள்ளது போல் தோன்றும். நம் உடம்பில் கசியும் எண்ணெயே இயற்கையாக தலைமுடிக்குக் கிடைக்கிறது. ஆதலால் இரவு படுக்கப் போகும் முன் தேங்காய் எண்ணெயோ, மூலிகை எண்ணெயோ ½ ஸ்பூன் எடுத்து மயிர்க்கால்களில் படும்படி அழுந்தத் தேய்த்து, காலையில் சீயக்காய் பொடியைப் போட்டு, அலசினால் போதும்.

ஹேர்டை போட்டு 30 நாட்கள் கழித்து தான் அடுத்த தடவை டை போட வேண்டும் என்று கூறியுள்ளீர்கள். 10 -15 நாட்களிலேயே நரை முடி நன்றாகத் தெரிய ஆரம்பித்து விடுகிறது. இதற்கு என்ன செய்ய வேண்டும்?

சரஸ்வதி ராகவன், சென்னை.

ஹேர்டை போடும் போது சரியான விகிதத்தில் கலந்து போட்டுக் கொள்ள வேண்டும். 10 (அ) 15 நாட்களில் நரை முடி தெரிய ஆரம்பிப்பது அவரவர் தலைமுடியைப் பொறுத்தது. திரும்ப 'டச்' செய்து கொள்ளவும். நாமே டை போடுவதை விட அழகு நிலையத்தில் தேர்ந்தவரிடம் போடுவது சிறந்தது!

இளமையிலேயே ஏற்படும் நரைக்குக் காரணம் என்ன? இதற்கு ஆங்கில மருத்துவம் சிறந்ததா? சித்த மருத்துவம் சிறந்ததா? அழகிய நீண்ட கூந்தல் பெறுவதற்கு எளிமையான வழியைக் கூறவும்.

எம். கவிதா, சென்னை - 11.

இளமையிலேயே ஏற்படும் நரைக்கு சத்துக் குறைவுதான் காரணம். வைட்டமின் $B_{12}$ நரையைப் போக்கக் கூடியது. ஆங்கில மருத்துவத்திலும், சித்தமருத்துவத்திலும் மிகச் சிறந்த முறைகள் உள்ளன. நீண்ட அழகிய கூந்தல் பெறுவதற்கு, சுத்தம், சுகாதாரம் சத்துணவு மிக முக்கியம். மருதோன்றித் தைலம் தடவி வரவும்.

என்னுடைய முடி இயற்கையாகவே 'ப்ரௌன்' கலரில் உள்ளது. எவ்வளவோ விதவிதமான தைலங்கள் தேய்த்தும் பலனில்லை. என்னுடைய முடி கருமை அடைய நான் என்ன உபயோகிக்க வேண்டும்? அதை எவ்வாறு உபயோகப்படுத்தினால் முடி கருமையாக வளர வாய்ப்பு உள்ளது?

ஜி. நளினி.



# தலைக்குத் தினமும் எண்ணெய் பூசவேண்டுமா?

செம்பருத்தி இலையை நன்கு காய வைத்து மிஷினில் அரைத்து வைத்துக் கொள்ளவும். இரண்டு நாளைக்கு ஒரு முறை இரவில் தேங்காய் எண்ணெய் மயிர்க்கால்களில் படும்படி அழுந்தத் தேய்த்து 10 நிமிடம் கழித்து நன்கு வாரிக் கொள்ளவும். காலையில் செம்பருத்திப் பொடியுடன் தண்ணீர் சேர்த்துத் தலையில் நன்கு தேய்த்து அலசவும். முடி கருமையாகவும், பளபளப்பாகவும் மாறும்.

**அழகுக் கலை, மற்றும் சிகை அலங்காரம் கற்று பார்லர் வைக்கலாம் என்று நினைக்கிறேன். யாரிடம் தொடர்பு கொள்ள வேண்டும்? உங்களைப் போன்றவர்கள்தான் கற்றுத் தருவார்களா? மூலிகை பேஷனில் கற்றுத் தருவீர்களா? நல்ல வருமானம் வருமா?**

ரஞ்சிதா, வளசரவாக்கம்.

என்னைப் போன்று பலரும் பயிற்சி நிலையம் நடத்துகிறார்கள். என்னிடம் கற்ற பலரும் பார்லர் வைத்துள்ளார்கள். Herbel pack for Hair, மூலிகை பேஷியல், சிகை அலங்காரம், மணப்பெண் அலங்காரம் போன்ற பல பயிற்சிகள், இதில் உள்ளன. திறம்பட செய்தால் நல்ல வருமானம் வரும். தரமே தாரக மந்திரம் என்ற கொள்கை தேவை. என்னைப் பார்க்க வேண்டுமானால் நீங்கள் எப்போது வேண்டுமானாலும் பார்க்கலாம்.

**என் கூந்தலுக்கு எவ்வளவுதான் எண்ணெய் தேய்த்தாலும் வறண்டுப் போய் இருக்கிறது. மேலும் எவ்வளவுதான் சீப்பு போட்டுச் சீவினாலும் படியாமல் வறண்டு இருக்கிறது. சீப்பைக் கொண்டு சீவும் போது சின்னச் சின்ன முடியாய் உதிர்கிறது. இதனைப் போக்க என்ன செய்யலாம்?**

ஹேமமாலினி, காரைக்குடி.

இரவில் படுக்கப் போகும் முன் ½ ஸ்பூன் விளக்கெண்ணெய் ½ ஸ்பூன் ஆலிவ் ஆயில் இரண்டையும் கலந்து மயிர்க்கால்களில் படும்படி அழுந்தத் தேய்த்து 20 நிமிடம் கழித்து நன்கு வாரிக் கொள்ளவும். காலையில் சீயக்காய்ப் பொடியுடன், வெந்தியத்தை ஊற வைத்து அரைத்ததையும் சேர்த்துத் தேய்த்துக் கொண்டு தலையை அலசவும். நன்கு முடி படிமானமாக வரும். வாரம் இரண்டு தடவை ஹெர்பல் பவுடர் பயன்படுத்தவும்.

**என் உறவினர் பெண் ஒருவருக்கு உள்ளங்கை அளவிற்கு உச்சந்தலையில் திடீரென்று வழுக்கை விழுந்து விட்டது. இது எதனால்? பெண்கள் சிலருக்குக் கூந்தல் எவ்வளவு பராமரித்தாலும் வளர்வதில்லையே? உணவுப் பற்றாக்குறையா? அல்லது பரம்பரை நோயினால் அப்படி உள்ளதா விளக்கவும்.**

ஏ. சிந்துபாரதி, திருவிடைமருதூர்.

# "மலர்ந்தும் மலராத..."



பத்து வயது கோபிக்கு வெளி உலகம் தெரியாது. படிப்பு, பாட்டு, விளையாட்டுமாய் இருந்த அப்பாவி கோபியை கடத்தி வந்து, கண்களை ஆசிட் கம்பிகளால் குத்தி குருடாக்கி பிச்சை எடுக்க துன்புறுத்தினான் ஒரு போலி சாமியார். 16.5.94 அன்று கோபியை காப்பாற்றும் போது சாமியார் தப்பி ஓடி விட்டான். கோபியின் கண்களிலும் ஒளி மறைந்து விட்டது. அவசர சிகிச்சையும், விரைவில் அறுவை சிகிச்சை தேவைப்படும் கோபிக்கு நிதி உதவி கிடைக்குமா?

ஆதித்தியன். வயது 1½. பெற்றோர் இல்லை. இப்போதுதான் நடக்கப் பழகுகிறான். சின்ன நடை போட்டு அவன் செல்லும் நெடிய பயணம் தொடருமா? பயமாக இருக்கிறது. காரணம், சமீபத்திய மருத்துவ பரிசோதனையில் ஆதித்தியனின் குட்டி இருதயத்தில் ஓட்டை இருப்பதாக டாக்டர் சொன்னார். உயிர் பிழைக்க உடனடியாக அறுவை சிகிச்சை செய்ய வேண்டும். செலவு ரூ.80,000. கிடைக்குமா ஆதித்தியனுக்கு...? ஆப்பரேஷன் தேதி: 19 ஆகஸ்ட் 1994.

மலர்ந்தும் மலராத பாதி மலர்களாய், வாழப் பிறந்த இவர்களின் வாழ்வு ஒரு ?

கோபியின் கண்கள் பார்க்க, ஆதித்தியனின் இதயம் துடிக்க, உங்களால் முடிந்ததை கொடுத்து உதவுங்கள்.

இத்தகைய மருத்துவ நிதி உதவிக்காக உதவும் கரங்கள் உருவாக்கியுள்ள, ''உதவும் கரங்கள் சேரிட்டபிள் டிரஸ்ட்'' என்ற பெயருக்கு செக், டி.டி., எம்.ஓ. மூலமாக உங்கள் நன்கொடைகளை அனுப்பவும்.

முகவரி: உதவும் கரங்கள்,
460, என்.எஸ்.கே. நகர்,
சென்னை - 106.
போன்: 6216321,
6216421.
(நன்கொடைகளுக்கு வருமானவரி விலக்கு உண்டு)

*Space donated by well wisher.*

திடீரென்று வழுக்கை விழுந்தது என்றால் உடல் நலக் குறைவு ஏற்பட்டதா? டாக்டரிடம் ஆலோசனை பெறவும். கூந்தல் வளர்வது பரம்பரை பொறுத்து இருந்தாலும், கூந்தலுக்கு தேவையான இரும்புச்சத்து, சத்துணவு, சரியான பாதுகாப்பு இருந்தால் கட்டாயம் நன்கு வளரும்.

**என் சகோதரி வயது 12. அவள் பிறந்ததி லிருந்து Shampoo தான் கூந்தலுக்கு உபயோ கிக்கிறோம். அவள் கூந்தல் மிக மிக வறண்ட கூந்தலாக இருக்கிறது. 2 தேக்கரண்டி எண் ணெய் போட்டாலும் மாலைக்குள் மறுப டியும் வறண்டு விடுகிறது. கூந்தலை கைக ளால் தொட்டால் தேங்காய் நார் போல் இருக்கிறது. பேன் தொல்லையும் அதிகம். அவள் கூந்தல் மென்மையாக பளபளப் புடன், ஆரோக்கியமாக வளர வழி கூறுங் கள்?**

**கே. சத்யா, சென்னை - 92.**

1 ஸ்பூன் தேங்காய் எண்ணெயும், 1 ஸ்பூன் விளக்கெண்ணெயையும் நன்கு மயிர்க்கால் களில் படும்படி அழுந்தத் தேய்க்கவும். உடல் சூடுதான் தலைமுடி வறட்சிக்குக் காரணம். வாரம் ஒருமுறை தேங்காய் பால் எடுத்துத் தடவிக் கொள்ளவும். பிறகு வெந்தயத்தை ஊற வைத்து அரைத்துத் தேய்க்கவும். பேன் தொல் லைக்குச் சுத்தமாக தலையை வைக்கவும்.

**பேன், பொடுகு இந்த இரண்டும் உடனடி யாக ஒழிப்பதற்கு வழி கூறுங்கள்? கூந்தல் அடர்த்தியாக வளர்வதற்கு என்ன செய்ய வேண்டும்?**

**வளசரவாக்கம் வாசகி.**

பேன், ஈர் போவதற்கு வேப்பிலையை கொதிக்க வைத்து அந்த ஆறவைத்த தண் ணீரைப் பயன்படுத்தினால் உடன் பலன் இருக் கும். பொடுகு போவதற்கு வெந்தயத்தை ஊற வைத்து அரைத்து பயன்படுத்தவும். அடர்த்தி யாகக் கூந்தல் வளர்வதற்கு மருதாணி தைலம் சிறந்தது.

**என் வயது 38 ஆகிறது. என் தலையில் அரிப்பு அதிகமாக இருக்கிறது. முடியும் அதிகமாகக் கொட்டுகிறது. இரவு நேரங்களில் தூங்க முடியாத அளவுக்கு அரிப்பு அதிகமாக இருக்கிறது. பேன் இல்லை. கொஞ்ச நாட்க ளுக்கு முன் பொடுகு இருந்தது, அடிக்கடி தயிர் தடவி வருகிறேன். அரிப்பு மறைந்து முடி கொட்டுவது நிற்பதற்கு என்ன செய்வது? வாரம் ஒருமுறை நல்லெண்ணெய் தடவி சீயக்காய் தேய்த்து குளிக்கிறேன்.**

**எஸ். ராதா, சென்னை - 92.**

சிலபேருக்கு ஒவ்வாமையினால் அரிப்பு ஏற்படும். டாக்டரிடம் ஆலோசனை பெறவும். முடி கொட்டுவது நிற்பதற்கு இதே பகுதியில் பல ஆலோசனைகள் கூறியுள்ளேன். முயற்சி செய்யவும்.

**- ஹேமா லஷ்மண்,**
அழகு மற்றும் சிகை
அலங்கார நிபுணர்.

---

## பரிசு பெறும் கட்டுரை :

# கூந்தல் சம்பந்தமான மறக்க முடியாத அனுபவம்!

எங்கள் பெற்றோருக்கு நாங்கள் ஆறு குழந்தைகள். ஆறு பேரும் பெண்கள். அறுவ ரில் நான்தான் கடைசி. நாங்கள் ஆறுபேரும் மிகவும் அருமையாக, செல்லமாக வளர்க்கப் பட்டவர்கள். எனக்கு 25 வயது ஆகும் வரை எங்கள் பாட்டி உயிரோடு இருந்தார்கள். எங்கள் பாட்டி காலமான போது அவருக்கு வயது 90. அந்தத் தொண்ணூறு வயதிலும் வெண்பட்டான கூந்தல், ஒன்றரை அடி நீளம் இருக்கும்.

எங்கள் ஆறு பேத்திகள் மீதும் பாட்டிக் குக் கொள்ளை ஆசை. சொல்ல முடியாத பாசம். தன் பிள்ளைக்கு ஆறு பேரும் பெண்களாகப் பிறந்து விட்டார்களே என்ற குறையோ, பேரன் இல்லையே என்ற ஏக்கமோ எள்ளளவும் இடையாது. நான்பிறந்த பொழுது, பிழைப்பதே அரிது என்று டாக்டர்கள் கை விரித்த போது, நான் பிழைக்க வேண்டும் என்பதற்காக தன் தள்ளாத வயதிலும், திருப்ப திக்கு நடந்து வருவதாக பிரார்த்தனை செய்து கொண்டு, என்னைப் பிழைக்க வைத்தவர். பெண் குழந்தைகளைப் பிறந்தவுடன் கொலை செய்து, பெண் சிசுக்களைக் கருவிலேயே கொன்றழிக்கும் கொடூரமானவர்கள் வாழும் இக்காலத்தில் தன் ஆறாவது பேத்திக்காக, இராப்பகல் தூங்காமல், ஆஸ்பத்திரியில் என்

பக்கத்தில் இரண்டு மாதங்கள் இருந்து என்னைக் காப்பாற்றிய உத்தமி.

எங்களுடைய ஆறுபேரின் கூந்தல் பராமரிப்பு எங்கள் பாட்டியின் கையில் தான் இருந்தது. எங்கள் ஆறுபேரையும் ஒவ் வொருவராக அழைத்து மருதாணி கலந்த தேங் காய் எண்ணெயை உச்சந்தலை முதல் அடி நுனிவரை நன்றாகத் தடவி, தலையைத் தழைய வாரி, மழமழவென்று பின்னல் போடு வார். இதற்குத் தினமும் ஒரு மணி நேரம் ஆகும். வெள்ளிக்கிழமைகளில் ஒவ்வொருவ ருக்கும் மருதாணி தைலம் தலைக்குத் தேய்த்து, சீயக்காய்ப் பொடியால் தலையைச் சுத்தம் செய்து அலசுவார். பிறகு தலையை ஆற வைத்து சிக்கல் எடுத்து தளர பின்னல் போடு வார். தலையில் பேனோ, ஈரோ, பொடுகோ எதுவுமே வராமல் பாதுகாப்பார்.

இப்படித் தன் தள்ளாத வயதில், வீட்டு வேலைகள் செய்ய முடியாத நிலையிலும், தன் பேத்திமார்கள் ஆறு பேரையும் கண் ணைக் காத்து பேணி வளர்த்த எங்கள் பாட்டி காலமான போது, நாங்கள் ஆறுபேரும் பாட்டியைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு, "பாட்டீ! இனிமேல் எங்களுக்கு யார் தலை சீவி விடுவார்கள்! எங்களுக்கு யார் தலைக்குக் குளிப்பாட்டுவார்கள்!" என்று ஒன்றாக அழுதபோது, கூடியிருந்த உறவினர்கள் அனை வரும் கலங்கி, கண்ணீர் அஞ்சலி செலுத்தி னார்கள். எங்கள் பாட்டியின் இறுதி யாத் திரை தொடங்கிய போது, தலை முடி அவிழ்ந்து, வெண்பட்டுத் துகிலாய், நீளமாய் தெரு முழுவதும் தொங்கிக் கொண்டு சென்ற காட்சி இன்னும் என் கண் முன்னால் நிற்கின்றது. எங்கள் பாட்டி பேணி வளர்த்த என் கூந்தலை நான் சீவும் போதெல்லாம், பாட்டியின் நினைவு வரும்.

- **ஜி. விஜயலட்சுமி, நெல்லிக்குப்பம்.**

பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சில சுவையான கட்டுரைகள்.

## எலி கடித்திருக்க வேண்டுமே!

மலையாளிகள் என்பதால் என் நெருங் கிய தோழியின் வீட்டில் பட்சணங்கள் முதற் கொண்டு எல்லாம் தேங்காய் எண்ணெயில் தான். ஒருமுறை பட்சணம் செய்த எண்ணெய் கீழே சிந்தியிருக்க சிறிதளவுதானே என்று தோழியும் அதை எடுத்து உச்சந்தலையில் பூசிக்கொண்டிருக்கிறாள். மறுநாள் காலை எழுந்து பார்த்தால் உச்சந்தலையில் ஒரு கொத்து முடியைக் காணவில்லை. எண்ணெய் வாசனைக்கு மூஞ்சூரோ எலியோ கூந்தலை ஒருகை பார்த்துவிட்டிருக்கிறது. தான் முடி இழந்த சோகக்கதையை எங்களிடம் சொல்ல நாங்கள்,

"மூஞ்சூறு கடித்தால் முடி வளராதுன்னு எங்க பாட்டி சொல்வாங்க" (சும்மா அவளை வெறுப்பேற்ற பாட்டி பெயரில் நாங்கள் விட்ட டூப்) என்று கூறினோம்.

அவளும் அதை உண்மையென நம்பி 'கடித்தது எலியாக இருக்க வேண்டும்' என்று வேண்டிக்கொள்ள ஒரே வேடிக்கைதான்.

- **பூர்ணிமா, பெங்களூர் - 21.**

## பாரதமாதா பழனி யாண்டி ஆனாள்!

என் மகள் சுஜாதாவிற்கு ஐந்து வயது. முதல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். பள்ளி ஆண்டு விழாவில் மாறுவேடப்

பரிசு பெற்ற கட்டுரைக்கு மீராவின் பரிசு — ரூ. 1000/- மதிப்புள்ள குக்கர்

அடுத்த இதழுக்கான போட்டி

என்னைக் கவர்ந்த கூந்தலழகி!

கடைசி தேதி : 9.7.94

**மில்க் ஷேக்! மில்க் ஷேக்!**

பொதுவாக எல்லாக் குழந்தைகளுக்குமே 2 வயதிற்கு மேல் பால் என்றாலே போர்தான். எவ்வளவுதான் கரடியாகக் கத்தினாலும் சில குழந்தைகள்தான் பாலைச் சாப்பிடும். அதையே சீசனுக்கு ஏற்ப மாம்பழம், சப்போட்டா, கிர்ணி பழம், பச்சை வாழைப்பழம் ஆகியவற்றை மில்க் ஷேக் செய்து கொடுங்கள். அப்புறம் நீங்களே உங்கள் குழந்தைகளைப் பாராட்டுவீர்கள். எந்தப் பழமாக இருந்தாலும் முதலில் பழத்துடன் சர்க்கரை யைச் சேர்த்து நைசாக அரைத்துக் கொள்ளவும். பின்பு பாலைச் சேர்த்து மிக்சியில் 2 நிமிடம் சுற்றி எடுத்து விட்டு ஃப்ரிட்ஜில் வைத்துவிடுங்கள். பள்ளியில் இருந்து களைத்து வரும் குழந்தைகளுக்கு அழகிய தம்ளர் வாங்கி வைத்துக் கொண்டு அதில் ஊற்றிக் கொடுங்கள். எந்த மில்க் ஷேக் செய்கிறோமோ அந்தப் பழத்தையே சிறுசிறு துண்டங்களாக்கி மேலே அலங்காரம் செய்யவும். குழந்தைகள் அதை விரும்பிச் சாப்பிடுவதைப் பார்க்கும்போது ஆனந்தமாக இருக்கும். பாலுடன் பழமும் உடலில் சேரும்.

- பத்மாவதி ராதாகிருஷ்ணன்



போட்டியில் கலந்து கொண்டிருந்தாள். அவளுக்கு அடர்ந்த நீண்ட கூந்தல். மாறுவேடப் போட்டிக்கு 'பாரதமாதா' வேடம் போட வேண்டுமென்றிருந்தேன். தலையில் கிரீடம் வைத்துக் கொண்டு அடர்ந்த கூந்தலைப் பிரித்துப் போட்டு, புடைவை கட்டி கொடியேந்தி நிற்க வேண்டும்; பரிசு பெற வேண்டுமென்றெல்லாம் கற்பனை.

விழாவுக்கு இரண்டு நாட்களுக்கு முன் என் கணவர், "பழனிக்குப் போகத் தயாராக இரு' என்றார். அடிக்கடி சுஜாதாவுக்கு உடம்புக்கு ஏதாவது தொல்லைப் படுத்திக் கொண்டிருக்குமாதலால் பழனிக்கு வருவதாக வேண்டுதல் இருந்தது. கிருத்திகைதோறும் முருகன் திருத்தலத்திற்குச் செல்வது வழக்கம்.

நான் சரவணப் பொய்கையில் குளித்துக் கொண்டிருக்கும் பொழுது சுஜாதாவை என் கணவர் வேறு பக்கம் அழைத்துச் சென்றுவிட்டார். அரை மணி நேரம் கழித்து சுஜாதாவை மொட்டைத் தலையுடன் கூட்டிக் கொண்டு வந்தார்.

"என்னங்க இது?"' என்றேன் திகைப்புடன்.

"நான்தான் சொன்னேனே, பிரார்த்தனை செலுத்தி விடலாம் என்று. சுஜாதாவிற்கும் வயதாகிறது. இன்னும் பெரியவளானால் பிரார்த்தனைக்கு முடி கொடுக்க சம்மதிக்க மாட்டாளென்றுதான்... இப்பொழுதே கூட்டிக் கொண்டு வந்தேன்!... வேண்டுதலை நிறைவேறியாச்சு!..."

சுஜாதா விக்கி விக்கி அழுது கொண்டிருந்தது. எனக்கு ஒரு யோசனை தோன்றியது. அவளைச் சமாதானப்படுத்தினேன்.

'பாரதமாதா'வுக்குப் பதிலாக சுஜாதா 'பழனியாண்டி' ஆனாள். அவளுக்கு அவ்வேடம் கனகச்சிதமாகப் பொருந்தியிருந்தது. இனியென்ன... பரிசு சுஜாதாவுக்குத்தான்! முதல் பரிசு.

'கடவுளுக்கு வேண்டுதல்' என்றாலோ 'மாறுவேடப் போட்டி' என்றாலோ, எனக்கு நினைவுக்கு வருவதெல்லாம் சுஜாதாவின் கூந்தல்தான். அது பிரார்த்தனை செலுத்தப்பட்ட பின்பும் பரிசைத் தந்தது அல்லவா?

- ஸரோஜா வெங்கடரங்கன்,
கோயமுத்தூர்.

## நரைமுடி கருமுடியானது!

எனக்கு இப்போது 25 வயது ஆகிறது. சுமார் 5 வருடங்களுக்கு முன் என்னைப் பார்த்தால் 40 வயது தோற்றம் இருக்கும். காரணம் என்தலை முழுக்க வெள்ளை முடி. வெள்ளை முடிக்குக் காரணம் என் தலையில் பொடுகு அதிகம். அப்போதுதான் என் பாட்டி ஊரிலிருந்து வந்தார்கள். அவர்கள் என் நிலையைப் பார்த்து, "கவலைப்படாதே, இதற்கு ஒரு சிறந்த முறை உள்ளது. அதை நீ மனம் தளராமல் 4 மாதங்கள் செய்து வந்தால் உனக்கு நல்ல பலன் கிடைக்கும்" என்றார்கள்.

சோற்றுக் கற்றாழையைக் கொண்டு வந்து அதன் நடு பாகத்தை கீறிவிட்டு அதற்குள் சிறிது வெந்தயத்தைத் தூவி கற்றாழை மீது ஒரு கயிறு வைத்துக் கட்டி விட வேண்டும். மறுநாள் வெந்தயம் முளை விட்டிருக்கும். இந்த வெந்தயத்தை வெயிலில் நன்றாக உலர்த்தி தேங்காயெண்ணெயில் போட்டு ஊற வைத்து, இத்துடன் வெட்டி வேர் சிறிதளவு சேர்த்துக் கொண்டால் முடி கருமையாக வளரும். உடல் குளிர்ச்சியாக இருக்கும்" என்றார்.

இதை நான் தொடர்ந்து உபயோகித்து வந்தேன். இப்போது என் முடி 'டை' இல்லாமலே கறுப்பாகி விட்டது. போன வருடம் திருமணம் ஆகிவிட்டது. என் வீட்டுகாரரிடம் நடந்தவற்றைச் சொன்னேன். அவர் நம்ப மறுத்துவிட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.'

- ஆர். காஞ்சனா,
நெய்வேலி - 3.






# புதியவை அறிமுகம்!

காமதேனு டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் (பி) லிமிடெட் கம்பெனியினர் காம தேனு என்ற புதிய சிகைக்காய்ப் பொடியை அறிமுகப்படுத்தியுள்ளனர். "இப்போது எல்லோருமே இயற்கை மூலிகைகளையே விரும்புகின்றனர். எனவேதான் சித்த மருத்துவ அடிப்படையில் சிகைக்காயுடன் கூந்தலுக்குத் தேவையான பல மூலிகைகளையும் கலந்து இந்தப் பவுடரைத் தயாரித்திருக்கிறோம்" என்கிறார்கள் இவர்கள்.

உடைந்து விடக் கூடிய கண்ணாடி பாட்டில்கள் போய் இன்று பாலி எத்திலீன் டிரப்தாலேட் என்னும் மூலப்பொருளால் தயாரிக்கப் படும் "பெட்" பாட்டில்கள் வந்து விட்டன. அவற்றில் எடை குறை வாகவும் உடையாதவையாகவும் இருப்பதுடன் உணவுப் பொருள் களையோ குடிநீரையோ வைத்திருப்பதால் எவ்வித வாசனையோ, வேதியியல் மாற்றமோ கெடுதலோ ஏற்படாத 'லிவ்பெட்' நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது.

"லிவ்பெட் பாட்டில்களை ஏராளமான டிசைன்களிலும், ஃப்ரிட்ஜ்களில் வைப்பதற்கு வசதியாகப் பல டிசைன்களிலும், ஸ்டிரா, பெல்ட் ஆகியவற்றைக் கொண்ட "லிவ்பெட் வாட்டர் பாட்டில்கள்" என பள்ளிக் குழந்தைகளுக்கு ஏற்றதாகவும் தயாரிக் கிறோம்" என்கிறார் இந்நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டர் பி. வி. ரமணன்.

பல தலைமுறைகளாக இந்தியா வின் நெ1 தையல் மெஷின் தயாரிப்பாளர்களாக சிறந்து விளங்கும் உஷா நிறுவனம், இப்பொழுது சர்வதேச அளவில் பிரசித்தி பெற்று விளங்கும் ஜெனோமி–ஜப்பான் தையல் மெஷின் கம்பெனியுடன் தொழில் ரீதியான கூட்டுறவு முறையில் தயாரித்து அளித்துள்ள புதிய தையல் மெஷின் 'ஜெனோமி – ஒண்டர் ஸ்டிட்ச்.

இது முழுமையான ஆடோமெடிக் தையல் மிஷின் என்பதோடு சூயிங் லைட், ஸ்நாப் ஆன், பிரெஸ்ஸர் ஃபுட், ஒன் டச் ரிவர்ஸ் ஸ்டிச்சிங், ஆட்டோ மெடிக் பட்டன் ஹோலிங், அக்குலர் ஸ்டிச்சிங், டிரிபிள் ஸ்டிரெங்த் ஸ்டிச்சிங் என நிறைய வசதிகளுடன் தையல் மெஷினில் சர்வதேச அளவில் முதன்மை வாய்ந்த தாகத் திகழுகிறது என் கிறார்கள்.



• பி. வி. ரமணன்


Palmolive






பிசுபிசுப்பான சருமத்திற்கு கூடுதல் தூய்மை தேவைப்படுகிறது. பாமோலிவ் எக்ஸ்ட்ரா கேர் சீனில் உள்ளது கூடுதல் க்ளென்ஸிங் க்ரீம். அதன் தவழும் நுரைவளம் சருமத்தின் மேலுள்ள அழுக்கைப் போக்கி பிறகு உள்ளாழம் வரைச் சென்று தூய்மைப்படுத்துகிறது. இதனால், பிசுபிசுப்பான சருமம் கூட பட்டுப்போன்று மிருதுவாக எழிலுடன் விளங்குகிறது.

**தொட்டால் தெரியும் பட்டின் மென்மை.**



# மர்மக்கலை வர்மக்கலை ஆனது!

"இந்தியாவில் வேறு எங்கும் இல்லாத கலை நம் தென்மாவட்டங்களிலே செழித்திருந்தது என்றால் அது வர்மக்கலை என்ற பெருமை நமக்குண்டு. வர்மம் என்பது முதலில் நோய் தீர்ப்பதற்காக முனிவர்களால் படைக்கப்பட்டது. நரம்பு சம்பந்தமான நோய்களைத் தீர்க்க ஆரம்பிக்கப்பட்டது. பிறகு அதுவே வளர்ந்து நரம்பு முனைகளைத் தெரிந்து கொண்டு, அதன் பலம் பலவீனங்களை அறிந்து அடித்தல் வீழ்த்துதல் எனச் சண்டைக் கலையானது. இதுவே பிறகு கராத்தே குங்பூ என மாறியது!"

என்கிறார் இந்தக் கலையில் தேர்ச்சி பெற்றவரும், பரம்பரையாக இத்தொழிலில் ஈடுபட்டுள்ளவருமான ஆசான். பதினெண் சித்தர் மருத்துவமனையில் வர்மக்கலை மூலம் மசாஜ் செய்வது, அதன் மூலம் பல நோய்களைத் தீர்ப்பது என இந்த பழங்கால முறையினையும் போஷித்து வருகிறார்கள்.

"இந்த மசாஜ் முறை ரொம்ப ஆபத்தானது இல்லையா? ஓரளவு அரைகுறையாகத் தெரிந்தவர்கள் செய்யும் போது அதனால் தீங்கு நேரவும் வாய்ப்பு இருக்கிறது."

"உண்மைதான். இந்த வர்மா சிகிச்சை முறைக்கு மட்டும் மிகத் தேர்ந்த நிபுணரிடம் மட்டுமே போவது நல்லது. எனவே நாம் சிகிச்சைக்கு உட்படுமுன் நன்றாக ஆராய்ந்து செல்வது நல்லது.

ஆனால் நரம்பு சம்பந்தமான சிகிச்சைக்கு வர்மா சிகிச்சை மிகச் சிறப்பான வழி. அந்த வகையில் எங்கள் ஆசான் அற்புதமான கலைஞராக, சிகிச்சையளிப்பவராக இருக்கிறார். அவரிடம் தேர்ந்த சீடர்கள் இருக்கிறார்கள்" என்கிறார் இம்மருத்துவ மனையின் நிர்வாக இயக்குநர் திருமதி. சிநேகலதா.

ஆசான் நம் உடம்பைப் பற்றிச் சொன்ன பல செய்திகள் வியப்பாக இருந்தது.

"நம் உடம்பில் 72,000 நரம்புகள் இருக்கின்றன என்று அந்தக் காலத்திலேயே சொல்லியிருக்கிறார்கள். போஜரும், அகத்தியரும் வர்மா சிகிச்சை பற்றிக் குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

நம் உடம்பில் நரம்பு முனைகள் மொத்தம் 108. அவற்றில் 96 தொடு வர்மம். 12 படுவர்மம். தொடு வர்மத்தில் அடிபட்டால் பெரிய பாதிப்பு இருக்காது. ஆனால் படுவர்மத்தில் அடிபட்டால் ஆள் பிழைப்பது கடினம்.

நரம்பு முடிச்சுகளும், நரம்புகளும் பாதிக்கப்படுவதே பெரும்பாலும் விபத்துக்களால்தான். விபத்து ஏற்பட்டு அடிபட்டு வந்திருப்பான். நன்றாகப் பேசுவான். ஆனால் படுவர்மத்தில் அடிபட்டிருந்தால் பட்ட இடத்திற்கு ஏற்ப சிலமணிகளில் இறந்து விடுவான். அவனுக்கு எங்கே அடிபட்டு இருக்கிறது என்பதை வைத்தே அவன் பிழைப்பானா, செத்துப் போவானா என்று சொல்லி விடலாம்.

அதே போல நம் உடம்பில் பல வாயுக்கள் சஞ்சரித்துக் கொண்டிருக்கும். அவற்றில் ஒன்று பாதிக்கப்பட்டாலும் கூட, பாதிக்கப்பட்டுள்ள இடத்திலுள்ள நரம்பு பாதிக்கப்படும். அதைத் தொடர்ந்து மற்ற இடங்களும் பாதிக்கப்படும். இப்படித்தான் பாரிச வாய்வு வருகிறது. இதே போல நிறைய ஸ்பாண்டிலைடிஸ் வருகிறது. மூட்டு வலி கணுக்கால் வலி, தோள்பட்டை காலர் போடுவது என நிறைய சொல்லிக் கொண்டே போகலாம்..."

"இப்போதெல்லாம் மூட்டுவலி, இடுப்பு வலி, ஆர்த்தரைடிஸ் என நிறைய வருகிறதே..."



• ஆசானுடன் உதவியாளர்கள்

"அதற்குக் காரணம் முன்பு போன்ற முறையில் பெண்களுக்கு வீட்டு வேலைகள் இல்லை. அரைத்தல், இடித்தல், மாவாட்டுதல், நெல் குத்துதல், பெருக்குதல், துவைத்தல் இவையெல்லாம் மிகச் சிறந்த உடற்பயிற்சிகள். அவற்றையெல்லாம் இன்று இயந்திரங்கள்

செய்கின்றன. அதனால் இயந்திரத்தின் பாகங்களைப் போன்ற நம் நரம்புகள் சரியான அசைவுகள் இல்லாத காரணத்தால் பிடித்துக் கொள்ளுகின்றன. ஒரு இயந்திரம் இருந்தால் அதற்குச் சரியான வேலை இருக்க வேண்டும் அல்லவா? அது போன்றதுதான் இதுவும். இப்படி வேலை முறையாக இல்லாமல் போகும் போது உடம்பும் தடித்து விடுகிறது. இதனால் மேலும் பிரச்னைகள். மூட்டு வலி, ஆர்த்தரைடிஸ் இவையெல்லாம் இப்படி வருவதுதான்..."

"என்ன செய்வது சார், எங்கள் தலைமுறைப் பெண்கள் இப்படிப்பட்ட வேலைகளைச் செய்யாமல் வேறு வேலைகளில் 'பிஸி'யாக இருக்கிறோம். நாங்க என்ன செய்வது?"

"உங்கள் நரம்பு மண்டலங்கள் சரியாக இயங்கு மாறு வைத்துக் கொள்ள வேண்டும். 'வேகமான நடை'ப் பயிற்சி நல்லது. தவிரவும் மாதத்திற்கு ஒருமுறை உடம்பில் மசாஜ் செய்து கொள்வது நல்லது. நலல வர்மா சிகிச்சை நிபுணர்களிடம் செய்து கொள்ள வேண்டும். அவர்களுக்கு வர்மப்பாயிண்ட்டுகள் சரியாகத் தெரியும். சோம்பி இருக்கும் அந்தப் பாயிண்டுகளை அவர்கள் தட்டி எழுப்பி மசாஜ் செய்து விடுகிறார்கள். இதனால் நல்ல ரத்த ஓட்டம் பாய்ந்து இந்த வாத நோய்கள் ஏற்படாது."

"இந்த உடம்பு பெருப்பது பற்றிச் சொன்னீர்களே. நடுத்தர வயதுப் பெண்கள் உடம்பு பெருத்து விடுகிறதே. உடம்பு பெருக்காமல் இருக்க உங்கள் மருத்துவத்தில் வழியுண்டா?"

"உண்டே..." என உற்சாகமாகச் சொன்ன இளம் டாக்டர்கள், "பிரண்டை அதற்கு மிகச் சிறந்த உணவுப் பொருள்" என்கிறார்கள். "பிரண்டையை நிறைய எடுத்துத் தூய்மையான இடத்தில் வைத்து அதை கரித்துக் கரியாக்கிக் கொள்ள வேண்டும். அதில் நீரை ஊற்றி வைத்தால் நன்கு வண்டலாகப் படியும். இரண்டு மூன்று முறை நீரை ஊற்றி வண்டல் படியவைத்து, மேலாக நீரை ஊற்றி விட்டு வண்டலை உலர்த்திப் பௌடராக்கிக் கொள்ள வேண்டும். அந்தப் பவுடரை தினமும் சிட்டிகை சாப்பிட்டு வர உடம்பு இறுகும். இத்தனை கஷ்டமும் படமுடியாதவர்கள் பிரண்டையைத் துவையலாகச் செய்து சாப்பிடலாம். உடம்பை இறுக்கும் பிரண்டைக்கு 'வஜ்ஜிரவல்லி' என்றே பெயர். எங்கள் நவீன முறையில் நாங்கள் 'வஜ்ஜிரவல்லி காப்ஸ்யூலே வைத்திருக்கிறோம்...."

"அதே போல உடம்பு இளைக்க கொள்ளு மிகச் சிறந்த உணவு. ஒரு கைப்பிடி கொள்ளினை குக்கரில் வைத்தால் வெந்துவிடும். அதனை வைத்து ரசம் செய்து சாப்பிட்டால் அத்தனை நல்லது. கொள்ளு சாப்பிடும் குதிரைக்கு ஊளைச்சதை எங்கேயாவது இருக்கிறதா எனப் பாருங்கள். தோல் இழுத்துக் கட்டியது போல இருக்கும். நாம் அடிக்கடி கொள்ளு ரசம் சாப்பிட நமக்கும் ஊளைச் சதை குறையும்" என்கிறார்கள்.

திரும்பவும் வர்மாவுக்கு வருவோம். பெண்களுக்கு வரும் மூட்டுவலி, இடுப்பு வலி போன்றவற்றிற்கும் வர்மா சிகிச்சை மூலம் மிகச் சிறந்த சிகிச்சை அளிக்கப்

---

கடைசிவரை ப்ரூ அல்லது நெஸ்கபே கட்டியாகாமல் இருக்க அவற்றை அவைகளின் உறையுடனேயே ஒரு சம்படத்தில் போட்டு மூடி வைக்கவும். ஒரு சிட்டிகை கூட வீணாகாது.

–கிரிஜா வைத்தியநாதன்





மோர்க் குழம்பு மீந்து விட்டால் அதில் சிறிது கடலை மாவு, அரிசிமாவு, வெங்காயம் கலந்து மொறு மொறு போண்டா செய்யலாம்.

மீந்த மோர்க்குழம்பில் அரிசி மாவு, அல்லது குறுணையைக் கலந்து ஊறவைத்து உப்புமா தயாரிக்கலாம்.

- என்ஷா

---

படுகிறது.

"இன்றைய வேலைகளில் உட்கார்ந்தபடியே கைகளை உபயோகிக்கும் முறைதான் அதிகம். டைப் செய்பவர்கள், இயந்திரங்களை இயக்குபவர்கள் இவர்களுக்கெல்லாம் கைவலியும் தோள்வலியும் இருக்கும். ஏன் இரண்டு சக்கர வாகனங்கள் ஓட்டும் அத்தனை பேருக்கும் கைவலி, தோள்பட்டை வலி இருக்கும். பல பேருக்கு முதுகு வலி வரும். காரணம் நம்முடைய ஊரின் சாலைகள் அந்த அளவில் இருக்கின்றன. இரண்டு சக்கர வாகனத்தில் மேடு பள்ளங்களில் ஏற்றி ஓட்டும்போது எங்கேனும் ஒரு நரம்பு பிசகிக் கொண்டாலும் பெரும் பாதிப்பு அவஸ்தைகள் ஏற்படும். பொதுவாகவே இரண்டு சக்கர வாகன ஓட்டுனர்கள் மாதம் ஒருமுறை மசாஜ் எடுத்துக் கொள்வது நல்லது. பெரும் அளவில் வலிகளைத் தவிர்க்கலாம்..." என்கிறார் ஆசான்.

இவர்கள் அதற்கென எண்ணெய் தயாரிக்கிறார்கள். அதனை ஊற்றி நீவி விடும்போதே நரம்பு முடிச்சுக்களைப் பரிசீலிக்கிறார்கள். அப்பொழுதே எந்த இடத்தில் பாதிப்பு ஏற்பட்டுள்ளது என்று அறிந்து கொள்கிறார்கள். ஒரு இடத்தில் அடிபட்டாலும் அதனோடு தொடர்புடைய நரம்பு முடிச்சு வரை பாதிக்கப்பட்டு இருக்கும். எனவே எங்கேயாவது இடித்துக் கொண்டால் அந்த இடத்தில் மட்டும் தேய்த்து விடுவது போன்றதல்ல மசாஜ். அந்த சம்பந்தப்பட்ட நரம்பு முனை வரை மசாஜ் மூலம் சென்று அடிப்படை காரணத்தை அறிந்து அதை நீக்குகிறார்கள் இவர்கள்.

"நீர் வீழ்ச்சிகளில் மசாஜ் செய்து விடுகிறார்களே..."

"அதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் நல்ல தரமான, முறையாக மசாஜ் அறிந்தவர்களிடம் செல்வதே நல்லது..."

"இதே கலையை தியதிற்கும் கூட பயன்படுத்துகிறார்கள் இல்லையா? ஒரேயடியில் எதிராளியைச் சாகடித்து விடுகிறார்கள் இல்லையா...?"

"உண்மைதான். இது உடம்பின் அடிப்படையையே, செயல்பாட்டையே அறிவது. அதனால்தான் தகுந்த தகுதியான சீடர்களுக்கு மட்டும் சொல்லித் தந்தார்கள். வாழைப் பட்டையை வெட்டிப் போட்டு அதில் எண்ணெயை ஊற்றி, கீழ் மட்டைக்கு எண்ணெய் போகாமல் முதலில் நீவிப் பழக வேண்டும். இப்படி வருடக்கணக்கில் பயிற்சி பெற்ற பிறகுதான் மனிதர்களுக்கு நீவச் சொல்லித் தருவார்கள். அதனால்தான் இதை மர்மமாக வைத்திருந்தார்கள். இதுதான் பிற்பாடு 'வர்மம்' என ஆனது..."

"அதே போல யோகிகளும் இதை உபயோகித்தார்கள் இல்லையா...?"

"ஆமாம், நீங்கள் கேள்விப்பட்டு இருப்பீர்களே, நான் இத்தனாம் தேதி இத்தனாம் நாழிகை சமாதி ஆவேன் என்பார்கள். உயிர் அந்த முனையில் வரும்போது அதன் வழியாக வெளியேற்றி விடுவார்கள். இப்படி யோகத்திற்கும் இதைப் பயன்படுத்தினார்கள்..." என்கிறார் ஆசான்.

நம் முன்னோர்கள் அறிந்திருந்த ஞானங்களைப் பற்றி அறிய அறிய பிரமிக்கத்தான் முடிகிறது.

- ஜ்வாலா

# மிஸ். யுனிவர்ஸ்

மே மாத நடுவில் பெருந்துறை, மைலாப்பூர் தேர்தல் பிரசாரம் பற்றிய தீப் பொறிச் செய்திகள் தினத்தாள்களில் பரபரப் பாக வந்து கொண்டிருந்த வேளையில், திடீ ரென்று ஒரு தலைப்புச் செய்தி. அநேகமாய் எல்லாச் செய்தித்தாள்களிலும் கொட்டை எழுத்துக்களில் - 'இந்தியப் பெண்மணி ஒருவர் உலக அழகிப் பட்டத்தைத் தட்டிச் சென்றார்' என்பது. கடந்த 43 வருடங்களாக நடந்துவரும் அழகி பட்டச் சரித்திரத்தில் ஆசிய நாடுகளில் ஒருவர் அதுவும் நம்மவர் 'உலக அழகி' பட்டத்தை வென்றது இதுதான் முதல் தடவை என்பது குறிப்பிடத்தக்கது.

36 - 24 - 36 அளவுகள், பளீரென்ற நிறம், நெடுநெடுவென்ற உயரம், அழகான, கவர்ச்சி யான நடை, உடை, முகம் - இத்தகுதிகள் தான் உலக அழகிப் பட்டத்தை நிர்ணயிக் கின்றன என நாம் நினைத்துக் கொண்டிருக் கிறோம். இது பெரும்பாலானவர்களின் கணிப்பு. உண்மை வேறு. "இவைகளு டன் மட்டுமல்லாது மற்றவர்களுடன் பழகும் முறை, நேரத்திற்கேற்ப உடைகளைத் தேர்ந் தெடுத்து அணியும் லாவகம்; - எல்லாவற்றிற் கும் மேலாக அறிவுத் திறனும் இருந்தால்தான் அழகிப் பட்டத்தை வென்றிட முடியும்" என்கிறார் உலகஅழகிப் போட்டிக்கு வருடா வருடம் இந்திய அழகி நெ. 1 ஐத் தேர்ந்தெடுத்து அனுப்பும் 'பெமினா' பத்திரிகையின் நிர்வாகி திரு. ராஜீவ் நம்பியார்.

"பல துறைகளில் முன்னணி யில் இருக்கும் பிரபலங்கள் நீதி பதிகளாய்ப் பொறுப்பேற்பார் கள். இவர்களின் நேரடிப் பார் வையில் பகுதி பகுதியாக பல போட்டிகள் கிட்டத்தட்ட ஒரு வாரத்திற்குமேல் நடத்தப் பட்டு, இறுதிக்கட்டமாக அதிக சதவிகித மதிப்பெண்கள் பெறும் பெண் மணி நெ. 1. அழகியாகத் தேர்ந் தெடுக்கப்படுவார். பிரதான நிகழ்ச்சி (Main event) உப நிகழ்ச்சி (Sub-event) என்று இரண்டு பகுதி களாகப் போட்டிகள் பிரிக்கப் படும். பிரதான நிகழ்ச்சியை அலங்காரப் பொருட்கள் தயாரிக்கும் நிறுவனங்கள் ஸ்பான்ஸர் செய்யும். இந்நிகழ்ச் சியில் நீச்சல் உடையில், சாதாரண உடையில், மாலை வேளை உடை யில் மற்றும் பர்சனாலிடி தேர்விலும் போட்டிகள் நடத்தப்படும். இளையனைத் தும் பல பேர் முன்னிலையில் நடத்தப்படும். திரைக்குப் பின்னால் உப நிகழ்ச்சியில் மிஸ் பர்ஃபெக்ட் ஸ்கின், மிஸ் அழகான கேசம், மிஸ் கேட் வாக் போன்றவை அடங்கும். இவைகளுக்கும் மேலாகப் போட்டியிடும் பெண்களைப் பொது இடங்களுக்கு அழைத்துச் சென்று அங்கு அவர்கள் பழகும் முறை, டிஸ்கோ நடனம் ஆடும் முறை ஆகிய வற்றிற்கும் மதிப்பெண்கள் அளிக்கப்பட்டு கணக்கில் சேர்த்துக் கொள்ளப்படுகிறது. இவை யாவும் வீடியோவில் பதிவு செய்யப் பட்டு நீதிபதிகள் முன்னால் போட்டுக் காண்



• சுஷ்மிதாசென்

# எப்படித் தேர்ந்தெடுக்கிறார்கள்?

பிக்கப்படும். "இதைத் தவிரவும் 'ரேம்ப்' போஸில் அதாவது, முன்னங்காலைச் சற்றே தூக்கிப் பின்னங்காலில் ஊன்றி நிற்கும் முறை, நீச்சல் குளத்தில் தொடைகளின் சதை ஆடாமல் நடக்கும் முறை, காஷுவலாகக் கேட்ட கேள்விகளுக்குப் பதறாமல் பாயின்டுடன் பேசும் முறை இவையனைத்தும் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படும்" என்று திரு ராஜீவ் நம்பியார் கூறியவுடன், 'அம்மாடியோவ், இவ்வளவு விஷயங்கள் உள்ளனவா இதில்?' என்று பிரமிக்காமல் இருக்க முடியவில்லை.

**சரி, மிஸ் யூனிவர் ஸைப் பற்றி மிஸ் மெட்ராஸ் 1992 என்ன சொல்கிறார் பார்ப்போம். மிஸ் மெட்ராஸ் 1992 ஷன்மதி ஷன்கர் (நம்ம நடிகை கஸ்தூரிதான்) -**



கஸ்தூரி

"ஆசிய நாட்டினைச் சேர்ந்த ஒருவர் உலக அழகியாக, கூடிய சீக்கிரத்தில் தேர்ந்தெடுக்கப் படுவார் என்று இரண்டு மூன்று வருடங்களாகவே இத்துறையைச் சேர்ந்த நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். ஆனால், அது இவ்வளவு சீக்கிரம் நிறைவேறும் என்று யாரும் நினைக்கவில்லை. உலக அழகி நெ. 1 ஆகத் தேர்ந்தெடுக்கப்பட அனைத்துத் தகுதிகளும் ஒருங்கே பெற்றவர் சுஷ்மிதா சென் என்று நிச்சயமாகக் கூறலாம்.




அதிக உயரமும், வெண்மை நிறமும்தான் அழகிப் போட்டிக்குப் பிரதான அவசியங்கள் என்கிற நீதிபதிகள் தற்போது விதிகளைச் சற்றே தளர்த்தியிருப்பது வரவேற்கக் கூடிய சமாசாரங்கள். குழந்தை மனமும், பண்பட்ட, தீர்க்கமான அறிவும் கலந்த சுவாரஸ்யமான அபூர்வப் பெண் சுஷ்மிதா. கிள்ளி எடுக்கச் சதையில்லாமலிருந்து அவரது உடலுக்கு எப்படி உரு ஏத்தி வெச்சிருக்கார் என்று பிரமிக்க வேண்டியதாக இருக்கிறது. தன்னம்பிக்கையோடு டென்ஷன் ஆகாமல் நிதானமாக பெண்மையைப் பற்றி அவர் அளித்த பதில் கூடுதல் மதிப்பெண்களை சுஷ்மிதாவிற்குப் பெற்றுத் தந்தன.

மற்ற நாடுகளை மூக்கை நுழைக்க விடாமல், குறுக்கு வழியைக் கையாளாமல் நிகழ்ச்சியை, திறமையை மட்டும் அடிப்படையாகக் கொண்டு நீட்டாக நடத்திய பிலிப்பைன்ஸ்காரர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்." இப்படிக் கூறிய ஷன்மதியை (கஸ்தூரியை) இடைமறித்து நாம்,

"சுஷ்மிதா சென்னின் வெற்றியைப் பற்றி உலகமே பாராட்டும்போது அவரது மாநிலத்தைச் சேர்ந்த வங்காளிகள் சிலரின் முணுமுணுப்பைப் பற்றித் தங்களது கருத்தென்ன?" என்று கேட்டபோது...

"வளருகின்ற நாட்டில், ஏழைகள் அவதியுறும் நாட்டில் இதைப் போய்ப் பிரமாதமாகப் பேச என்ன இருக்கிறது? என்று சொல்லும் அவர்கள் வாதத்தை ஓரமாகத் தள்ளுவதற்கில்லை. ஆனால் எதிர்காலத்தில் தனி மனிதனின் வெற்றி - ஒலிம்பிக்கைப் போல் இதுவும் பெரும் வரவேற்பினைப் பெறலாம். அந்நியச் செலாவணியை வெளிநாட்டினர் வந்து போவதால் அதிகம் பெறலாம், ஸ்பான்ஸர் செய்யும் நிறுவனங்களின் மூலம் அதிகப் பணம், மகத்தான விளம்பரம் போன்ற லாபங்களும் இதில் இல்லாமலில்லை. இத்தகைய நிகழ்ச்சிகள் ஒரு நாட்டின் கௌரவத்தை உயர்த்தவும் செய்கிறது" என்றார்.

அழகும், அறிவும் ஒன்று சேராது என்று யார்சொன்னது?

**- - கீதா மோஹன்**

# உங்கள் இடநெருக்கடிக்கு ஒரு நவீன தீர்வு. JFA வால்யூனிட்

எங்கள் ஷோரும்
பைலட் தியேட்டர் எதிரில்
மட்டுமே உள்ளது



இலவச "கலர் கேடலாக்கைப் பெற" எங்கள் விலாசத்திற்கு எழுதவும். உறையின் மீது "பைலட் தியேட்டர் எதிரில்" என்று மறக்காமல் குறிப்பிடவும்.

**JFA வால்யூனிட்கள்:** இவை டிஸ்ப்ளே (Display) மற்றும் ஸ்டோரேஜ் (Storage) அறைகளை கொண்ட அழகான, உறுதியான, நவீன கேபினட்கள்

**JFA வால்யூனிட்கள்:** இவை ஆக்கிரமிக்கும் இடம் மிகக்குறைவு, ஆனால் பலமடங்கு இடவசதி அளிக்கிறது.

**JFA வால்யூனிட்கள்:** இதில் TV, VCR, ம்யூஸிக் ஸிஸ்டம், அலங்காரப் பொருட்கள், நினைவு பரிசுகள், புத்தகங்கள், மற்றும் தினசரி தேவைப்படும் பொருட்களை அழகாக, ஒழுங்காக, பாதுகாப்பாக வைக்கலாம்.

**JFA வால்யூனிட்கள்:** பல மாடல்களில் உள்ளன.

பெருமையுடன் அலங்கரிக்க
**JFA வால்யூனிட்**
பத்திரமாக பாதுகாக்க

இட நெருக்கடிக்கு ஒரு நவீன தீர்வு

**JFA** ™ ஜெயபாரதம் பர்னிச்சர் & அப்ளையன்சஸ் (பி) லிமிடெட்
பைலட் தியேட்டர் எதிரில். 18, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை-600 014.
போன்: 8261384, 8260933, Telex : 041-6401 ESCM IN Fax : 91-44-8261332.

We accept Credit cards.

## சொல்ல விரும்புகிறோம்

• "என்ன சொக்குப்பொடி போட்டு மயக்கினாய் என் மையனை?" என்று கேட்கும் மாமியார்களுக்கு பதில் சொல்ல வைக்கும் விதத்தில் எழுதப்பட்ட "சமையலின் சுவை கூட்டும் சில பொடிகள்" என்ற பிரபா "டாக்டரின்" கட்டுரை உண்மையிலேயே டாப் டக்கர்.

தஞ்சாவூர் மேற்கு, ஜி. சுபத்ரா கோபாலகிருஷ்ணன்.

• உஷா சுப்ரமணியனின் "மாறி வரும் குடும்ப உறவுகள்" கட்டுரை நன்றாக இருந்தது. ஆண்மையை மனிதப் பண்புடன் பார்க்கும் சமூக மாறுதல் வரவேற்கத்தக்க ஒன்று. உடல் பலம், பணபலம் இரண்டு மட்டுமே ஆண்மையின் அடையாளம் அல்ல. இதம், கனிவு போன்ற உணர்ச்சிகளையும் அவர்கள் வெளிக்காட்டப் பழகிக் கொள்ள வேண்டும் என்ற வரிகள் என்னை மிகவும் கவர்ந்தன.

சிறுமுகை, ஜெகதா ஆறுமுகசாமி.

• கோவாவில் நடைபெறும் திருமண வைபவ சடங்கு முறைகளை (இரண்டு மணிநேரத்தில் திருமணம்) நாடு முழுக்க அமுலாக்கிட ஒரு சட்டமே இயற்றலாம்.

திருச்சி, ராஜேஸ்வரி ராம்குமார்.

• அடுப்பூதும் பெண்களால் ஷேர்மார்க்கெட் போன்ற கமர்ஷியல் சமாச்சாரங்களில் கூட ஜொலிக்க முடியும் என்று நிரூபித்து வரும் பினாரன்ஸ் ராஜாசிங்கின் சாதனை பெண்ணினத்திற்கு, குறிப்பாக நடுத்தர குடும்பப் பெண்களுக்கு நல்லதோர் ஊக்குவிப்பாக அமைந்திருந்தது.

செல்லிவலசு, பாரதி ராஜசேகர்.

• ஜூன் 94 இதழில் 'அர்த்தமுள்ள மவுனம்' நூலுக்குத் தொகுப்பாசிரியர் செருவை நாகராஜன் என்பதை விட்டு விட்டீர்களே. மிகவும் சிரமம் எடுத்துச் செய்த முயற்சி அது.

புதுக்கோட்டை, நாகராசன்.

• அடிக்கடி புன்னகை புரியுங்கள் - கட்டுரையை நம்ப பிரதமருக்கு அனுப்பி வைக்கத்தான் ஆசை, ஆனா அவருக்குத் தமிழ் தெரியாது, எனக்குத் தமிழ் மட்டும்தான் தெரியும், என்னங்க செய்வது?

வேலூர், திருமலை நாயகன்.

நரசிம்மராவுக்கு அனுப்பத்தான் ஆசை!

• அழகு நிலையம் நடத்தும் வைஜெயிபாபு அவர்கள் சொன்ன பத்து அழகுக் கட்டளைகளையும் தனியே வெட்டி அடிக்கடி கண்ணில் படும் இடத்தில் ஒட்டி வைத்து விட்டேன். மூளை, முடி, முகம் மூன்றும் அழகாக இருப்பதுதானே அழகு?!

சென்னை — 90, அனுபல்லவி.

• "அம்மா - வீட்ல இருக்கும் பாத்திரம், மூக்குத்தி எல்லாம் அடகு வைப்பாங்க. பிறகு பணம் கொடுத்து பாத்திரங்களை மீட்டுடுவாங்க. எங்களை மட்டும் மீட்டுக்கறதே இல்லை" என்ற பெண் குழந்தை நிலை கண்ணீரை வரவழைத்தது.

திருவண்ணாமலை, இந்திராணி சண்முகம்.

• தலைநகர் சென்னைக்கு அருகாமையில் நடைபெற்று வரும் ஒரு சமூகக் கொடுமையை உலகிற்கு உணர்த்து வதில் மங்கையர் மலரும், அதன் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ் அவர்களும் எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்கு ஒட்டு மொத்த மாதர் சமுதாயமே கடமைப்பட்டுள்ளது.

தோட்டக்குறிச்சி, கலைச்செல்வி வளையாபதி.

• "மூஞ்சைப் பாரு. இஞ்சி தின்ன குரங்காட்டம் இருக்கு" என்று பலர் சொல்லிக் கேள்விப்பட்டதுண்டு. இஞ்சியின் சிறந்த மருத்துவப் பயன்கள் பல. நோயே வராமல் தடுக்கும் சர்வரோக நிவாரணி அது. தெள்ளத் தெளிவான "இஞ்சி இடுப்பழகி" என்கிற கட்டுரைக்குச் சிரம் தாழ்ந்த நன்றி.

சென்னை – 47, ஜெயலட்சுமி ஈஸ்வரன்.

• "எல்லாம் ரெடிமேட்தான்" (வேலைக்குப் போகும் பெண்களுக்கு) கட்டுரை கண்டேன். எங்கள் குடும்பத்துக்காக –என்று- ஒவ்வொரு குடும்பத்தினரும் சொல்லும் வகையில் அருமையான யோசனைகள் நேரத்தை மிச்சப்படுத்த மட்டுமல்ல சுவையான உணவுகளையும் ருசித்துச் சாப்பிட - ஒரு பயனுள்ள பகுதியாக அமைந்திருந்தது. வரவேற்கப்பட வேண்டிய பகுதி தொடருங்களேன்.

பாண்டிச்சேரி, வசந்தராஜசெல்வன்.

• இஞ்சி இடுப்பழகி என்ற தலைப்பைப் படித்தவுடன் ஏதோ அழகுக் குறிப்பு என்று முதலில் நினைத்தேன். மூல நோய் பற்றியும், அதன் காரணங்களையும், நீக்கும் முறைகள் பற்றியும் டாக்டர் தெளிவாக விளக்கியுள்ளார். சாதாரண இஞ்சிக்கு இவ்வளவு மருத்துவ குணங்கள் உள்ளதா என மிகவும் ஆச்சரியப்பட்டேன். அனைவருக்கும் உபயோகமான செய்திகள் அளித்ததற்குப் பாராட்டுக்கள்.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

அட்டைவண்ணப்படம் : டி.சி. நாகேஷ்

# நாங்களும் உங்களைப் போலத்தான்..

• ருத்ரன்





• பாலன்



• லட்சுமி விஜயகுமார்

**ரொ**ம்ப நாளாக மனதில் ஒரு குறுகுறுப்பு. மற்றவர்களின் மனப் பிரச்னைகள் தீர பல வழிகளைச் சுட்டிக் காட்டும் மனவியல் மருத்துவர்கள் தங்களது சொந்த வாழ்வில் பிரச்னைகளை சந்திக்கும் போது மன முதிர்ச்சியுடன் அவற்றை எதிர் கொள்கிறார்களா? அல்லது 'குறி சொல்லும் பல்லி கூடு கஞ்சியில் விழுந்தது' என்கிற கதையாக, நம்மைப் போலவே உணர்ச்சி வசப்படுவார்களா? அவர்களுக்கும் மனச்சிக்கல், மனவியாதி ஆகியவை உண்டா? சுருக்கமாகச் சொன்னால் அவர்களது கல்வியும், அனுபவமும் சொந்த வாழ்வைச் செப்பனிட உதவுகிறதா?

இந்தக் கேள்விகளுக்கான விடைகளை சில மனவியல் மருத்துவர்களிடமே கேட்டால் என்ன? கேட்டால் மருத்துவர்கள் பளிச்சென்று பதிலைக் கூறினார்கள்:

"எம்.டி. படிச்ச டாக்டருக்கு கேன்சர் வருமா? என்கிற மாதிரி இருக்குது "மனவியல் மருத்துவர்களும் மனநோயால் பாதிக்கப்படுவார்களா?"ங்கிற உங்க கேள்வி" என்றார் டாக்டர் ருத்ரன்.

அவர் உணர்த்த விரும்பியது புரிந்தது என்றாலும் மேலும் ஒரு விளக்கம் தேவைப் பட்டது நமக்கு.

"அதெப்படி டாக்டர்? புற்று நோய் வர குறிப்பிட்ட எந்தக் காரணமுமே இல்லாமல் போகலாம். ஆனால் எண்ண ஓட்டங்கள் போகும் திசையை அறிஞ்சுக்கிட்டு அதைச் சரியான பாதையில் திருப்ப சைக்கியாட்ரிஸ்டுகளால் முடியக் கூடுமே."

"மனநோய்களில் ரெண்டு வகை இருக்கு. தீவிரமான மனநோய் என்பது மூளையில் ஏற்படும் ரசாயன மாறுதல்களால் உண்டாகிறதாம். இதை வரவிடாமல் தடுப்பது எங்கள் கையில் இல்லை. மிதமான மனநோய் என்பது சூழல், இறுக்கம், வளர்ப்பு இவற்றால் உண்டாவது. இவற்றை வளர விடாமல் தடுக்க மனவியல் மருத்துவர்களால் முடியும்." இதே கருத்தைத்தான் அவரது திருமண வாழ்வு பற்றிய பேச்சு வந்த போதும் குறிப்பிட்டார். "விவாகரத்து செய்துக்கிட்ட பிறகும் என் முன்னாள் மனைவியும், நானும் நல்ல நண்பர்களாக இருக்கோம்னா அதுக்கு நான் மனவியல் துறை தொடர்பானவனாக இருப்பதும் ஒரு காரணம்."

"உங்களுக்கும் ஃபோபியா, காம்ப்ளெக்ஸ் இதெல்லாம் உண்டா?"

"எனக்கு ஒட்டிய கன்னம். அதை மறைக்கத்தான் தாடி வளர்த்தேன். மருத்துவக் கல்லூரியில் நான்தான் பொருளாதாரத்தில் ரொம்பக் கீழ் மட்ட மாணவன். ஏதோ கோப முள்ள இளைஞன் போல என்னைக் காட்டிக் கொள்ள சிகரெட் பிடிக்கத் தொடங்கினேன்."

"அதெல்லாம் இன்னமும் ஏன்?"

"தாடியை நடுவிலே எடுத்துப் பார்த்தேன். போறவங்க வரவங்க எல்லாம் துக்கம் விசாரித்தது தாங்கல்லே. மறுபடியும் தாடி தொடர்ந்தது. சிகரெட்.. வெல், ஒட்டிக்கிச்சு."

மேனரிசங்களைப் போக்கிக் கொள்ள மனவியல் மருத்துவர்களை நாடுவது உண்டு. டாக்டர் ருத்ரனுக்கு அப்படிப் பட்ட மேனரிசங்கள் ஏதாவது உண்டா?

"திருமண வாழ்வு சம்பந்தமாக என்னிடம் கௌன் ஸெலிங்குக்கு வருவாங்க. கன்னத்திலே கையை வச்சுக்கிட்டு, கண்சிமிட்டாம மத்தவங்க சொல்றதைக் கேட்பது என் பழக்கம். என் பார்வை ராசி! வந்தவங்களில் சிலர் அதை வேறுவிதமாப் புரிஞ்சுக் கிட்டு "என்ன டாக்டர் நான் செய்தது தப்புன்னு நினைக்கிறீங்க போலிருக்கே"ம்பாங்க.

"கோபம் வருவதுண்டா? அப்படி வந்தால் அடக்கிக் கொண்டு அமைதியாகி விடுவீர்களா?" என்றதும் புன்னகைத்தார்.

"கோபப்படுவதில் தப்பில்லே. மனதிலேயே அதை அழுத்தி வச்சுக்கிட்டால் வடிகால் கிடைக்காது. தெருவிலே போகும் போது தப்பா வண்டி ஓட்டும் சைக்கிள் காரரை, லஞ்சம் வாங்கும் ட்ராபிக் போலீஸை இப்படிப் பல பேரை

வாய்விட்டுத் திட்டுவேன். சில நோயாளிகளின் குடும்பத் தினர்களிடம் தாங்க முடியாத கோபம் வரும். எப்போ தெரியுமா? "இவர் குணமாவிட்டார். டிஸ் சார்ஜ் செய்யறேன். வீட்டுக்கு அழைச் சிட்டுப் போங்க" என்றால் கூட தயங்குவாங்க. அப்போ கொஞ்சம் ட்ரமடைஸ் செய்தே திட்டு வதுண்டு" என்றவர் முத்தாய்ப்பாக "எங்களைப் போன்ற மனவியல் மருத்துவர்களுக்கும் மன நோய் வரலாம். பத்து வருடங்களுக்கு முன் எனக்கு டிப்ரஷன் ஏற்பட்டு, டாக்டர் ராஜ்குமார், டாக்டர் பீட்டர் ஃபெர்னான்டஸ் ஆகியவர்கள் கிட்டே போய் சிகிச்சை எடுத் துக்கிட்டு குணம் பெற்றதைச் சொல்வதில் எனக்கு எந்தவிதத் தயக்கமும் இல்லை" என்றார்.

"அதாவது ஊருக்குத்தான் உபதேசமா? அல்லது மத்தவங்களுக்குச் சொல்வதை நாங் களும் கடைப்பிடிக்கிறோமான்னு கேட்கறீங்க இல்லையா?" என்றார் டாக்டர் லட்சுமி விஜய குமார் சிரிப்புடன்.

"அதேதான்" என்றோம் பிரகாசமாக.

"ஆஸ்திரியாவைச் சேர்ந்த ஒரு சைக் கியாட்ரிஸ்டைப் பல செமினார்களில் சந்தித் ததுண்டு. நிறைய அனுபவமும், திறமையும் கொண்டவர். ஆனால் அறுபது வயதான அவர் சமீபத்தில் மனபாரம் தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொண்டாராம்" என்று நமக்கு ஒரு சிறு ஆச்சரியத்தைக் கொடுத்தவர் பிறகு தன் விஷயத்துக்கு வந்தார்.

"என் கணவரும் சைக்கியாட்ரிஸ்ட்தான். இந்தவிதத்தில் ஒருவருக்கொருவர் உதவியாக இருப்பதுண்டு. எங்களுக்குள் கருத்து வேறுபாடு எழுவதும் உண்டு."

உடனே அதை வளரவிடமாட்டார்களோ?

"அப்படி ஒன்றுமில்லை. நினைத்ததை சொல்லி முடித்து விட்டுத்தான் மறுவேலை. சொல்லப்போனால் ஃப்ராங்க்காகப் பேசுவது தான் என் தனித்தன்மை. அதை எதற்காக விட்டுக் கொடுக்க வேண்டும்?" என்றவர் தன்னை மனதளவில் பெரிதும் பாதித்த ஒரு சம்பவத்தையும் குறிப்பிட்டார்.

"என் பெற்றோருக்கு நான் ஒரே மகள். சில வருடங்களுக்கு முன்னே என் அம்மா மாடிப் படிகளில் உருண்டு விழுந்து விட்டார். எலும்பு முறிவு ஏற்பட்டது. ஏற்கெனவே அவ ருக்குக் கண்பார்வைக் கோளாறும் அதிக அளவில் உண்டு.

அவரை இன்டென்சிவ் கேர் யூனிட்டில் அனுமதித்திருந்த மூன்று நாட்களில், நான் ரொம்ப அப்செட்டாகி விட்டேன். தனியாக அப்போது இருக்க நேர்ந்த அப்பாவைப் பற்றி வேறு கவலை. எல்லாமாகச் சேர்ந்து ஒருவித டிப்ரஷன் ஏற்பட்டது. இந்த நிலையில் என் கணவரும் என் மனச்சோர்வைப் போக்க உதவினார்."

குழந்தை வளர்ப்பைப் பொறுத்தவரை இவரது போக்கு எப்படி? "தொல்லை கொடுக் கும் குழந்தை என்றால் எங்களுக்கு மட்டும் கோபம் வராதா என்ன! உங்களைப் போலவே தான் நானும். கோபித்துக் கொள்வேன். ஆனால் ஒரே வித்தியாசம் என்னவென்றால் மனவியல் மருத்துவரென்பதால், 'நாம் தவறாகக் கோபித்துக் கொண்டு விட்டோம்; குழந்தைக்குக் கூட சொந்த விருப்பு வெறுப்பு இருக்கலாம் நமது எண்ணங்களை அவர்கள் மீது திணிக்கக் கூடாது' என் பதையெல்லாம் உடனேயே உணர்ந்து கொள்வேன். பிறகு சூழ்நிலையை மாற்றத் தொடங்குவேன்" என்றார்.

டாக்டர் பாலன் "மனநல மருத்துவர் களுக்கு சிம்பதி (கருணை), எம்பதி (மற்றவரின் நிலையில் நம்மை வைத்துப் பார்ப்பது) இரண்டுமே வேண்டும். ஆனால் இந்த 'எம்பதி' அளவுக்கு அதிகமாக இருக்கக் கூடாது. ப்ராக்டீஸ் செய்யத் தொடங்கும் காலகட்டத்தில் பல சைக்கியாட்ரிஸ்டுகள் இந்த 'எம்பதி'யை அளவுக்கு அதிகமாக வளர்த்துக் கொண்டு விட்ட காரணத்தால் நோயாளிகளின் மனச்சுமையைத் தங்கள் மனத்தில் ஏற்றிக் கொண்டு டிப்ரெஷனில் விழுவதுண்டு" என்றார்.

பிறரது மனபயங்களைப் போக்கும் இவ ருக்கே எதைப் பற்றியாவது அச்சம் உண்டா

"நாங்களும் மனிதர்கள்தானே. என் னையே

## பேரிச்சம் பழம் மில்க் ஷேக்

நல்ல சதைப்பற்றுள்ள கொட்டை உடைய பேரிச்சம் பழத்தை வாங்கி வைத்துக் கொள்ளவும். இது மிகவும் மலிவான சத்தான பழம். மில்க் ஷேக் செய்யும் பொழுது 1 டம்ளர் மில்க் ஷேக்கிற்கு 4(அ)5 பழம், 2ஸ்பூன் சர்க்கரை தேவை. முதலில் பேரிச்சம் பழத்தை கொட் டையை நீக்கிவிட்டு பாதி பாலில் ½ மணி ஊற விடவும். பின்பு அதை சர்க்கரையை சேர்த்து சின்ன மிக்ஸியில் போட்டு நைஸாக அரைக்கவும். நைஸாக ஆனவுடன் மீதி பாலை விட்டு 2 நிமிடம் சுற்றி எடுத்து விட வும். இப்பொழுது பேரிச்சம் பழம் மில்க் ஷேக் ரெடி. இதை குழந்தை களுக்கு இரவு படுக்கும் முன் வெறும் பாலிற்கு பதிலாக கொடுத்தால் மிகவும் நல்லது. வயிறு நிறைந்து குழந்தைகள் நன்கு உறங்கும். பேரிச்சம் பழம் கொடுப்பதால் சளித் தொல்லை அறவே நின்று விடும். எல்லா சீசனிலும் செய்யக் கூடிய மில்க் ஷேக்.

-பத்மாவதி ராதாகிருஷ்ணன்





சிறுகதைப் போட்டி நடுவர்கள் - இளங்கோவன் ஐ.ஏ.எஸ், மஞ்சுளாரமேஷ், உஷாசுப்பிரமணியன்.

எடுத்துக் கொள்ளுங்கள். கோபம் வந்தால் சத்தம் போடுவதுண்டு. அது மட்டு மல்ல. ஸ்கூட்டர் போன்ற இரு சக்கர வாக னங்களில் போகும்போது பக்கத்தில் போகும் வண்டி ஏதாவது இடித்து விடுமோ என்று எனக்கு ஒருவித ஜாக்கிரதை உணர்வையும் தாண்டிய பயம் இருந்து கொண்டே இருக்கும்" என்கிறார்.

நெருங்கிய உறவினர்களிடம் சாதாரணமாக ஏதாவது யோசனை கூறினால் கூட "சைக் கியாட்ரிஸ்டுன்னு காட்டிக்கிறியே" என்கிறார்கள் என்பது டாக்டர் பாலனின் ஆதங்கம்.

"சைலன்ஸ் ஆஃப் தி லாம்ப்ஸ்" என்கிற படத்தில் நாம் பார்த்த கொடூரமான கொலைகார சைக்கியாட்ரிஸ்டின் நினைவு வந்தது நமக்கு (சிறந்த நடிப்புக்காக அந்தப் பாத்திரத்தை ஏற்ற ஆன்டனி ஹாப்கின்ஸுக்கு ஆஸ்கார் வாங்கிக் கொடுத்த படம் அது). அதுபோன்று நிஜ வாழ்வில் நடக்குமா?

தயக்கத்துடன், ஆனால் உறுதியாக பதிலளித்தார் டாக்டர் பாலன். "பிறப்பு, வளர்ப்பு ஆகியவற்றைப் பொருத்தது இது. இந்தத் தொழிலைச் செய்ய அருகதை இல்லாத சில சைக்கியாட்ரிஸ்ட் நண்பர்களை எனக்குத் தெரியும். கன்சல்டேஷன் நேரத்தில் தொலைபேசியில் (எனக்காக நோயாளிகள் காத்திருக்கிறார்கள் என்றாலும் அதைப் பற்றிக் கவலைப்படாமல்) வெகுநேரம் பேசுவது, இங்கு வரும்போது "புகை பிடிக்கக் கூடாது" என்ற போர்டைப் படித்த பிறகும் குப்குப் பென்று புகையை விட்டுத் தள்ளுவது - இவையெல்லாம் மற்றவர்கள் உணர்வுகளை மதிக்காதவர்களின் குணநலன்கள். இந்தச் செயல்களை மனவியல் மருத்துவரே செய் தால் எப்படி? இதெல்லாம் மிதமான உதாரணங்கள்தான். எக்ஸென்ட்ரிக்கானவர்கள் மற்ற எந்தத் தொழிலிலும் இருப்பது போலவே எங்கள் தொழிலிலும் தாராளமாக இருக்கலாம்."

-ஜி.எஸ்.எஸ்.

**மங்கையர் மலர்**
**&**
**ஃபாஹிமாஸ் ஜுவல் ஹவுஸ்**
(78. உஸ்மான்ரோடு, தி.நகர், சென்னை-17)
**இணைந்து நடத்திய சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்றவர்கள்:-**

முதல் பரிசு - 'ஆண் மனம்'
(1 சவரன் தங்கச் செயின்)
எழுதியவர் -
**திருமதி.எஸ்.சுபலட்சுமி (சரயு)**
திருப்பதி - 1

இரண்டாம் பரிசு- 'அஸ்திகள் பூக்கின்றன'
(¾ சவரன் காது தொங்கட்டான்)
எழுதியவர் -
**திருமதி. ஜெயா முத்து ஸ்வாமி,**
சென்னை - 41.

மூன்றாம் பரிசு - 'இனி ஓடுவதில்லை'
(½ சவரன் மோதிரம்)
எழுதியவர் -
**திருமதி. காஞ்சனா ஜெயதிலகர்.**
கொடைக்கானல்.

ஆறுதல் பரிசு - (தலா ஒரு கிராம் மொட்டுக்கம்மல்)

எழுதியவர்கள்-

1) எஸ்.பட்டம்மா, திருச்சி-6.
2) கோமதி சுந்தரம், பம்பாய்-54
3) கண்ணம்மா பகவதி, மதுரை - 18
4) ராமா ராமலிங்கம், செகந்திராபாத் - 15.
5) சுபஸ்ரீ, செகந்திராபாத் - 25.
6) பெ.நந்தினி, திண்டுக்கல்.
7) சு.தாமரை, கோவை - 7
8) ஜேசுதாஸ், விக்கிரமசிங்கபுரம்.
9) உஷா ஸ்ரீகுமார், சென்னை - 18.
10) இந்திராணி ராமமூர்த்தி, சேலம் - 1.

# வீட்டை அழகுபடுத்துங்கள்! - விருந்தினரை அசத்துங்கள்!

பள்ளிக்கூடங்கள் துவங்கி விட்டது என்றாலே ஆங்காங்கே ஐஸ்கிரீம் பார்லர்களும் ஸ்நாக்ஸ் பார்களும் முளைக்கத் துவங்கி விட்டிருக்கும். பொதுவாக இந்த இடங்களிலும் வீட்டு பார்ட்டிகளிலும் அதிக புழக்கமுள்ள ஒன்று 'பேப்பர் பிளேட்ஸ்' ஆகும். ஒரு முறை உபயோகித்து விட்டு தூக்கியெறியப்படும் இத்தகைய காகிதத் தட்டுக்களைக் கொண்டு அற்புதமாக வீட்டை அலங்கரித்து நம் விருந்தினர்களை அசத்தலாம். இதற்காக நமக்குத் தேவையானவை எல்லாம் கொஞ்சம் கற்பனைத் திறனும் ஓய்வு நேரத்தை ஒதுக்கும் மனப்பான்மையும்தான்.

எப்போதாவது வாங்கி மீந்துவிட்ட பேப்பர் பிளேட்களை எடுத்துக் கொள்ளுங்கள். அவற்றிலிருந்து அழகான பைகளை செய்யலாம். அவற்றைச் சரியான இடங்களில் சரியாகப் பயன்படுத்துவதன் மூலம் அனைவரின் பாராட்டையும் பெற முடியும். காகிதப்பை தயாரிக்கும் முறை :

1) இரண்டு காகிதத் தட்டுக்களை (ஒரே அளவில் அமைந்தவை) எடுத்துக் கொள்ளுங்கள்.

2) அதில் ஒன்றைப் பாதியாக மடியுங்கள் (படம் - 1) அதைச் சரிபாதியாக அரைவட்ட வடிவில் வெட்டிக் கொள்ளவும். வேண்டுமானால் நடுவில் 'V' வடிவில் வெட்டி அழகுபடுத்திக் கொள்ளலாம்.

3) இவ்வாறு வெட்டப்பட்ட ஒரு பகுதியை ஒரு முழுத்தட்டின் மீது வைக்கவும். சரியாகப் பொருந்தி அமைந்திருந்தால், அதன் உட்புற ஓரங்களில் பசை (அ) ஃபெவிகாலைத் தடவி அதன்மீது ஒட்டி விடவும். இப்போது அழகான பை தயார்.



உபயோகிக்கும் முறை :

(1) மேற்குறிப்பிட்ட முறையில் தயாரிக்கப்பட்ட காகிதப் பையின் மேற்புறத்தில் ஒரு துளையிட்டு அதில் ஒரு நூலை (அழகு வண்ணங்களில் கிடைக்கும் எம்பிராய்டரி நூலைப் பயன்படுத்தினால் இன்னும் அழகாக இருக்கும்) கட்டித் தொங்க விடவும். இதை உங்கள் குழந்தையின் அறைச் சுவரில் ஆணியில் மாட்டி வைத்தால் பேனா, பென்சில், ரப்பர் போன்றவற்றைப் போட்டு வைத்துக் கொள்ளலாம். (அ) கடிதங்களைச் செருகி வைத்துக் கொள்ளவும் அழகாகப் பயன்படும். இதை மேலும் உறுதியான தாக்க அதன் பின்புறம் சமவட்டமுள்ள அட்டையை ஒட்டிவிடுங்கள். நீண்ட நாட்கள் பயன்படும்.

(2) காகிதப்பை ஒன்றை எடுத்து உங்கள் சாப்பாட்டு அறையிலோ (அ) வரவேற்பறையிலோ சற்று உயரமான இடத்தில் ஒட்டி விடுங்கள். (முழுத் தாளின் பின்புறம் பசை தடவி) பிறகு பிளாஸ்டிக் பூக்களோ/தோட்டத்து மலர் களோ எடுத்துவந்து அழகாகக் கலை நயத்துடன் செருகி வையுங்கள். அற்புத மான சுவரிலே பதிந்த பூந் தொட்டி தயார். இது பார்க்க மிகவும் அழகாக இருக்கும். இதையே 3 காகிதப் பைகளை ஏறு வரிசையில் சாய்வாக இடை வெளி விட்டு ஒட்டுவதும் நன்றாக இருக்கும்.

இவ்வாறு உங்கள் கற்பனைத் திறனுக்கு ஏற்ப வீட்டை அழகுபடுத் துங்கள். காகிதத் தட்டுக்களை வாங் கும்போது வண்ணங்களைச் சரியாகத் தேர்ந்தெடுங்கள். பொதுவாக வெளிர் நிற வண்ணம் தீட்டப்பட்ட சுவர்களுக்கு ஆழ்ந்த நிறம் அற்புதமாய் எடுபடும். வண்ணத் தட்டுகள் கிடைக்காவிட்டாலும் வெள்ளைத் தட்டுக்களையே வாங்கி உங்கள் இரசனைக்கேற்ப வாட்டர் கலரில் அழகழகாய் டிசைன்களைத் தீட்டி அழகுபடுத்துங்கள்.

பிறகென்ன, உங்கள் விருந்தினர்களும், பக்கத்து வீட்டுக்காரர்களும் வாய்பிளந்து அதிசயிக்கப் போகிறார்கள், ஜமாயுங்கள்!

வித்யா

# நிம்மதி நிறைந்த உறக்கம்.!



# K.F.C

தயாரித்து வழங்குகிறது
நிம்மதியான உறக்கத்திற்கும் முதுகுவலி நிவாரணத்திற்கும்.

## மெத்தைகள்

- KFC காயர் & ரப்பர் ஃபோம் மெத்தைகள்
- KFC க்வில்ட் டைப் டீலக்ஸ் மெத்தைகள்
- KFC டீலக்ஸ் காயர் மெத்தைகள்
- KFC லே டக்ஸ் ஃபோம் மெத்தைகள்
- KFC சோபா செட் குஷன்கள்

## சுகமளிக்கும் தலையணைகள்

- KFC ஃபோம் தலையணைகள்
- "KFC பாலியஸ்டர் ஃபைபர் ஃபோம்" தலையணைகள்
- KFC பாலியஸ்டர் ஃபைபர் ஃபோம் திண்டுகள்
- KFC ரப்பர் ஃபோம் திண்டுகள்




Ph : 8523389, 830199

**கர்நாடகா ஃபோம் & காயர் கம்பெனி**

133, பைகிராப்ட்ஸ் சாலை, இராயப்பேட்டை,சென்னை-600 014.


இந்த விளம்பரத்தை கத்தரித்து கொண்டு வரும் சென்னை நகரவாசிகளுக்கு மட்டும் இலவசமாக டோர் டெலிவரி செய்யப்படும்

# ஆண் மனம்

"சுஜாதா! என்ன இது...? தினமும் இட்லியே போட றியே?"

"அது வந்து... எண்ணெய் குறைவாகத்தான் இருக்கு.. மாதக் கடைசி வரைக்கும் காணுமோன்னுதான்..."

"ஓ!..." அவன் தலையை உசுப்பிக் கொண்டான்.

மௌனமாக தட்டைக் காலி செய்து விட்டு வெளி வராண்டாவுக்கு போய் உட்கார்ந்தான்.

"ஏம்பா! சந்துரு! உன் ஆபீஸ் சமாசாரம் ஏதாவது தெரிஞ்சுதா?"

"என்னத்தைத் தெரியறதும்மா, யூனியன்காரங்க அடாவடியாக கேட்கறாங்கன்னு மேனேஜ்மெண்ட் பேச்சு வார்த்தைக்கே இடமில்லைன்னு கதவை இழுத்து மூடி விட் டாங்க... இதோ சம்பளம் இல்லாமல் மூணாவது மாதம் வரப் போகுது"

"எல்லாருக்கும் எத்தனை சிரமம்... இல்லையா?"

"இல்லாதவனுக்கு எப்பவும் பட்டினிதான்... இருக்கிறவன் எப்படியோ இழுத்துப் பறிச்சு சமாளிச்சுடறான்... நம்மைப் போல் ஒன்றுமில்லாம நடுவில் மாட்டிக் கொண்டவன் பாடுதான் திண்டாட்டம்"

"நீ வேணா யாரையாவது பார்த்து நம்ம நிலமையைச் சொல்லி..."

"தனி மனுஷனா இதில் நான் ஒண்ணும் பண்ண முடி யாதும்மா. கம்பெனி மனது வைத்து பாக்டரியின் கதவைத் திறக்கணும்... இல்லாவிட்டால் யூனியன் அவுங்க காலில் விழுந்து கெஞ்சணும். எதுவும் நடக்கறாப்பல தெரியல..."

"அவள் வேற நாற்பது நாளாய்..."

"தெரியும்மா" அவன் பெருமூச்சு விட்டான். "எனக்குத் தெரியும்."

"உனம்"

"நாளையிலிருந்து ஒரு கோவாப்ரேடிவ் ஸ்டோர்ஸில் டெம்ப்ரரியாக கணக்கு எழுத ஒப்புக் கொண்டிருக்கேன்.. போறேன்... ஏதாவது நாலு காசு புரட்டினால்தான் உப்பு, புளி செலவுக்காவது ஆகும்."

அவன் முகம் இறுகியிருந்தது.

எட்டியிருந்தே இவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள் சுஜாதா. பிறகு அடுப்படிக்குச் சென்று விட்டாள்.

மறுநாள் சந்திரசேகரன் வெளியே போக புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

"இந்தாங்க... இதை பாங்க்ல வச்சு கடன் வாங்கினால்..." சுஜாதா ஒரு ஜோடி தங்க வளையலை கழற்றி அவனிடம் நீட்டினாள்.

"உங்கிட்ட இருக்கறதே இது ஒண்ணுதான். அதையும் உருவிட்டா..."

"பரவாயில்லை... உங்க கம்பெனி திறந்ததும் மீட்டுக்க லாம்..."

"வேண்டாம்... வேண்டாம். நானே எப்படியாவது சமாளிக்கப் பார்க்கிறேன்."

அன்றுடன் அவர்களுக்குத் திருமணமாகி இரண்டு வரு டங்களாகிறது. தான் செய்த தப்பால்தான் இப்படியெல்லாம் ஆகிறதோ என்ற குமைச்சல் சுஜாதாவின் மனத்தில் அடிக்கடி தலைகாட்டும். மனத்தின் சஞ்சலமெல்லாம் ஒன்றுகூடி

தினம் தினம் அவளை அரித்துக் கொண்டிருக்கும் குற்ற உணர்ச்சியுடன் உடைந்து அன்று பெருக்கெடுத்து ஓட ஆரம்பித்து விட்டது.

இல்லை, இன்று அவள் அதற்குத் தீர்வு கண்டேயாகணும்.

சுஜாதா வேகமாக உள்ளே சென்றாள்.

தங்கம்மாள் மதியம் வழக்கமாக படுக்கும் இடத்தில் கண் மூடிக் கிடந்தாள்.

சுஜாதா அவளருகில் போய் நின்று கொண்டு அவளையே உற்றுப் பார்த்தாள். சலனமில்லை. தூங்குபவளை எழுப்ப தயங்கி மறுபடியும் திரும்பிப் போக நினைத்தவளுக்கு தன் கேவலை அடக்க முடியவில்லை.

"யாரு..? சுஜாதா! நீயா?" தங்கம்மாள் எழுந்து விட்டாள்.

"ஊம்... ஊம்..."

"உனக்கு உடம்பு சரியில்லையா?"

"இல்...லை" - தலையை ஆட்டினாள்.

"பின்னே என்ன சமாசாரம்? ஏதாவது லெட்டர் வந்துதா? உங்கப்பா உடம்புக்கு ஏதாவது...?"

மங்கையர் மலரும்
ஃபாஹிமாஸ்
ஜுவல்லர்ஸும் இணைந்து
நடத்திய சிறுகதைப்
போட்டியில்
முதல் பரிசு
(1 சவரன் தங்கச் செயின்)
பெற்ற கதை.

"ஊ...ஹூம்.. அதெல்லாமில்லை... நான் ஒரு பெரிய தப்பு பண்ணிட்டேம்மா..."

"என்னது! தப்பு பண்ணி விட்டாயா?"

"வந்து... வந்து..."

"உட்காரும்மா... விளக்கமாகச் சொல்லு"

"அம்மா, நான் படிச்ச பெண்தாம்மா"

"அப்படின்னா... முதலில் கண்ணைத் துடைச்சுக்கோ. கீழே உட்காரு."

சுஜாதா தரையைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தாள்.

"இப்ப நிதானமாகச் சொல்லு. என்ன சமாசாரம்?"

"எனக்கு ஜாதகத்தில் கோளாறு. செவ்வாய் தோஷம். அதோட மூல நட்சத்திரமும் சேர்ந்து கொண்டது. அதனால் வரன் சரியாக திகையல்லை... ஏதோ ஒண்ணு, ரெண்டு பொருந்தினாலும் எங்கள் சக்திக்கு மீறினதாக இருந்தது."

"ஊம்"

"உங்கள் பிள்ளை ஜாதகத்திலேயும் செவ்வாய் தோஷம் இருக்கவே பொருத்தமாக இருந்தது. அதோட மூல நட்சத்திரமும் நம் குடும்பத்துக்குப் பாதகமாக இல்லை."

"ஆமாம்... அதுக்கென்ன இப்போ?"

"உங்கள் பிள்ளை என்னைப் பற்றி விசாரிக்கறப்பவே போட்டோவை பார்த்துட்டு, "பிடித்திருக்கு. ஆனா எனக்குப் பணம், பண்டம் வேண்டாம். பெண் அடக்கமாக குடும்பத்துக்கு லாயக்காக இருந்தால் போதும். நான் பி.எஸ்ஸி.தான் படிச்சிருக்கேன். படிப்பு அதைவிட குறைவாக இருக்கணும்" என்று சொன்னாராம்."

"அப்புறம்..."

"ஆனால் நான் எம்.எஸ்ஸி., படிச்சிருக்கேன். எப்படியாவது எனக்குக் கல்யாணமானால் போதுமென்கிற வேதனையில் எங்கப்பா நான் +2 தான் படிச்சிருக்கேன்னு பொய் சொல்லி கல்யாணத்தை நிச்சயம் பண்ணி விட்டார்."

"ஆமாம், சந்துருவும் அப்படித்தான் என்னிடம் சொன்னான்."

"எங்கப்பா பண்ணினது ரொம்ப தப்பும்மா..."

# சரயு

"நீ எப்படி இதுக்கு சம்மதிச்சு சும்மாயிருந்தே?"

"நான் அப்பாவிடம் பல தடவை சொல்லிப் பார்த்தேன். பொய் சொல்லி கல்யாணம் பண்ண வேண்டாம். பின்னாடி வாழ்க்கையே நரகமாகி விடும்னு... ஆனால் அதுக்கு அவர் சொன்னார். 'குழந்தையில்லேம்மா நீ இன்னும், இதோ பாரு உங்கம்மாவுக்குக் கான் • ர் ஆபரேஷன் பண்ணி இப்பொழுதுதான் உடம்பு சற்று தேவலை. ஆனால் மறுபடியும் அது எப்பொழுது எப்படி திருப்பிக் கொள்ளுமோ தெரியாது. எனக்கும் இரண்டு தடவை ஹார்ட் அட்டாக் வந்தாச்சு. இந்த நிலைமையில் உனக்கு எப்படியாவது கல்யாணம் பண்ணி விடணும்னு தவிக்கறேன். உன் படிப்புக்கும் ஜாதகக் கோளாறுக்கும் ஏற்றபடி வரன் கிடைக்காமல் தட்டிக் கொண்டே வருது.. உனக்கும் வயசு ஏறிகிட்டுப் போகுது.. ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை..."

"அதுக்காக நீ அதிகம் படிக்கலைன்னு பொய் சொன்னாராக்கும்."

"உங்கள் பிள்ளையைப் பார்த்தவுட

னேயே அப்பாவுக்குப் பிடிச்சுப் போச்சு. நேர்மையான மனுஷன். பணம், சீர் ஒன்றுமே வேண்டாம். கல்யாணத்தை 'சிம்பிளா' செய்தால் போதும்னு சொல்றார். ஜாதகமும் பொருந்தியிருக்கு. என் படிப்பு ஒன்றுதான் தடையாக இருக்கவே மறைத்து விட்டார்."

"அப்புறம்?"

"தேதி குறிக்கிற வரைக்கும் கூட நான் தினமும் அப்பாகிட்ட சொல்லிக் கொண்டேயிருந்தேன்.. நிஜத்தை சொல்லி விடலாம்பா.. எனக்குப் பயமாயிருக்குன்னு. அதுக்கு அவர் சொன்னார்... இந்த வரனும் தட்டிப் போய் நீ கன்னியாகவே இருந்து நாங்கள் இரண்டு பேரும் இந்த வியாதியோட உனக்குச் சுமையாக கடைசி வரைக்கும் இருக்கணுமா... நீ இதுக்கு சம்மதிக்காவிட்டால் எனக்கு இன்னொரு தடவை ஹார்ட் அட்டாக் வந்தாலும் வந்து விடும்னார்."

"ஊம்"

"ஆனால் நீ மட்டும் தப்பித் தவறி கூட படிச்ச பெண்ணாக உன்னைக் காட்டிக்காதேன்னார். திருப்பதியில் கல்யாணம் நடந்ததால் எங்கள் மனுஷா அதிகமாக வரலை. அதனால் விஷயம் வெளியில் வர சந்தர்ப்பம் இல்லாமல் போயிடுத்து..."

"அதுக்காக நீ ஏன் இப்பொழுது அழறே?"

"இப்போ கம்பெனி 'லாக்-அவுட்' வேற பண்ணியிருக்கறதால..."

"ஆமாம், வீட்டு நிலைமை ரொம்ப கஷ்டமாகத்தானிருக்கு... பாவம், அவன் தத்தளிக்கிறான்."

"நானும் வேலைக்குப் போய் நாலு காசு சம்பாதிச்சு போடறேம்மா... கொஞ்சம் சமாளிச்சுக்கலாமே."

"எந்த வேலைக்குப் போவே?"

"மூணாவது வீட்டு சுசீலா டீச்சரைக் கேட்டேன். அவர் வேலை செய்யற கான்வென்டில் +2 கிளாசுக்கு கெமிஸ்ட்ரி டீச்சரே கிடைக்காமல் வேற சயன்ஸ் டீச்சரை கிளாஸ் எடுக்கச் சொல்றாங்களாம். நீ உடனே ஹெச். எம்.மை பாரு. நாளைக்கே கூட ஆர்டர் கொடுத்துடுவாங்கன்னார்."

"சரி"

"நான் போய் கேட்டுப் பார்க்கட்டுமா?"

சிறிது நேரம் மௌனம் நிலவியது

"உங்கள் பிள்ளைக்குத் தெரிந்து போய் அவர் சண்டை போட்டால்... எங்கம்மா செத்து போயிட்டாலும் நான் சுகமாக வாழ்ந்துண்டிருக்கேன் என்ற நினைவில் எங்கப்பா நிம்மதியாக இருக்கார்... இங்கே தகராறு வந்தால் அது அவர் உயிருக்கே யமனாயிடும்... நீங்கள்தான் உபகாரம் பண்ணனும்."

"பார்க்கலாம்" தங்கம்மாளின் கண்கள் இந்தப் பிரச்னைக்கு ஒரு தீர்வைத் தேட இங்கும் அங்குமாக அலைந்தன.

"நாங்கள் பண்ணினது பெரிய தப்புதான். அதை எந்த சமாதானத்தினாலும் நியாயப்படுத்த முடியாது. நீங்களாவது பெரிய மனது பண்ணி பொறுமையாகக் கேட்டுண்டிருந்திங்க. ஆனால் அவர்..."

"அதை அப்புறம் பார்க்கலாம்... முதலில் வேலை கிடைக்கட்டும்."

"நான் இப்பவே அந்த கான்வென்டுக்குப் போய் ஹெச்.எம்மைப் பார்த்து விட்டு வரட்டுமா?"

"சரி... போயிட்டு சீக்கிரம் வந்து விடு."

அடுத்த இரண்டு மணி நேரத்தில் குழப்பம் ஆள் மாறி ஏறிக் கொண்டது. சுஜாதாவின் மனது சற்று லேசானது. ஆனால் தங்கம்மாளின் மனது கனமாகி விட்டது.

"அம்மா! ஹெச்.எம். டிகிரி சர்டிபிகேட் டோட அப்ளை பண்ணினால் உடனே



வேலை கொடுத்துடறேன்னு சொன்னாள். கெமிஸ்ட்ரி டீச்சர் கிடைக்கறதே கஷ்டமாக இருக்காம்" - சுஜாதா பச்சைக் குழந்தை மாதிரி முகம் மலர படபடப்புடன் சொன்னாள்.

"........."

"டிகிரி சர்டிபிகேட் ஊரில் அப்பாவிடம் இருக்கு. இவரைக் கேட்காமல் எழுதறத்துக்கே எனக்குப் பயமாக இருக்கு."

"சரி... பார்க்கலாம்... பொறுமையாக இரு"

ஒரு வாரம் மந்த கதியில் ஓடிற்று.

அன்று சந்துரு சீக்கிரமாக வீடு திரும்பி விட்டான்.

"சுஜாதா! இந்தா... போய் பால் கார்டு வாங்கிண்டு வந்துடறயா? கையில பணம் இருந்தால் வேற செலவு வந்துடும்" - சந்துரு பாக்கெட்டிலிருந்து பணம் எடுத்துக் கொடுத்தான்.

பழைய பால் கார்டுகளையும் எடுத்துக் கொண்டு சுஜாதா வெளியே போனாள்.

"ஸார்! போஸ்ட்!"

சந்துரு வெளியே தலைநீட்டினான்.

"தங்கம்மாளுக்கு ரிஜிஸ்தர்!"



"தங்கம்மாவுக்கா? யாராயிருக்கும்?"

"இங்கே கையெழுத்து போடுங்க" என்று தபால்காரர் குறியிட்டுக் காட்டினார்.

சந்துரு கவரைப் பிரித்துப் பார்த்தான். சுஜாதாவின் எம்.எஸ்ஸி. சர்டிபிகேட் அவனைப் பார்த்துச் சிரித்தது.

அவ்வளவுதான். அவன் முகத்தில் ரத்தம் ஏறியது.

"அம்மா!... அம்மா! இங்கே வா, இதைப் பாரு" சந்துரு உச்சஸ்தாயியில் கூவினான்.

"என்ன சமாசாரம் சந்துரு?" கேட்டுக் கொண்டே தங்கம்மாள் வந்தாள்.

"சுஜாதா எம்.எஸ்.ஸி.யாமே! இந்த சர்டி பிகேட்டை பாரு. ஒரேயடியாய் பொய் சொல்லி கல்யாணம் பண்ணிட்டாரும்மா சுஜாதாவோட அப்பா... அவள் ப்ளஸ் டூன்னு வாய் கூசாமல் பொய் சொன்னாரே... பெரிய 'ஃப்ராடா' இருப்பார் போலிருக்கே... சீ! என்ன மட்டமான மனுஷர்" சந்துரு பொரிந்து தள்ளினான்.

"பெண்ணைப் பெற்றவாளுக்கு தன் குழந்தை கல்யாணம் ஆகாமல் நிக்கறதைப் பார்த்தால் மனது வேதனைப்படும். அதனால் சில சமாசாரங்களை மறைச்சிடுவா."

"எனக்கு உடம்பு பதர்றது... நீ என்னவோ வெகு நிதானமாக சொல்றியே! அதுக்காக இப்படியா புளுகணும்? நான் பி.எஸ்ஸி., அவள் எம்.எஸ்ஸியா? இரு... இரு... அவள் வரட்டும்."

"அதனால் என்ன குடி முழுகிப் போச்சு, இப்பொ?"

"என்னம்மா சொல்றே? அன்னிக்கே இது தெரிஞ்சிருந்தா...?"

"அவளுடைய அப்பா, அம்மா இரண்டு பேருக்குமே நல்ல உடம்பில்லை. அவர் பயப்பட்டது மாதிரியே அவளோட அம்மா போன வருஷம் செத்துப் போயிட்டாள். அவர் கையில் கூட பணம் ஓட்டமில்லை. அதனால்தானோ என்னவோ அவள் படிப்பை மறைச்சு கல்யாணம் பண்ணிக் கொடுத்து விட்டார். அதனால என்ன கஷ்டப்படறே நீ?"

"என்னை மிஞ்சி படிச்சிருக்கறவ எனக்கு அடங்குவாளா?"

"இத்தனை நாளில் அவள் என்னிக்காவது அப்படி நடந்திண்டிருக்காளா?"

"இனிமேல் நடக்கலாம்."

"ஓநாயும் ஆட்டுக் குட்டியும் கதை மாதிரியா. அது போகட்டும், எதுக்காக உன் பெண்டாட்டி உனக்குப் பயந்து, அடங்கி நடக்கணும் என்று எதிர்பார்க்கறே?"

"என்னம்மா பேசறே! நீ... உனக்கு வரவர வயசாகி..."

"பெண்டாட்டி புருஷனை விட அதிகமாக படிச்சிருக்கக் கூடாது... அவனை விட சாமர்த்தியமாக இருக்கக் கூடாது... கொஞ்சம் அசடா, உலக விவகாரம் தெரியாமல் இருந்தால் கூட பரவாயில்லை... அவனுக்கு ஒரு படி கீழேயே இருக்கணும். அவன் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு அவன் கிழித்த கோட்டை தாண்டக் கூடாது... ஆனாலும் அவள் அவனை விட அதிக அழகாகவோ, அதிக பணக்காரியாவோ இருந்தால் பாதகமில்லை... அப்படித்தானே?"

"என்னம்மா நீ 'விமன்ஸ் லிப்'ல ஏதாவது சேர்ந்துட்டயா? ஏதோ புதுசா பேசறயே! எந்த வீட்டிலேயாவது புள்ளையை விட அதிகமாக படிச்ச பெண்களை எடுக்கறாங்களா? அப்புறம் அதுகளுக்கு நாம் கைகட்டி சேவகம் பண்ணணுமா?" சந்துரு படபடத்தான்.

"மற்றவர்கள் மாதிரி நாம் வரதட்சணை, சீர், செனத்தியெல்லாம் கேட்கவில்லையே. நீயும் பெருந்தன்மையாக எளிமையாக கல்யாணம் பண்ணினால் போதும்னுதானே சொன்னே."

"அதுக்காக என் தலையில் மிளகாய் அரைத்துப் பொய் சொல்லி கல்யாணம் பண்ணணுமா?"

"பொறு, சந்துரு... நிதானமாக யோசித்துப் பார்... உன் கல்யாணத்தின் பொழுது நீ என்ன செய்தே?"

"என்ன செய்தேனா? யாருக்கு நினைவு இருக்கு? ஒரு மஞ்சள் கயிற்றைக் கொடுத்தாங்க... அவள் கழுத்தில் முடிச்சு போட்டேன்."

"அதுக்கு முன்னாடி?"

சந்துரு யோசித்தான்.

"என்னம்மா இது... நேரம் காலம் தெரியாமல் ஏதோ பேசிக் கொண்டு... உம்...ம்... ஏதோ நுகத்தடியை வச்சு..."

"அதேதான்! நுகத்தடியை வைத்துதானே மந்திரம் சொன்னார். நீங்க இரண்டு பேரும் ஜோடி மாடு போல இணைந்து இணங்கி சம்சார பாரத்தை இழுக்கணும்னு அர்த்தம்... அவர் உன் கையில் சாட்டைக் குச்சியை கொடுக்கல்லியே?"

சந்துரு பேசாமல் அம்மாவையே பார்த்தான்.

"கொஞ்ச நாள் முன்னே ராமாயண கதாகாலட்சேபத்தில் சொன்னார். ராமர் வில்லை எடுத்தார்; அது முறிந்து விட்டது. ஆனால் அதற்கு முன்பே ஒரு தடவை சீதை



**உபயோகமில்லாத மில்க் குக்கரின் உள்ளே ஐஸ் வாட்டர் ஊற்றி நிரப்புங்கள். விசிலை மூடி உள்ளே கொத்து மல்லி, காய்கறி, கீரை வகைகள் வைத்தால் மூன்று நாட்கள் புதிதாகவே இருக்கும்.**

**- இ. மஞ்சுளா**




# TAMIL NADU PEOPLE'S BENEFIT FUND (PURASAWALKAM) LTD.,

79, Perambur Barracks Road, Purasawalkam, Madras - 600 007.
Central Government Approved (Reg No.18-21907/91). ☎ 5323360

## DEPOSIT SCHEME

| | 46 Days | 3 Months | 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|---|---|---|---|
| FIXED DEPOSIT | 13% | 14% | 15% | 17% | 18% | 19% | 20% |

## 20% FOR SENIOR CITIZEN SPECIAL SCHEME

for Rs.10,000/- and above 1 year

*Your Deposit Doubles in 45 months Triples in 72 months.*

| | Rs. | 1 Year | 2 Years | 3 Years | 45 Months | 72 Months | 90 Months |
|---|---|---|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000 | 1,180<br>5,920 | 1,430<br>7,150 | 1,730<br>8,650 | 2,000<br>10,000 | 3,000<br>15,000 | 4,000<br>20,000 |

## "TAMIL MAHAL SELVAKALANCHIZAM" SCHEME

| | Rs. | 10 Years | 15 Years | 18 Years |
|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000<br>10,000 | 6,500<br>32,500<br>65,000 | 16,000<br>80,000<br>1,60,000 | 28,000<br>1,40,000<br>2,80,000 |

## "TAMILARASAN PORKUVIYAL" SCHEME

| ரூ.7500/- மட்டும் செலுத்தி 15- ஆம் ஆண்டு முடிவில் ரூ.1,25,000 பெறுவீர். | Rs | 15 Years | ரூ.9000/- மட்டும் செலுத்தி 15 - ஆம் ஆண்டு முடிவில் ரூ.1,50,000 பெறுவீர் |
|---|---|---|---|
| | 7,500<br>9,000 | 1,25,000<br>1,50,000 | |

## "SENTAMIL SELVAKUVIYAL" SCHEME ஒரு முதலீடு செய்து பெரும் பணம் பெறுவீர்.

| ரூ. 500/- மட்டும் செலுத்தி 21 - ஆம் ஆண்டு முடிவில் ரூ.35,000/- பெறலாம் | Rs | 21 Years | ரூ.250/- மட்டும் செலுத்தி 21 - ஆம் ஆண்டு முடிவில் ரூ.17,500/- பெறலாம் |
|---|---|---|---|
| | 500<br>250 | 35,000<br>17,500 | |

| | Rs. | 12Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|---|---|
| RECURRING DEPOSIT | 50<br>100 | 660<br>1,320 | 1,430<br>2,860 | 2,360<br>4,720 | 3,600<br>7,200 | 5.030<br>10,060 |

| கடன் | நகைகள் பேரில் கிராம் 1 க்கு ரூ. 300/- வழங்கப்படும் சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும். | வட்டி விகிதம் ரூ. 1.85 |
|---|---|---|

## SAVINGS DEPOSIT INTEREST RATE 10% P.A.

கொடுக்கல் வாங்கல் ரூ.1/- செலுத்தி பங்குதாரர்களாகிறவர்களிடம் மட்டும்.

Weekly Holiday Friday

Working Hours: Week Days 8.30 a.m. to 5.00 p.m. Sunday : 8.30 a.m. to 1.00 p.m.

| V. KRISHNAMOORTHY B.A. B.L.,<br>Secretary | A. THIAGARAJAN M.A.,<br>Executive Director | R. SUBRAMANIAN B.SC., B.L.,<br>President |
|---|---|---|

பந்தாடிக் கொண்டிருந்த பொழுது பந்து வில் வைத்திருந்த பெட்டிக்கடியில் போய் விட்டதாம். உடனே சீதை அந்தப் பெட்டியை அலட்சியமாக இடது கையால் தூக்கிப் பிடித்து வலது கையால் பந்தை வெளியே கொண்டு வந்தாளாம். அப்பேர்பட்ட சீதையை கன்னிகாதானம் செய்த பொழுது ஜனகர் சொன்னாராம் 'இவள் சீதை; என் மகள்; உனக்கு உடன் நின்று உதவும் மனைவி' என்று. அதாவது கஷ்டத்திலும் சுகத்திலும் பங்கெடுத்துக் கொள்பவள் என்று. அப்படி சகாயம் செய்கிற மனைவி உன்னை விட அதிகமாக படித்திருந்தால் தப்பில்லை."

சந்துருவின் கண் முன்னால் உருவிய தங்க வளையல்களுடன் சுஜாதாவின் கரம் வந்து போனது.

"இன்னும் கொஞ்ச நாளில் உனக்குக் குழந்தை பிறக்கப் போகிறது. அது பெண்ணானாலும் நீ உன் படிப்பான பி.எஸ்.ஸிக்கு மேல படிக்க வைக்கத்தான் போகிறாய். என் பெண் எம்.எஸ்ஸி., பி.ஹெச்.டி என்றெல்லாம் பெருமையாகச் சொல்லிக் கொள்வாய். உன் பெண் உன்னை விட அதிகம் படிக்கலாம். ஆனால் பெண்டாட்டி மாத்திரம் படித்திருக்கக் கூடாதா? சொல்லு!"

சந்துரு பதிலே பேசவில்லை.

"ம்.. அப்புறம் இதையும் தெரிஞ்சுக்கோ. இந்த சர்டிபிகேட்டை கூட அவள் வரவழைத்துக் கொள்ளல்ல. நான்தான் அவள் அப்பாவுக்கு எழுதியிருந்தேன். பக்கத்திலிருக்கும் ஸ்கூலுக்காவது அவள் வேலைக்குப் போகலாமென்னுதான். நான் எழுதினது கூட அவளுக்குத் தெரியாது."

தங்கம்மாள் சந்துருவை போதி மரத்தடியில் உட்கார வைத்து விட்டுப் போய் விட்டாள்.

இரவு சாப்பாடு முடிந்தது.

சுஜாதா மெதுவாக மாடி ஏறிப் போனாள். எண்ணச் சிக்கலில் அகப்பட்டுக் கொண்டு அவள் மனம் படபடத்தது.

"சுஜாதா! இந்தா! உன்னோட எம்.எஸ்ஸி., டிகிரி சர்டிபிகேட்" சந்துரு கவரை நீட்டினான்.

சுஜாதாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இது எப்படி இங்கே வந்தது?

திடீரென்று பயம் கவ்வ அவளுக்கு உதறல் எடுத்தது. உடனே விசித்து அழ ஆரம்பித்தாள்.

"சுஜாதா! என்ன இது! ஏன் அழுறே? நான் உன்னை கோவிச்சுக்க மாட்டேன்."

"அதுக்காக நான் அழலீங்க... நான் ஒரு போஸ்ட்கிராஜுவேட் என்கிற உண்மையை உங்களிடம் சொல்லாமல் மறைத்து வைத்திருந்த குற்றத்துக்காக வருத்தப்படறேங்க... அதுக்காக அழறேன்.. ஸாரிங்க" - அவள் கண்களிலிருந்து நீர் முத்துக்கள் கீழே உருண்டன.

"ஓ! தட் ஈஸ் ஆல்ரைட்... பார்க்கப் போனால் தப்பு என் பேரில் கூடத்தான் இருக்கு. மனைவி தனக்கு அடங்கியிருக்கணும். தன்னை விட அதிகமாக படித்திருக்கக் கூடாது. ஆனாலும் 'திஸ் ஈஸ் மை பெட்டர் ஹாஃப்'ன்னு மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தணும் - இப்படியெல்லாம் நினைச்சுண்டிருக்கிற ஆண் மந்தையில் இதுவரை நானும் ஒருவனாகத்தான் இருந்தேன். இப்பொழுதுதான் மனசு தெளிவடைஞ்சிருக்கு. மனைவி என்ன வாழ்நாள் பூராவும் அடங்கியிருந்தே சேவகம் செய்யும் கொத்தடிமையா? ஏன், குறைவாக படித்த பெண் கூட அடங்காபிடாரியாக இருக்கிறாளே..." - அவன் அவளிடம் பாவ மன்னிப்பு கோரும் மனிதன் போல் பேசினான்.

இந்தத் திடீர் பூச்சொரியலில் சுஜாதா நெகிழ்ந்து போய் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள். அவளை அருகில் அமர்த்திக் கொண்ட சந்துரு,

"அநேகமாக நீ முதல் சம்பளம் வாங்கறதுக்குள்ளேயே எங்களோட பாக்டரியும் திறந்து விடுவாங்க. சமரச பேச்சு நடந்துண்டிருக்கு" என்றான்.

"சந்தோஷங்க"

"இன்னொன்றையும் கேட்டுக் கொள். நீ இரண்டாவது மாதம் சம்பளம் வாங்கறதுக்குள்ளேயே உங்கப்பாவை மூட்டையைக் கட்டிக் கொண்டு இங்கேயே வந்து நம்முடன் தங்கச் சொல்லி எழுதி விடு. பெண் வீட்டில போய் இருக்கக் கூடாது என்கிற சம்பிரதாயமெல்லாம் வேண்டாம். அவர் மட்டும் அங்கே எதற்காக தனியாக திண்டாடிக் கொண்டு இருக்கணும்? எங்கம்மா இருக்காப் போல உங்க அப்பாவும் இருந்து விட்டுப் போகட்டும்."

பிற்போக்கு எண்ணங்களையும் மரபுகளையும் உடைத்துக் கொண்டு எழுந்த உணர்ச்சிகளின் சங்கமத்தில் மனிதம் விடிவெள்ளியாக முளைத்தது.




விரிசல் கண்ட மினரல் வாட்டர் பாட்டில்களை வீணாக்காமல் அவற்றை இரண்டாக வெட்டி மேல் பகுதியை புனலாகவும் கீழ்ப் பகுதியை பென்சில், பேனா போட்டு வைக்கும் ஸ்டாண்டாகவும் உபயோகிக்கலாம்.

- ஆர். வேதவல்லி



# மைதிலீஸ்

**Mrs. B. MYTHILI**
Dip. in Hair dressings,
River Academy, Honkcong.
Dip. in Teachers Training,
IVETE South America

தென்னிந்தியாவில் முதல் முறையாக முகம் முடியின் பாதுகாப்பிற்காக புதிய மிஷின்களைக் கொண்டு புதிய நுணுக்கங்களை அறிமுகப்படுத்தியுள்ளோம்.

மைதிலீஸ் நிறுவனம் மலேஷியா, தமிழ்நாடு, ஆந்திரா போன்ற இடங்களில் அழகுக் கலை நிபுணர்களை உருவாக்கியுள்ள நிறுவனமாகும். பயிற்சி நிலையத்துடன் சிகிச்சை களும் அளிக்கிறோம்.

I அழகுக் கலை நிலையம் ஆரம்பிக்க பயிற்சிக் கட்டணம் ரூ. 8500/- - காலம் 1 மாதம்

(அழகுக்கலை, கொண்டைகள் போடுதல், ஹேர்கட்டிங், முகம், முடி அழகிற்கான அனைத்து மெஷின்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுதல்)

II அழகுக் கலை நிபுணர்களுக்கான அட்வான்ஸ் கோர்ஸ் 2 நாட்களுக்கு மட்டும்:

(1) **Thermolysis :** முகத்தில் உள்ள தேவையற்ற முடியை அகற்றும் முறை. கட்டணம் ரூ. 2000/-

(2) **Aromatheraphy :** தேவையற்ற சதையைக் குறைக்க இயற்கை முறையில் உடல் அழகைப் பெற நறுமண சிகிச்சை முறையைப் பற்றித் தெரிந்து கொள்ளுதல் : கட்டணம் ரூ. 2500/-

(3) **Pigment implanting :** புருவத்தைப் பெரிதுபடுத்துதல். கட்டணம் ரூ. 2500/-

(4) **Electrotheraphy :** முகம், முடி பாதுகாப்பிற்காக [illegible]வையான மிஷின்களைப் பற்றிப் பயில ரூ. 2500/-

(5) **Chinese advance cutting :** கொண்டைகள் போடுதல் கட்டணம் ரூ. 2500/-

வெளிநாட்டு மாணவிகளுக்குத் தனி கட்டணம். **Hostel** வசதி உண்டு.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

# MYTHILI'S

**THE SCHOOL OF BEAUTY CULTURE AND HAIR DRESSING,**

No. 1, Prakasam Road,
Panagal Park, T. Nagar,
Madras - 600 017. Phone : 8255579

மங்கையர் மேனிக்கு மென்மையான

பெங்கால் காட்டன் சாரீஸ்...

எங்களிடம் மிக சிறந்த

Bengal Cottons மற்றும் Bengal Printed Silk

நியாயமான விலையில் கிடைக்கும்.

NEW DESIGNS * FAST COLOURS * FULL SIX YARDS

* DIFFERENT RANGES * VARIOUS VARIETIES

* BEST QUALITY

**ALSO**

**KANCHEEPURAM PURE SILKS ON INSTALMENTS**

for that Classical Touch of Bengal

*Visit Our NEW SHOW ROOM*

# CHARULATA Saree Shop

**13/3, 12th Avenue, Ashoknagar, madras - 600 083.**

**Phone : 4820358**



**சந்தியுங்கள்! பெயரியல் நிபுணர்**

**சி.வி. ராஜராஜன் அவர்களை**

உங்கள் வாழ்க்கையில் முன்னேற்றமில்லையா? அப்படியானால் உங்களுடைய பெயரே அதற்கு முழுமையான காரணமாக இருக்கும் என்கிறார். பெயரை உச்சரிக்கும் ஒலியில் மாற்றம் ஏற்படுத்துவதே பெயரியல் (Nameology) என்கிறார் எண்கணித பெயரியல் நிபுணரான சி.வி. ராஜராஜன்.

திருமணத்தடை நீங்கிட, குடும்ப வாழ்வில் கவலை போக்கிட, நோய்கள் தீர்ந்திட, நீங்கள் அழகு பெற, கணவன் மனைவி உறவு மலர்ந்திட, மாமியார் மருமகள் உறவு சீர் பெற, கடன் கவலை நீங்கிட, கையில் பணம் தங்க வில்லையே என்ற நிலை மாறிட தொழிலில் முன்னேற்றம் பெற, நவரத்தின கற்கள் மூலம் அதிர்ஷ்டமும் பெற! இன்றே இப்பொழுதே சந்தியுங்கள் எண் கணித பெயரியல் நிபுணர் சி.வி. ராஜராஜன் அவர்களை.

முகவரி :
12-B/1 ஆற்காடு சாலை,
விருகம்பாக்கம்,
சந்தோஷிமாதா கோவில் எதிரில்,
சென்னை - 92. போன் : 4832242

இப்படிக்கு
A.P. ராஜசண்முகம்,
ஸ்ரீ பழனியப்பா டெக்ஸ்டைல்ஸ்,
கரூர்.

'அபூர்வ சகோதரர்கள்' படத்தில் குள்ளனாக வரும் அப்பு படும் துன்பங்களைப் பார்த்து நாம் கண்கலங்கி இருக்கிறோம். சாதாரண மனிதர்களின் உயரத்தைவிட குள்ளமாகச் சிலர் பிறந்து வளர்வது இயற்கையின் விசித்திரங்களில் ஒன்று. ஆனால் இவர்களை நார்மலாகப் பிறந்துவிட்ட மனிதர்கள் கேலி செய்வதும், ஒதுக்குவதும்...

இன்றைய விஞ்ஞானம் வியத்தகு முறையில் வளர்ந்துவிட்டது. 'குள்ள அப்புவைக் கூட நாங்கள் உயரமாக்கிக் காட்டுகிறோம்' என மருத்துவர்கள் முன்வருவதுதான் ஆச்சர்யம். அப்படியும் ஒரு விந்தை நடந்து கொண்டுதான் இருக்கிறது.

கோவையிலிருந்து ஒன்றரை மணி நேரத்தில் பாலக்காட்டை அடைந்துவிடலாம். அங்கே இத்தகு விந்தை சிகிச்சை செய்பவர் டாக்டர் வைத்தியலிங்கமும் (பெயர் என்ன பொருத்தம்!) அவருடைய சகாக்களும்தான். வெஸ்ட் போர்ட்

# 'அப்பு'வும் உயரமாகலாம்!



சாலையிலுள்ள இவர்களுடைய ஆர். வி. கிளினிக்கில் 'லிம்ப் லென்த்தனிங்' எனப்படும் இதுபோன்ற பல சிகிச்சைகள் நடைபெறுவதைக் கேள்விப்பட்டு அங்கு சென்றோம்.

"இது ஏதோ மாய மந்திரம் இல்லை. விஞ்ஞான பூர்வமான சிகிச்சைதான்" என ஆரம்பித்த வைத்திய லிங்கம் இச்சிகிச்சை முறை வந்த விந்தைக் கதையைக் கூறினார்.

"மனிதர்களை வேண்டிய அளவிற்கு உயரமாக்கவோ குள்ளமாக்கவோ முடியும் எனக் கண்டு பிடித்தவர் டாக்டர் இல்லிஸரோ எனும் ரஷ்ய மருத்துவர்தான். சைபீரியாவில் குர்கேன் என்ற கிராமத்தில் இவர் வைத்தியம் செய்து கொண்டிருந்தார். சாதாரணமாக எல்லோரையும் போல எலும்பு முறிவுக்கு இவர்மற்றவர்களைப் போலத் தான் பிளேட்டுகளை வைத்தும், கட்டு கட்டியும் மருத்துவம் செய்து கொண்டிருந்தார். இவருடைய பேஷண்ட் ஒரு முறை தவறுதலாக இவர் முடுக்கி வைத்திருந்த கம்பிகளைத் திருகித் திருகி உயரமாகி விட்டதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்.

அப்போதுதான் அவருக்கு அந்த உண்மை புலனாகியது. எலும்புகளை 'கட்' செய்து, அதற்கென இடைவெளி விட்டுக் கம்பிகளைப்





துணிகளைத் துவைத்து உலர்த்தப் போகுமுன் அவற்றை ஓர் அலசு உப்பு (கலந்த) நீரில் அலசி உலர வைத்தால், உடுத்திக் கொள்ளும் போது துணிகளின் மேல் சோப்பு வாடையோ, பௌடர் வாடையோ துளிக்கூட இராது.

- அனுபல்லவி

பொருத்தினோமானால் அது வளர்ந்து கொண்டே வரும். மனிதன் தேவையான உயரத்தை இதன் மூலம் பெற முடியும் என்ற மாபெரும் உண்மையைக் கண்டுபிடித்தார். அதற்கென பிரத்தியேகமான ஸ்டேண்டுகளைத் தயாரித்தார். இந்த முறை 'இல்லிஸரோ முறை' எனப்பட்டது.

இது குள்ளமானவர்களை உயரமாக்க மட்டும் பயன்படவில்லை. ஒரு கால் குட்டை, ஒரு கால் நீளம் என இருப்பவர்களின் குறைகளையும் தீர்க்கலாம். விபத்துக்களால் உடைந்த எலும்புகளை இந்த முறையில் பொருத்தும்போது வெகு விரைவில் கூடுகிறது. சாதாரண முறையில் ஆபரேஷன் செய்து முழுமையாகச் சதையைப் பிரித்து உடைந்த எலும்பு வரை சென்றே சிகிச்சை செய்ய வேண்டும். ஆனால் இல்லிஸரோ உபகரணத்தில் இந்த முறை இல்லை. எக்ஸ்ரே மூலம் உடைந்த எலும்பு பாகத்தைக் கண்டுபிடிக்க வேண்டியது. தேவையான கம்பிகளை மட்டுமே மேலும் கீழும் நுழைத்து வெளியே ஸ்டேண்ட் பொருத்திவிட வேண்டியது. எலும்பு முறிவு வெகுவிரைவில் கூடிவிடுகிறது. ஆபரேஷன் நடந்த மூன்று நான்கு நாட்களில் நடக்க ஆரம்பிக்கலாம். இன்ஃபெக்ஷன் வருவதில்லை. பெரிய ஆபரேஷன் வடுவும் இருக்காது. துளையிட்ட இடங்களில் மட்டுமே வடு இருக்கும்.

இந்த முறையை இல்லிஸரோ அமைதியாகவே செய்து வந்தார். ஆனால் அமெரிக்கப் பத்திரிகையாளர் ஒருவருக்கு சைபீரியாவில் விபத்து ஏற்பட்டு இவரிடம் சிகிச்சை பெற்றார். இவருக்கு வியத்தகு முறையில் சரியானதைப் பார்த்து அதை அமெரிக்கப் பத்திரிகைகளில் பிரபலப்படுத்தி விட்டார்.

ஆனால் ரஷ்யர்கள் இவரை ஏற்றுக் கொள்ளவில்லை. இவரை மந்திரக்காரர், கண்கட்டு வித்தை செய்பவர் என்றுதான் சொன்னார்கள். அத்தனையையும் மீறி இவருடைய புகழ் பரவி எண்பதுகளில் உலகில் பல மருத்துவர்கள் இவர்முறையைக் கையாண்டார்கள். 87 - 88 - இல் இந்தியாவில் சிலர் கற்றனர். அவர்களில் நானும் ஒருவன். இப்போது இந்த முறையில் சிறப்பாகச் செய்யவே இந்த மருத்துவமனையை ஆரம்பித்தேன்."

இவரை மருத்துவராகவே பணிபுரிய விட்டுவிட்டு, மருத்துவமனையின் மற்ற பொறுப்புக்கள் முழுவதையும் இவருடைய மனைவி ராஜலட்சுமியும், மகள் கவிதாவும் ஏற்றுக் கொண்டு இருக்கிறார்கள்.

"இதனால் என்னால் முழுமையாக நோயாளிகளின் மேல் கவனம் செலுத்த முடிகிறது. என்னுடன் பணிபுரியும் டாக்டர் பாஸ்கரன் நாயரை இல்லிஸரோ மருத்துவத்தில் மேலும் சிறப்புப் பெறவே விட்டிருக்கிறேன். டாக்டர் வாசுதேவன், டாக்டர் சத்யபிரகாஷ் எல்லோரும் ஒரே டீமாக வேலை செய்கிறோம்" என்கிறார் வைத்திய லிங்கம்.

அற்புதமான ஆபரேஷன் தியேட்டர். கைகழுவ குழாயைத் தொட்டால் இன்ஃபெக்ஷன் வருமோ என காலாலேயே பெடல் அமுக்கிக் குழாயில் தண்ணீர் வரவழைக்கிறார்கள்! சுத்தமோ சுத்தமான அறுவை சிகிச்சை அறை.

அந்த மருத்தவமனையில் உலாவிக் கொண்டிருக்கும் நோயாளிகளை அழைத்து இல்லிஸரோ ஸ்டேண்டைக் காண்பித்தார்கள். அதைப் பார்க்கப் பய

# நிறைவான வாழ்வை அனுபவிக்க வழி காட்டுகிறது

# அனுபவ்




குடியிருக்க வசதியான அடுக்குமாடிக் கட்டிடம்... விடுமுறையை அனுபவிக்க 'டைம் ஷேர்' உல்லாச விடுதிகள்... வரி இல்லாத நீண்ட கால வருமானத்திற்கு பழத் தோப்புகள் மற்றும் தேக்கு மரக் காடுகள்... இப்படிப் பல சிறந்த பணிகளைத் திறமையோடும் கடமை உணர்வோடும் நிறைவேற்றி, பல்லாயிரக் கணக்கான வாடிக்கையாளர்களின் நம்பிக்கையையும் பாராட்டையும் பெற்றுள்ள 'அனுபவ் குரூப்'பின் நிதிநிறுவனமான 'அனுபவ் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்' வழங்கும் இரு அருமையான சேமிப்புத் திட்டங்கள்:

## 'அனுபவ்' வைப்பு நிதித்திட்டம்

| | |
|---|---|
| மூன்றாண்டுகளுக்கு மேற்பட்ட வைப்பு நிதிகளுக்கு வட்டி | 24% |
| ஓர் ஆண்டுக்கு மேல் மூன்று ஆண்டுகளுக்கு வட்டி | 21% |
| 45 நாட்களுக்கு மேல் ஓர் ஆண்டுக்குட்பட்ட வைப்பு நிதிகளுக்கு வட்டி | 18% |

குறைந்தபட்ச டிபாசிட் ரூ. 10,000/- அதற்கு மேல் ரூ. 1000/- வீதம்.

வட்டித்தொகை பின் தேதியிட்ட மாதாந்திர காசோலைகளாக முன் கூட்டியே அளிக்கப்படும்.

## 'அனுபவ்' பத்திரம்

குறைந்த பட்ச முதலீடு ரூ. 25,000/- அதற்கு மேல் ரூ. 5000/- வீதம்.

3½ ஆண்டுகள் ஆனதும் முதலீடு செய்யப்பட்ட தொகை இரு மடங்காகத் திருப்பித் தரப்படும். முதலீடு ரூ. 25,000/- என்றால் மூன்றரை ஆண்டுகள் முடிந்தவுடன் கிடைப்பது ரூ. 50,000/-.

## அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மென்ட்ஸ்

அனுபவ் சென்டர் 11, சோமசுந்தரம் தெரு, தி. நகர், சென்னை - 600 017.

ஃபோன்: 8254155/8282833/8283316/8282629 ஃபேக்ஸ்: 044-8284967

EFFICIENT

**'அனுபவ்' நிம்மதியான வாழ்க்கைக்கு நம்பகமான அடித்தளம்.**

எமது கிளை அலுவலகங்கள் : கோயமுத்தூர் : 101 - 105, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம் - 641 002; சேலம் : சிவா காம்ப்ளக்ஸ், (சாரதா கல்லூரி எதிரில்), ஃபேர் லேண்ட்ஸ் - 636 0116 கொச்சி : XXXIX/5748 - A இரண்டாவது மாடி, சசிமெல் சாம்பர்ஸ், குதிச்சப்பள்ளி, (Off : எம்.ஜி. ரோடு) - 682 015.




Phone : 25922
22623


# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

***(FREE HOME FOR THE BLIND AND AGED)***


*2-21A, Saptagiri Ashram*
*P.O. TIRUCHANUR, TIRUPATI - 517 503*




## ஒரு வேண்டுகோள்

திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்தில் கடந்த 14 வருடங்களாக ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்வாமிகளின் விசேஷ அநுக்ரஹத்துடன் செயல்பட்டு வரும் நவஜீவன் ஆச்ரமத்தில் பார்வையற்ற குழந்தைகள் மற்றும் ஆதரவற்ற முதியோர்களுக்கு பலவிதங்களிலும் உதவி வழங்கப்படுகிறது.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை :

திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் தற்போது வசித்து வரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் விழிகளை இழந்த குழந்தைகளுக்கு ஆஸ்திக அன்பர்களின் சார்பாக பிரதி தினமும் மூன்று வேளை தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது.

திருப்பதி புண்ணிய ஸ்தலத்தில் மேற்படி நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு ரூ. 500/- (ருபாய் ஐநூறு) செலவு ஆகிறது. ஆஸ்திக அன்பர்கள் வருடத்தில் ஒருநாள் (தங்களுடைய பிறந்த நாள், திருமணநாள், குழந்தையின் பிறந்த நாள், அல்லது முன்னோர்களின் திதி நாளில்) நவஜீவன் ஆச்ரமத்தி'ன் பார்வையற்ற குழந்தைகளுக்கும், ஆதரவற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்கி ஸ்ரீவெங்கடேசப் பெருமானின் அருள் பெறும்படி வேண்டுகிறோம். அன்னதானம் வழங்கும் அன்பரின் சார்பாக குறிப்பிட்ட நாளில் ஸ்ரீ ஏழுமலையானுக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து ஸ்ரீ பெங்கடேசப் பெருமாள் - ஸ்ரீ பத்மாவதி தாயார் பிரசாதத்துடன் விவரம் அனுப்பி வைக்கப்படும். தவிரவும் திருப்பதி யாத்திரையை மேற்கொள்ளும் போது தேவையான ஆலோசனைகளும், வழங்கப்படும்.

நவஜீவனுக்கு அளிக்கும் டொனேஷனுக்கு வருமான வரி சலுகை உண்டு. Donations to "Navajeevan Blind Relief Centre" is exempted from Income Tax under 80 G act. Vide letter No. 1-118-84-85 Valid upto 1995.

ஆஸ்திக அன்பர்கள் தங்களது டொனேஷனை By Ch/DD/MO வாயிலாக ''**Navajevan Blind Relief Centre**'' என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

''யாதேவி சர்வபூதேஷு தயாருபேண ஸம்ஸ்திதா''

''ஓம் நமோ ஸ்ரீ வெங்கடேசாய''

நாராயண சேவையில்
K.S. ஆசார்ய
Founder/President

மாக இருந்தது. காவடிக்கு அலகு குத்திக் கொண்டிருக்கும் பக்தர்களைப் போல இருந்த நோயாளிகளோ வலியின்றிச் சிரித்தார்கள்.

மாட்டு வண்டியிலிருந்து விழுந்து காலை ஒடித்துக் கொண்டவர், பைக் ஆக்ஸிடெண்டில் கை ஒடிந்த இளைஞர், பஸ் ஸ்டாண்டில் 'தேமே' என நின்றவரை இடித்துவிட்டுப் போன ஆட்டோ காரணமாக தொடை எலும்பு முறிந்த வயதான பெண்மணி... இப்படி அனைவரும் அந்த ஸ்டேண்டை மாட்டிக் கொண்டிருந்தார்கள். அவரவருக்குத் தேவையான வகையில் தேவையான உயரத்திற்குப் பொருத்தப்பட்டு இருக்கிறது.

"ஆனாக்க வலி ஒண்ணும் இல்லை. ஆபரேஷன் செஞ்ச மூணாம் நாளே நடக்கச் சொன்னாங்க. நடக்க முடிஞ்சுது. இப்போ ஒண்ணும் இல்லை. கால் பூமியிலே பதிஞ்சு நடக்க முடியுது..."

"இதற்கு முக்கியமான மற்றொரு பகுதி உண்டு. அதுதான் போலியோவால் வளைந்த பாதங்கள். இவர்களின் பாதங்களையும் நேராக்க முடியும். முழுமையாக பாரிச வாயுவால் பாதிக்கப்பட்ட கால்களைத்தான் இயங்கச் செய்யமுடியாது. சில 'போலியோ' நோயாளிகளின் நிலையைக் குணமாக்க முடியாது. ஆனால் கால்களை நேராக்க முடியும்" என்கிறார் வைத்தியலிங்கம்.

தரையில் [illegible] இழுத்து நடந்து கொண்டிருந்த ஒரு இளைஞரின் ஒரு காலை நேராக்கி இருக்கிறார்கள். அந்த இளைஞன் பரம ஏழை. மற்றொரு காலுக்குப் பணத்தைப் பலரிடம் கேட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.

"இப்படி எங்களிடம் பலர் வருகிறார்கள். இவர்களைப் போல இருப்பவர்களுக்கு யாரேனும் ஸ்பான்சர் செய்தால் ஒருவனுக்கு வாழ்க்கையையே கொடுத்த மாதிரியல்லவா? நாங்களும் மருத்துவர் செலவு இல்லாமல், தேவையான உபகரணங்களுக்கு மட்டுமே வாங்கிக் கொண்டு ஆபரேஷன் செய்யத் தயாராக இருக்கிறோம்" என்கிறார் வைத்தியலிங்கம்.

இந்த நவீன பிரம்மாக்கள் இப்படி மனிதர்களை உயரச் செய்ய முடியும் என்கிறார்களே. இதையே யாரேனும் விபரீதமாக எடுத்துக் கொண்டு ஒரு பத்தடி மனிதனை உருவாக்கினால்...

"இது மருத்துவ உலகின் தர்மங்களுக்குப் புறம்பானது. நாங்கள் மனிதர்களின் துன்பங்களைப் போக்கத்தான் இருக்கிறோம். குள்ளர்களை உயரமாக்கும்போது கால்கள், கைகள் இரண்டையும் உயர்த்த வேண்டும். அதற்கான ஸ்டேண்டுகளைப் பொருத்தி ஒரு நாளைக்கு ஒரு மில்லி மீட்டர் ஸ்குருவை முடுக்குவோம், அதையும் கூட நான்கு வேளையாகப் பிரித்து (மாத்திரை சாப்பிடுவது போல) ஒரு மாதத்திற்கு ஓர் அங்குலம் வீதம் உயரச் செய்ய முடியும். இவை அவர்களின் குறையைப் போக்கவே செய்கிறோம். இயற்கையோடு விபரீதமாக நாங்கள் மோதத் தயாராக இல்லை. எனவே நீங்க சொன்ன மாதிரி யாரும் செய்யவும் மாட்டார்கள். செய்து கொள்ள யாரும் சம்மதிக்கவும் மாட்டார்கள்...." என்கிறார்.

விஞ்ஞானத்தின் விந்தை கண்டு பிடிப்புக்களை நினைத்து வியந்து கொண்டே கோவை திரும்பினோம்.

- பவித்ரா

சைக்கிள், ஸ்கூட்டர், தாழ்ப்பாள் முதலியவற்றிற்கு எண்ணெய் இடும்போது தேங்காய் எண்ணெயை மட்டும் உபயோகிக்காது (தே. எண்ணெய் மட்டும் உபயோகித்தால் துரசு படியும், சில வேளைகளில் எண்ணெய் வாசனைக்கு செவ்வெறும்பும் வரலாம்) அதோடு சிறிது மண்ணெண்ணெயையும் கலந்து உபயோகித்தால், எண்ணெய் சீக்கிரத்தில் உலர்ந்து விடும். துரசும் படியாது. எண்ணெயின் உபயோகமும் கம்மியாவதோடு அதே பலனும் கிட்டும்.

- அனுபல்லவி



நான் சுற்றுலா போன போது... வி.ஜி.பி. கோல்டன் பீச்சும், மங்கையர் மலரும் இணைந்து நடத்திய சுற்றுலா போட்டியில் பரிசு பெற்ற கட்டுரைகள்.




**நா**ங்கள் +2 படிக்கும் போது குன்னூருக்கு உல்லாசச் சுற்றுலா சென்றோம். வழியில் ஓர் ஓடை அழகாக இருக்கவும் நாங்கள் இறங்கி உல்லாசமாகக் கை கால் கழுவிக் கொண்டோம்.

அப்போது எங்களுடன் வந்த பையன்கள் மேலும் சிறிது தூரம் உள்ளே சென்று தண்ணீரில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். எங்கள் தலைவி அவர்கள் விளையாடுவதை சீரியஸாக எடுத்துக் கொள்ளாமல், 5 நிமிடங்கள் கழித்து எல்லோரையும் பஸ்ஸில் ஏறச் சொன்னார். பஸ் கிளம்பி விட்டது. திடீரென்று பையன்கள் பக்கமிருந்து, ரத்தம்! ரத்தம்! என்று ஒரே சத்தம். ஒருவருக்கும் ஒன்றுமே புரியவில்லை. ஒரு மாணவர் தன் காலின் பாதத்திலிருந்து ரத்தம் வருவது கூட தெரியாமல் உட்கார்ந்து இருந்தார். பின் மற்றுமொரு மாணவருக்கும் பாதத்திலிருந்து இரத்தம் வர ஆரம்பித்தது. அதற்குள் குன்னூரை அடைந்து விட்டோம்.

உடனேயே ஒரு மருத்துவரிடம் அழைத்துச் சென்றதில் மாணவர்களின் காலில் அட்டை எனும் பூச்சி நுழைந்து விட்டது என்று கூறி, அதை உடனே காலிலிருந்து எடுத்தும் விட்டார். ஓடை நீரிலிருந்து காலினுள் நுழைந்திருக்கலாம் என மருத்தவர் கூறினார். அந்தக் காலைப் பொழுது எங்கள் எல்லோருக்குமே அந்த வயதில் மிகவும் திகிலாக இருந்தது. கடவுளின் ஆசியால் இருவருக்கும் சரியாகி விட்டது.

- ஜகதா நல்லபெருமாள்,
வாலாஜாபேட்டை.

# வண்டியில் ஏறிய எருமை மாடு

**நா**ங்கள் தனிப்பட்ட முறையில் சுற்றுலா சென்றோம். அந்த பஸ் தஞ்சையை விட்டு புறப்பட்டது. ஒரு நடுத்தர வயது தம்பதியர் பஸ்ஸில் ஏறினர். முதலில் ஏறிய கணவர் கண்களால் பஸ்சை துளாவினார். மூவர் அமரும் இருக்கை ஒன்றில் ஒருவர் மட்டுமே அமர்ந்திருப்பதைக் கண்டு விறுவிறுவென்று முன்னேறி இடத்தைப் பிடித்து விட்ட பெருமையோடு பின்னே திரும்பிப் பார்க்க அவர் மனைவி, பின் தொடர்ந்து வராதது கண்டு பழக்க தோஷத்தில் "ஏ, எருமை மாடு, இங்கே வா" என்றார். குரலைப் புரிந்து கொண்ட அவர் மனைவியும் அவ்விடம் நோக்கிச் சென்றார்.

அப்போது முன்னே அமர்ந்திருந்த வாலிபர் ஒருவர், "டிரைவர்! டிரைவர்! பஸ்ஸை நிறுத்துங்கள்! பஸ்ஸை நிறுத்துங்கள்" என்று கூற பஸ் டிரைவர் விவரம் ஏதும் புரியாமல் 'சடன் பிரேக்' போட்டு பஸ்ஸை நிறுத்தினார். என்ன ஏது என அறியும் ஆவலோடு சிலரும், என்னவோ ஏதோ என்ற பீதியோடு சிலரும் பஸ்ஸில் ஒரே பரபரப்பு ஏற்பட பின்புறம் நின்ற நடத்துனர் முன்னே வந்து "என்ன? ஏது?" என வினவ, அந்த வாலிபர் முகத்தில் எந்தவித மாற்றமும் காட்டாமல், "பஸ்ஸில் எருமை ஏறி விட்டது போல் இருக்கிறது பாருங்கள்" எனக் கூற, அந்தக் குறும்புக்கார வாலிபரின் குறும்பைப் புரிந்து கொண்ட நடத்துனரும் பயணிகளும் 'கொல்' என்று சிரித்தனர்.

கணவரின் முகத்தில் அசடு வழிய, அந்த அம்மையார் குனிந்த தலைநிமிராது அமர்ந்திருந்தார் பாவம். அதற்குப் பிறகு அந்த மனிதர் அந்தப் பெண்மணியை அப்படிக்

கூப்பிட்டிருக்க மாட்டார் என நினைக்கிறோம்.

- இராமமூர்த்தி,
திருத்துறைப்பூண்டி.

சென்னையிலிருந்து என் தோழிகள் மூன்று பேர் காரில் சுற்றுலா சென்று திரும்பிக் கொண்டிருந்தோம். மிகவும் அசதியாக இருந்தது. காரோட்டிக்கும் சிறிது ஓய்வு தேவைப்பட்டது. சாலையோரமாக வண்டியை நிறுத்தினோம். நிறுத்திய இடத்தின் எதிரில் ஆண்கள் பள்ளி இருந்தது. சீருடை அணிந்த மாணவர்கள் தங்கள் மிதி வண்டியில் சென்று கொண்டிருந்தனர். ஒரே அரட்டை! எங்களைத் தாண்டிச் செல்லும் இம்மாணவர்களின் அரட்டைகளை ரசித்துக் கொண்டு உள்ளே அமர்ந்திருந்தோம். ஒரு சில நிமிடத் துளிகளில் 10 மாணவர்கள் அடங்கிய சைக்கிள் படை எங்கள் காரருகே வந்தது. காரின் கதவில் கையை வைத்துக் கொண்டு ரஜினிகாந்தின் வசனம் ஒன்றைப் பேசி ஆர்ப்பரித்தனர்.

"காருக்குள்ளே பெண்ணிருக்கு. மரியாதையா அவளை விட்டு விடு. இல்லைன்னா உன்னைச் சுத்திச் சுத்தி அடிப்பேன்" காரோட்டி பயந்து விட்டார். எனக்கு எங்கிருந்து தைரியம் வந்ததோ! டக்கென்று காரின் கதவைத் திறந்து கொண்டு,

"தம்பிகளே! உங்களுக்கு ஏன் வீண் சிரமம்? நானே இதோ வெளியில் வந்து விட்டேன்" என்று பேசி முடிப்பதற்குள், சினிமாவில் பார்ப்பது போல அந்த இடம் காலி. சிட்டாகப் பறந்து விட்டனர் அனைவரும். எங்களுக்கு ஒரே சிரிப்பு. உற்சாகத்துடன் வண்டியைக் கிளப்பிப் பயணத்தைத் தொடர்ந்தோம்.

இந்தக் காலத்தில் இளைஞர்கட்குப் போதிய மனோதைரியம் இல்லை என்பது தெரிய வருகின்றது.

- கே. திலகவதி, பாண்டிச்சேரி.

ஒருமுறை நாங்கள் விருந்தினரைக் கூட்டிக் கொண்டு ஒகேனக்கல் சென்றிருந்தோம். குளிப்பதற்காக, ஆண்கள் முதலில் போய்க் குளித்து விட்டு வந்த பிறகு பெண்கள் போய் அருவியில் குளிப்பதாக ஏற்பாடு. நாங்கள் பாறையில் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தோம்.

அப்போது ஒரு பெண், கைக் குழந்தையுடன் என்னிடம் வந்து, "குழந்தை சிறுநீர் கழித்து விட்டதால் துண்டை அருவியில் அலசிக் கொண்டு வருகிறேன். என் குழந்தையை (அழகான ஆண் குழந்தை) சிறிது நேரம் வைத்து இருங்கள்" என்று கூறினாள். நானும் சரியென்று வாங்கிக் கொண்டேன். பார்வையில் படுகிற இடத்தில் நின்று துண்டை அலசிக் கொண்டு திரும்பித் திரும்பி எங்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். நாங்கள் பார்ப்பதைக் கண்டு அவளும் வந்து தன் குழந்தையை வாங்கிக் கொண்டாள். பின்பு குளிக்கப் போன ஆண்களும் வந்து விட்டார்கள். அதனால் நாங்கள் குளிக்கச் சென்று விட்டோம். நாங்கள் வருவதற்குள் அந்தப் பெண், என்னிடம் குழந்தையைக் கொடுத்த மாதிரியே வேறு ஒரு பெண்ணிடம் குழந்தையைக் கொடுத்து விட்டு நீர்வீழ்ச்சியில் விழுந்து தற்கொலை செய்து கொண்டாள். பின் அந்த அழகான ஆண் குழந்தையை வளர்க்க நான், நீ என்று அந்த இடத்திலேயே போட்டி போட்டார்கள். பின்பு ஒரு வயதான பெரியவர் அந்தக் குழந்தையை வளர்ப்பதாக வாங்கிக் கொண்டார்.

அரை மணி நேரத்தில் நடந்த அந்த நிகழ்ச்சியையும், அந்த அழகான குழந்தையின் முகத்தையும் எவ்வளவு நாட்கள் ஆனாலும் என்னால் மறக்கவே முடியாது.

- கே. கலாவதி,
பெருந்துறை.



என் குடும்பத்துடன் அரபிக் கடலின் நடுவில் முத்துக்கள் தூவியது போன்ற சிறிய சிறிய தீவுத் திட்டுகளில் ஒன்றான அமினி தீவிற்கு பொங்கல் விடுமுறையில் சுற்றிப் பார்க்கச் சென்றோம்.



அடுத்து இரண்டு நாட்களில் பொங்கல் பண்டிகை. நண்பர் அப்துல் அமீது மாற்று மதத்தவரானாலும் எங்கள் உணர்வுகளை மதித்து பொங்கல் பண்டிகையை அங்கு கொண்டாட ஏற்பாடு செய்ய ஆரம்பித்து விட்டார். தீவுகளில் அனைவருமே முகமதியர் கள்.

பொருள்கள் அனைத்தும் கப்பல் மூலம் வர வேண்டும். அங்கு விளைவது தென்னை மற்றும் சோதனை முயற்சியாக காய்கறி பயிர் - குறைந்த அளவில். பொங்கலுக்கான அனைத்துப் பொருட்களும் சேகரிக்கப்பட் டது. படையலுக்குத் தோகையுடன் கூடிய கரும்பு இல்லையே என என் மகன் கூறி விட்டான். அமீதிற்குப் பொறுக்கவில்லை.

உடனே 11 கி.மீ. தொலைவில் உள்ள 'கடமம்' என்னும் தீவை தொலைபேசியில் தொடர்பு கொண்டார். அங்கு சோதனை முயற்சியாக சிறிய அளவில் கரும்புப் பயிர் செய்கிறார்கள். தோகையுடன் கூடிய 10 கரும்புகளை தயாராக எடுத்து வைக்கச் சொன்னார். தீவுக்காரர் ஒருவரை அழைத்து தனியார் படகு ஒன்றை வாடகைக்குப் பேசி அதில் அனுப்பினார்.

நாங்கள் தீவைச் சுற்றிப் பார்த்து விட்டு அமீதின் வீட்டிற்கு போகையில் அமீது கூடத்தில் விழுந்து விழுந்து சிரித்துக் கொண் டிருந்தார். மூலையில் தீவுக்காரன் கவலை படிந்த முகத்துடன் கைகட்டி நின்றிருந் தான்.

விஷயம் இதுதான். தோகையுடன் கரும்பு வேண்டும் என பிரயத்தனப்பட்டு 'கடமத் திற்'குச் சொன்னவர்கள் கொண்டு வந்த பணியாளரிடம் கூறவில்லை. தீவுக்காரரான அவருக்குப் பொங்கலைத் தெரியாத சோகம். வந்த வேகத்தில் தோகையைச் சீவிக் கொண்டு போய் மாட்டிற்குப் போட்டு விட்டு துண்க ளான கரும்புகளை மொட்டையாகக் கொண்டு வந்து நிறுத்தியிருந்தார்.

பொங்கல் என்றால் அந்த அப்பழுக்கற்ற, கள்ளம் கபடமில்லாத தீவுக்காரரையும், மதமாச்சரியம் காட்டாது கடல் கடந்த தீவு களில் நாங்கள் பொங்கல் கொண்டாடப் பாடுபட்ட அந்த நண்பர் அப்துல் அமீதையும் மனம் இன்றும் தொழுகிறது.

**- கே. விஜயலஷ்மி,**
**சென்னை - 45.**

**எ**ன் கணவர் அப் போது பீஹாரில் உள்ள பொகரோவில் பணியாற்றி வந்தார். இது நடந்தது 25 வருடங்களுக்கு முன். அது சமயம் சுற்றுலா போக ஏற்பாடு செய்து எல் லோரும் போனோம். என் கணவர் அலுவலக வேலை நிமித்தம் வரவில்லை. நானும், என் மூத்த பையன் (வயது 2) மட்டும் போனோம். எனக்கு விளையாட்டு என்றால் மிகவும் பிடிக்கும். சுற்றுலா போன இடத்தில் பல விளையாட்டுக்களை ஆடினார்கள். அப் போது நான் மூன்று மாத கர்ப்பிணி. இதை வெளியில் சொல்ல வெட்கப்பட்டு, என் னுடைய விளையாட்டு மோகத்தினால் நானும் கலந்து கொண்டேன். மியூஸிகல்சேர், ஸ்பூன் ரேஸ், ஓட்டப் பந்தயம் முதலிய விளையாட்டுக்களில் முதல் பரிசும் பெற்றேன்.

லேசாக வயிற்றில் வலி ஏற்பட்டு, உட்கார, எழுந்து நடமாட முடியவில்லை. வெட்கத்தினால் யாரிடமும் சொல்லாமல் அன்றே வீடு திரும்பி விட்டேன். என் நெருங்கிய தோழியிடம் மட்டும் உள்ளதை உள்ளபடியே ஒப்புக் கொண்டேன். சரியான திட்டு கிடைத்தது. வயிற்றில் குழந்தையை வைத்துக் கொண்டு என்ன விளையாட்டு, ஒன்றுக்கொன்று ஆனால் என்ன செய்வது என்று ஒரே கவலை. அதன் விளைவு நாளாக நாளாக பெரும் வேதனையாகி விட்டது. கீழே உட்கார, குனிய, நிமிர முடியாமல் போய் விட்டது. பிறகு டாக்டரிடம் அந்தத் தோழியே அழைத்துப் போனாள். இரட்டைக் குழந்தைகள் இருக்கின்றன. ஒரு தலைதான் தெரிகிறது என்று சொன்னார்கள்.

எனக்குப் பயம் பிடித்துக் கொண்டது. 1968 ஜூன் மாதம் மிகச் சிரமத்திற்கு பின் எனக்கு முதலில் ஆண் குழந்தை பிறந்தது. அந்த டாக்டர் சொன்னபடி மற்றொரு குழந்தையின் தலை தெரியவில்லை. இரண்டு மணி நேர போராட்டத்திற்குப் பிறகு பெரிய டாக்டர் வந்து உன் குலதெய்வத்தை வேண்டிக் கொள். குழந்தையையும், தாயையும்

தனித்தனியே பிரித்து விடுகிறேன். இந்தக் குழந்தை போனால் மற்றொன்றை பெற்றுக் கொள்ளலாம், உன் உயிரைக் காப்பாற்றுகிறேன் என்று சொல்லி, குழந்தையின் இரு கால்களையும் பிடித்து ஒரு முறுக்கு முறுக்கி குழந்தையை வெளியில் எடுத்தார். பெண் குழந்தையின் தலை, என் விலா எலும்புக்குள் சிக்கிக் கொண்டு என்னை பாடாய்படுத்தி விட்டது. டாக்டர்கள் என்னைத் துருவித் துருவிக் கேட்டதில் நான் கர்ப்பமாக இருந்த போது விளையாடிய விளையாட்டுக்களை சொன்ன போது மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். இப்போது என் பெண்ணிற்குக் கல்யாணமும் ஆகி விட்டது.

**- எஸ். சீதாலக்ஷ்மி, சென்னை - 33.**

மூன்று வருடம் முன்பு கல்கத்தாவி லிருந்து, காது கேளாதோர் செமினாருக்குப் போக பாஸ் கிடைத்தது. ஆசை யாரை விட்டது. நானும் என் தோழி நால்வரும் எப்படியோ டிக்கெட் வாங்கி வீட்டுச் சிறையிலிருந்து பறந்தோம்.

நாங்கள் தங்கியது சால்ட் லேக் ஸ்டேடியத்தில் உள்ள யூத் ஹாஸ்டலில். பெண்களுக்கு ஒதுக்கப்பட்ட எங்கள் அறையில் ஐம்பது கட்டில்கள். எங்களுக்கு முதலில் படுக்கை கிடைத்தது. ஐம்பதாவது கட்டிலில் யார் படுத்திருப்பார்கள் என்று தெரியாது. அத்தனை தூரம். கடைசியாக போகிறவர்கள் பூட்ட வேண்டும். மூன்று நாட்கள் ஒழுங்காக நடந்தது.

கடைசி நாள் இரவு சாப்பிட நாங்கள் போகும் போது பூட்டி விட்டுப் போனோம். போர் அடிக்கிறதென்று சாப்பிட்டு விட்டு வாக் போய் ஒரு மணி நேரம் கழித்து வந்தோம். எங்களைத் தேடி போலீஸ் நிற்கவே வெலவெலத்துப் போனோம். நாங்கள் பூட்டிய போது உள்ளே தூங்கிய இரு பெண்களைப் பார்க்கவில்லை. அந்த இரண்டு அஸ்ஸாமி பெண்கள் எழுந்து பூட்டி இருக்கவே பயந்து அலறி ஒருத்தி மயங்கி விழுந்து, மற்றொரு பெண்ணுக்குக் காய்ச்சலே வந்து விட்டது.

ஜன்னல் வழியாக அவர்களைப் பார்த்து அதன் ஆசிரியர்கள் தலைவரிடம் சொல்லி போலீஸ் வந்து ஏக கலாட்டா. எங்களைப் பார்த்து ஒரு ஐம்பது பேர்கள் கை நீட்டி 'காச் மூச்'சென்று பேச எங்களுக்குப் பயம். நாங்களோ நால்வர். இவர்களிடம் பேச பாஷை தெரியாது. பூட்டிய டீச்சருக்கு கண் தெரியாது என்று மன்னிப்பு கேட்டும் விட வில்லை. காய்ச்சல் வந்த பெண்ணுக்கு சிகிச்சைக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்து விடியற் காலை மூட்டை கட்டினோம். பனாரஸ் புடைவை வாங்க எடுத்து வந்த பணம் பனால் ஆனதுதான் மிச்சம்.

**- டி. சி. ஈஸ்வரி, கோவை - 2.**

என் கணவரின் வேலை மாற்றத்தின் காரணமாக, நாங்கள் சென்ற ஜூன் மாத இறுதியில் இந்தியத் தலைநகரான டெல்லிக்கு வந்து சேர்ந்தோம். எங்காவது சுற்றுலா போகத் தீர்மானித்தோம். என்னுடைய சின்ன வயது ஆசை திடீரென்று தலை எடுத்தது. "பனி விழுதல்" (SNOW FALL) என்பது ஒரு அபூர்வமான - இயற்கையின் விநோதங்களில் ஒன்று. அதைப் பார்க்க, அனுபவிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் எனக் கேட்டிருக்கிறேன். ஆபீஸிலிருந்து வந்த கணவரிடம், "இந்த வருடப் பொங்கலை, இமயமலைப் பிரதேசத்தில் கொண்டாடலாமா? சிம்லா போவோமே" என்றேன். அவர் சரி என்றார்.

நாங்கள் சிம்லா போய்ச் சேர்ந்த போது நல்ல குளிர். நாங்கள் உடம்பு முழுவதும் மூடிக் கொண்டு (அப்படியும், உடல் எலும்பைத் தொடும் குளிர் - பிறகுதான் தெரிந்தது -2 டிகிரி பாரன்ஹீட் டெம்பரேச்சர்)



# இந்த மாயாஜால கம்பளத்தின் இரகசியங்களை கண்டுகொள்ளுங்கள்




- **துவைக்கக் கூடியது & கறை எதிர்க்கவல்லது**
  ஸப்னா கறையை எதிர்க்க வல்லது மற்றும் துவைக்கும் ஒவ்வொரு முறையும் புத்தம் புதியதாக விளங்கும்.
- **நீடித்துழைக்கக்கூடியது**
  ஸப்னா கார்பெட்கள் மற்றும் மேட்கள் கிழிக்க முடியாத நூலினைக் கொண்டு நெய்யப்படுவதால் வருடாவருடம் நீடித்துழைப்பதை உறுதிப்படுத்துகிறது.
- **கவர்ச்சிகரமான டிசைன்கள்**
  பரவசமூட்டும் வண்ணங்கள் மற்றும் டிசைன்களின் அணிவரிசையிலிருந்து நீங்கள் உங்கள் அறைகளின் வண்ண எழிலுக்கேற்ப தேர்ந்தெடுக்கலாம்.
- **பன்முக உபயோகம்**
  உங்கள் இல்லத்தின் பல்வேறு உபயோகங்களுக்கு ஸப்னா கார்பெட்கள் & மேட்கள் கச்சிதமானவை. பூஜை செய்ய, உட்கார, உண்ண, படுக்க, உல்லாசப் பயணத்திற்காக மற்றும் குழந்தைகள் விளையாட போன்ற உபயோகங்களுக்கான மேட்களிலிருந்து உங்கள் இல்லத்தின் பிரதான அறைக்கு தேவையான அலங்கார மைய விரிப்பு வரையிலான மேட்கள் அணிவரிசை உள்ளது.
- **அளவு வரிசை**
  ஸப்னா கார்பெட்கள் & மேட்கள் (30x45 செ.மீ. லிருந்து 270x360 செ.மீ.) வரையிலான அளவுகளில் கிடைக்கின்றன.
- **ஜப்பானிய தொழில் நுட்பம்**
  அஸாகோ மெஷின் மேனுஃபேக்சரிங் கம். லிட்., ஒசாமா, ஜப்பான் நிறுவனத்தினர் வழங்கும் ஜப்பானிய தொழில்நுட்பத்தின்படி ஸப்னா கார்பெட்கள் & மேட்கள் தயாரிக்கப்படுகின்றன.



**Sapana**
CARPETS & MATS

**SAPANA POLYWEAVE PVT. LTD.**
158, C.S.T. Road, Kalina, Santacruz (East), Bombay 400 098.

AXIS/SOO 1/17

# உங்கள் விசுவாசமுள்ள உதவியாளர்

மிஸ் ம்பேரி பிரஷ்ஷர் குக்கர் தூய உலோகத்திலிருந்து சிறந்த தரக்கட்டுப்பாடுடன் உற்பத்தி செய்யப்படுகிறது. ஒவ்வொரு குக்கரும் கசிவு இல்லாமலிருப்பதை உறுதி செய்வதற்காக சோதனைக்கு உள்ளாக்கப்படுகிறது. நம்பகமான "விசில்" உங்கள் உணவு விரைவாகவும் மற்றும் பத்திரமாகவும் சமைக்கப்படுவதை உறுதி செய்கிறது. சிறந்த தரமானப் பொருட்களிலிருந்து கவனமாக உற்பத்தி செய்யப்படுவதால், இதன் "கேஸ்கட்" நீடித்து உழைக்கிறது. மற்றும் இதன் சேஃப்டி வால்வ் உங்களுக்குப் பாதுகாப்பு தேவைப்படும்போது வேலை செய்கிறது. உறுதியான, வசதியான ஹேண்டில்கள்.

இந்தியாவின் முன்னணி பிரஷ்ஷர் குக்கர் உற்பத்தியாளரான ஹாக்கின்ஸ் நிறுவனத்தால் உற்பத்தி செய்யப்படுகிறது. 5 வருட உத்தரவாதம். 500க்கு மேற்பட்ட இந்தியா முழுவதும் உள்ள ஹாக்கின்ஸ் சேவை மையங்களிலிருந்து மிஸ் ம்பேரி திறமைவாய்ந்த இலவச சேவையை வழங்குகின்றன. நான்கு சைஸ்களில் கிடைக்கின்றன: 2.5, 4.5, 6, 7.5 லிட்டர்; அதுவும், நீங்கள் விரும்பும் விலைகளிலே!

**மிஸ் ம்பேரி**




## மிஸ் ம்பேரி டிஸ்ட்ரிபூட்டர்கள்

MISS MARY

**தமிழ் நாடு: சென்னை,** சைதாப்பேட்டை, ரெத்னா ஏஜென்ஸீஸ், 10-தாமராஜா கோவில் தெரு • **மதுரை,** கீழ வாசல், ஆல்வின்ராஜ் மெட்டல்ஸ் சென்டர், 180-181, கீழ வெளி வீதி. • **திருச்சி,** மலைவாசல், மங்கள் & மங்கள், 25 N.S.B. ரோடு. **மகாராஷ்ட்ரா: பம்பாய் (தெற்கு),** கல்பாதேவி ரோடு, மெஸர்ஸ் ரதிலால் மோகன்லால், 46, கல்கலாரா சால். • வெஸ்டர்ன் சப்ளை, வில்லே பார்லே (கி.), மங்கல் டிஸ்ட்ரிபூட்டர்ஸ், கடை எண் 29, ஷ்யாம் கமல் பில்டிங் B, அகர்வால் மார்க்கெட். • சென்ட்ரல் சப்ளை, கல்யாண், பிரபாத் அப்ளையன்ஸஸ், பஜார் பேட், விஷ்ணு கோவில் எதிரே. **கர்னாடகா: பெங்களூர்,** பேல்பெட் ஸர்கிள், ராஜா டிரேடிங் கம்பெனி, 802, சிக்பெட், பேல்பெட் ஸர்கிள் அருகில். • பெங்களூர், மெயின் ரோடு, மார்க்கெட் மார்க்கெட்டிங் ஏஜென்ஸி, 13, அஸ்ஸிபுரம் மெயின் ரோடு.

**ஏதாவது உதவி தேவைப்பட்டால், எழுதவேண்டிய முகவரி: ஹாக்கின்ஸ் டிபார்ட்மென்ட் எண் 153, த.பெ.எண். 6481, பம்பாய்-400 016.**




ஹோட்டல் வந்து சேர்ந்தோம். இளைப்பாறி விட்டு, உணவு (சாப்பிடச் சாப்பிட ஆறி விடுகிறது - கைகளிலுள்ள உணவு வாய்க்குப் போவதற்கு முன்!)

முதலில் அங்கிருந்த ஆஞ்சநேயரைத் தரிசித்து ஹோட்டலுக்குத் திரும்பினோம். மலை ஏறின அசதி. குளிர். படுக்கையில் படுத்ததுதான் தெரியும். எழுந்த போது காலை 7 மணி. அறையின் ஜன்னல் அருகில் வந்தேன், தூக்கி வாரிப் போட்டது. உடனே, உரத்த குரலில், "எழுந்து வாங்களேன், சிக்கிரம்" என்றேன். தூங்கிக் கொண்டிருந்த கணவர் அலறிப் புடைத்துக் கொண்டு, கம்பளியுடன் வந்து பார்த்து, அப்படியே "ஆடாது, அசையாது" நின்று விட்டார் என்றால், "அந்த 'SNOW FALL' காட்சி அவ்வளவு மெய் சிலிர்க்கும் காட்சி. உடனே எங்களைத் தயார் செய்து கொண்டு 'SNOW FALL' இல் நடக்கக் கிளம்பி விட்டோம். ஆங்காங்கே போட்டோ எடுத்துக் கொண்டோம். எங்கு பார்த்தாலும் "கண்ணைப் பறிக்கும் வெண்மை" வீட்டின் கூரைகள், கார்கள், மரங்கள் எல்லாம் வெள்ளைப் போர்வைக் குள்! குஃப்ரி என்ற மற்றோர் இடத்திற்குச் சென்றால் சிம்லாவை விட அதிக ரம்யமான சூழ்நிலை! நன்றாக அனுபவித்தோம்.

- ஷோபிதா வரதராஜன்,
புதுதில்லி - 67.

'ஹைதராபாத்'துக்கு சுற்றுலா போன போது நடந்த சுவையான சம்பவம் இது. எங்கள் குழுவில் பன்னிரெண்டு பேர்கள் இருந்தனர். கையில் ஜால்ரா, சப்ளா கட்டை, டோலக் இத்யாதிகளுடன் கிளம்பியவர்கள் நாங்கள். ரயில் ஒரு ஸ்டேஷனை விட்டுக் கிளம்பியதும் எட்டுக் கட்டையில் இருவர் பாட ஆரம்பித்து விடுவார்கள். உடனே மத்த வாத்யக் கருவிகள் படாத பாடுபட ஆரம்பித்து விடும். அந்தக் கம்பார்ட் மெண்டே அதிர்ந்து போய் விடும். எங்களை ரசித்தவர்கள் சிலர் வெறுத்தவர்களும் திட்டியவர்களும் பலர்.

கழிவறைக்குப் போய் விட்டு வந்த ஒரு நண்பன் அலறி அடித்துக் கொண்டு வந்தான். பேயைக் கண்டதைப் போல, பேய் அறைந்ததைப் போல முகம் வெளிறி, வாய்க் குளற, கை, கால்கள் நடுங்க வந்து நின்றான். அங்கே... அங்கே என்று கையைக் காட்டினான். டாய்லெட்டில் என்னதான் நடந்தது என்பதைச் சொல்ல முடியவில்லை. உடனே நாங்கள் அனைவரும் அங்கு சென்று பார்த்தோம். டாய்லெட்டின் உள்புறம் வாஷ் பேசினுக்குக் கீழே ஒரு மூட்டை இருந்தது. அது கொஞ்சம் அசைந்து கொண்டும் இருந்தது.

எங்களுக்கும் பயம் பிடித்துக் கொண்டு விட்டது. எங்கள் சக பயணிகளும் வந்து கூடி விட்டனர். ஆளாளுக்கு ஒவ்வொரு கதை சொல்ல ஆரம்பித்து விட்டனர். மூட்டைக்குள் அப்போதுதான் 'சாகடித்த சவம்' இருக்கலாம். ஏதாவது 'டைம்பாம்' இருக்கலாம். இப்படி....

அப்போது கொஞ்சம் விஷயம் தெரிந்த மனுஷர், "சரி... சரி கதவை மூடி விட்டு எல்லோரும் வெளியே இருப்போம். அடுத்த ஸ்டேஷன் வந்ததும் அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்து நிறுத்தி விடுவோம். ஸ்டேஷன் மாஸ்டர், கார்ட் எல்லாரும் வந்ததும் சொல்லி ஆவன செய்வோம் என்றார்.

அடுத்த ஸ்டேஷனில் எங்களால் வண்டி நிறுத்தப்பட்டது. உடனே வந்து கூடிய ரயில் அதிகாரிகளிடம் தகவல் தெரிவித்தோம். போலீஸ் காவலுடன் மூட்டை இறக்கப் பட்டது. வண்டி பூராவும் இறங்கி கூடி விட்டது. என்ன... என்ன ஆச்சு ஏன் நின்று விட்டது? ஒரே என்ன என்னதான்!

சர்வஜாக்கிரதையுடன் துப்பாக்கி, கம்பு உதவியுடன் மூட்டையைப் பிரித்தார்கள். முதலில் மூட்டைக்கு ஒரு செம அடி! பிரித்த வேகத்தில் மூட்டைக்குள்ளேயிருந்து இரண்டு குரங்குகள் குபீரென வெளியே குதித்து ஒரே ஓட்டமாக ஓடி விட்டன. அதற்குள்

கூட்டத்தில் ஒரே கத்தல். ஆக மொத்தம் இரண்டு (கட்டிப் போட்ட) குரங்குகளால் வந்த பீதி வண்டியையே கலக்கி விட்டது. ஆந்திராவில் குரங்குகளின் தொல்லை தாங்க மாட்டாமல் இப்படி அவ்வப்போது செய் வார்களாம். இத்தனை மணி நேரம் அடை பட்டிருந்த குரங்குகளுக்குச் சுதந்திரம் கிடைத் ததில் ஓடியே போய் விட்டன. ஆனால் எங்கள் வாய் மட்டும் அதைப் பற்றியே பேசிப் பேசி ஓய்ந்து போய் விட்டன.

- மது ராசகோபாலன்,
கோவை - 12.

எங்கள் அலுவலகத்தின் மூலம் ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு சுற்றுலாவில் நானும் என் மகளும் பங்கெடுத்துக் கொண் டோம். எங் களுடன் வேலையில் சேர்ந்து ஆறு மாதமே ஆன நளினியும் வந்திருந்தாள். திருச்சி, மதுரை, முதுமலை வனப்பகுதி என்று பார்த்து விட்டு கொடைக்கானல் வந்தடைந்தோம்.

அங்குள்ள "லேக்" பார்க்க வந்த போது ஒரு இரண்டு வயது பெண் குழந்தை மலை யின் சாலையோரம் கட்டியிருந்த சிறு சுவர் ஒன்றில் நின்று எம்பி கீழே பார்த்து கொண்டி ருந்தது. அதன் அருகில் யாரும் இல்லை. சத்தம் கொடுத்தால் அதிர்ச்சியில் கீழே விழுந்து விடும். மறுபுறம் கண்டெடுக்க முடி யாத கிடுகிடு பள்ளம். அந்தச் சமயத்தில் என் தோழி நளினி சத்தமில்லாமல் நொடிப் பொழுதில் பாய்ந்து சென்று அந்தக் குழந் தையைத் தூக்கிக் கொண்டு வந்து பாதுகாப் பான இடத்தில் விட்டாள்.

அந்தச் சமயத்தில் அக் குழந்தையின் தந்தை ஓடி வந்தார். என் மகள் என் மகள் என கத்திக் கொண்டே வந்து எங்கள் அருகில் வந்து என் குழந்தையென்று குழந்தையை தூக்கி முத்த மழை பொழிந்தார். "என் மகள் இவள் எப்படி இங்கே வந்தாள். இவளை காணாமல் அவள் அம்மா அங்கு மயக்கமாகவே ஆகி விட்டாள். நல்ல வேளை என் மகளை பெரிய கண்டத்திலிருந்து காப் பாத்தினீர்கள். என் மகளை மட்டும் அல்லா மல் என் குடும்பத்தையே காப்பாத்தினீர்கள்" என்று நளினியை கும்பிட்டார். அவர் கும்பிட்ட நிமிடம் நளினி விக்கி விக்கி அழத் தொடங்கினாள். 'ஏன் நளினி அழு கிறாய்?' என்றால் பதில் சொல்லாமல் சிறிது நேரம் அழுது பிறகு சொன்னாள், "அந்தக் குழந்தையின் அப்பா என் முன்னே அழுததை பார்க்கையில் என் கண்முன்னே என் தாய் அழுததைப் போல் இருந்தது."

"என்ன நளினி என்ன சொல்கிறாய்" என்று கேட்டால் நளினி தான் இந்தச் சுற்றுலா பயணத்தை சாதகமாக்கிக் கொண்டு தன் காதலன் சேகரை மணக்கவிருந்ததைச் சொன்னாள். "நான் அப்படிச் செய்திருந்தால் என் தாய், தந்தையர் இப்படித்தானே கதறி அழுதிருப்பார்கள். இரண்டு வயது மகளை காணாமல் இந்தத் தாய், தந்தை அழுததை விட இருபது வயது என்னை வளர்த்து ஆளாக்கிய என்னை தொலைத்து வைத்திருந் தால் அவர்களது மனநிலை எப்படி இருந்தி ருக்கும் என்று எண்ணிதான் அப்படி அழு தேன். இனி என்ன காரணமானாலும் என் தாய் தந்தையின் சம்மதத்துடனே நான் திரு மணம் செய்து கொள்வேன்" என்று சொன் னாள். நளினி பேசியதை நானும் என் மகளும் கேட்டுக் கொண்டிருந்தோம். உடனே எனக்கு என் மகளுக்கு இங்கு நடந்ததெல்லாம் கவனிக்க நேர்ந்தது, அவளுக்கு உலக அனுபவத்தை அளிக்கும் என்ற திருப்தி ஏற்பட்டது.

- த. கி. சாந்தகுமாரி,
சென்னை - 17.

டிபன் கேரியரின் மேல் மாட்டும் ஸ்பூன் கெட்டுப் போனால் கவலைப்படாதீர்கள். இரும்புக் கடையில் டிபன் கேரியரின் அளவுப்படி 'இத்தனை அங்குல அளவு' என்று கேட்டு ஒரு போல்ட்டும், நட்டும் வாங்கி மாட்டிவிடுங்கள்!

- விமலா தியாகராஜன்



# தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் கனிவான உபசரிப்பில் வசதியான அறைகளில் பயண களைப்பை மறந்திருங்கள்.





தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழக
ஹோட்டல் உள்ள இடங்கள்:

- திருச்சி, தொ.பேசி: 40383 to 85, 40473 to 75.
- திருச்செந்தூர், தொ.பேசி: 268.
- உளுந்தூர்பேட்டை, தொ.பேசி: 284.
- ஊட்டி, தொ.பேசி: 4370 to 74.
- சேலம், தொ.பேசி: 33020, 33098, 33030.
- [illegible], தொ.பேசி: 34813 (8 lines)
- [illegible], தொ.பேசி: 667 ([illegible])
- ஓசூர், தொ.பேசி: 22080
- காஞ்சிபுரம், தொ.பேசி: 2954 & 2955.
- கன்னியாகுமரி, தொ.பேசி: 71287, 71258, 71029 & 71030.
- [illegible], தொ.பேசி: 2078.
- மதுரை I, தொ.பேசி: 37470 (10 lines)
- மதுரை II, தொ.பேசி: 45683 to 8, 44607.
- மண்டபம், தொ.பேசி: 512 423.
- முதுமலை, தொ.பேசி: [illegible].
- சென்னை, தொ.பேசி: [illegible].
- [illegible], தொ.பேசி: 22868.
- ராமேஸ்வரம், தொ.பேசி: 277.
- ராணிப்பேட்டை, தொ.பேசி: [illegible].
- தஞ்சாவூர் I, தொ.பேசி: 20024, 24821, 21421.
- [illegible], தொ.பேசி: 33. ([illegible])

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சி கழகம் நடத்தும் ஓட்டல் தமிழ்நாடு தங்களுடைய பயணம் இனிதே அமைய அனைத்து ஏற்பாடுகளையும் குறைந்த வாடகையில் நிறைந்த வசதியுடன் செய்து தருகிறது.

*கனிவான உபசரிப்பு, குடும்பத்தினர், இருவர் மற்றும் ஒருவர் தங்கும் குளிர்சாதனம் உள்ள அறை, சாதாரண அறைகள், அறுசுவை உணவகம், 24 மணி நேர தண்ணீர் வசதி, தொலைக்காட்சி வசதி மற்றும் பல பொழுதுபோக்கு அம்சங்கள் உங்களது பயணத்தை இனிதாக்குகிறது.*



மேலும் விவரங்களுக்கும், ஒதுக்கீடுகளுக்கும் அணுக வேண்டிய முகவரி:

**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழக விற்பனை நிலையம்**

143, அண்ணா சாலை, சென்னை-600 002. தொலைபேசி: 830498 830330 848710

டெலக்ஸ்: 041-7575, Gram: 'Tamil Tour' ஃபேக்ஸ்: 91-044-830380

DIPR/467/DIS/94/ELEGANT




மகளிர்மன்ற கூட்டம்...

# அம்மா வந்தாச்சு

"சமுதாய சேவை என்னுள் ஊறிவிட்ட ஒன்று.சிறுவயது முதற்கொண்டே பிற்படுத் தப்பட்ட நிலையில், பொருளாதாரத்தில் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களுக்கு என்னால் ஆன உதவிகளைச் செய்வதில் எனக்கு ஒரு மனத் திருப்தி. கடவுள் புண்ணியத்தில் அது இன்னமும் தொடர்கிறது. உயிரோடிருக்கும் வரை இம்மாதிரி பொதுப் பணிகள் புரிய எனக்கு ஆண்டவன் சக்தியைக் கொடுக்க வேண்டும். நேரத்தை வீணே கழிக்க எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. இப்படி சமுதாயத் தொண்டில்; பிறருக்குப் பயன்படும் விதத்தில் உதவி புரிவதில் கிடைக்கும் மன நிறைவே அலாதிதான்.! சிறு வயதில் கல்கத்தாவில். மணமான பிறகு, வெளிநாடுகளில்... தாயகம் திரும்பியவுடன் கேரளாவில்.தற்போது தமிழகத்தில் அதுவும் குறிப்பாக கோவையைச் சுற்றியுள்ள கிராமங்களில் எனது சமூகப் பணிகள் தொடருகிறது. எனது குடும்பம் சிறிது. என் தேவைகளும் குறைவு. அதனால் என்னால் நிறைய நேரம் ஒதுக்க முடிகிறது."

என்று சுவையான கதையைச் சொல்வது போல் அடுக்கிக் கொண்டே போகிறார். சிறுமுகையைச் சார்ந்த திருமதி பிரதிபா போக! பிறப்பால் வங்காளியாக இருந்தாலும் 'நான் இந்தியன்' என்பதில் அதீதப் பெருமை இவருக்கு... சுயவிளம்பரத்திற்காக இல்லாமல் அத்தனையும் ஆத்மார்த்தமான உண்மையான சமூகப் பணிகள் என்பதை, சிறுமுகையைச் சுற்றியுள்ள, 'பெத்திக் குட்டை' ஆலாம்பாளையம், கள்ளிப்பட்டி, சப்பரவள்ளி, அன்னதாசம்பாளையம் போன்ற கிராமங்களைச் சுற்றிப் பார்க்கும் போது நிதர்சன மாகப்புரிகிறது.

திருமதி போக சிறுமுகை விஸ்கோஸ் மகளிர் மன்றம், 'ஸ்ருதிலயா' போன்ற அமைப்புகளை நிறுவி, தலைமைப் பொறுப் பேற்று சிறப் பாக நடத்தி வருகிறார். இது தவிர பல சமூக நற்பணி இயக்கங்களில்



திருமதி போக

முக்கிய பங்கு கொண்டு, அடிமட்டத்தில் இருப்பவர்களுக்கு நிறைய உதவிகள் புரிந்து வருவது, இந்த வட்டாரத்தில் உள்ள அனை வரும் அறிந்த ஒன்று. ஏதோ ஒரு கிராமத் திற்குள் நுழை கிறார்... 'அதோ... அம்மா வந் தாச்சு...அம்மா வந்தாச்சு' என்று ஆர்வத் துடன் அனைவரும் அவரைச் சூழ்ந்து கொள் வதிலிருந்தே, மற்றவர்கள் எத்துணை அன்பு காட்டுகிறார்கள் என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்...

ஏதோ பொழுது போக்கிற்காக மகளிர்



மன்றத்திற்கு வந்தவர்கள் கூட இவரது தலைமையின் கீழ் பல கிராமங்களுக்குச் சென்று சமுதாயம் பயனடையும் விதத்தில் பல வகையான உதவிகளைப் புரிந்து வருகிறார்கள்.

• கல்லாமை இருளைப் போக்குவதில், அறிவொளி இயக்கம் மூலம் பல கிராமங்களில் மாலை நேரப் பள்ளிகள் இவர்கள் உதவியுடன் நடைபெற்று வருகிறது.

• சுற்றுப் புறச் சுகாதாரம், குடும்பக் கட்டுப்பாடு பற்றிய கருத்தரங்குகள்... வீடு வீடாகச் சென்று எடுத்துச் சொல்லுதல்... கண்காட்சி.. வீடியோ திரைகள் மூலம்.

• பல கிராமங்களைத் தத்து எடுத்து குடிநீர் வசதி மற்றும் பல அடிப்படை வசதிகளுக்குத் தேவையான உதவிகள்...

• கிராமங்களிலிருந்து தேவையான நபர்களைத் தேர்வு செய்து வரவழைத்து 'பயிற்சி முகாம்களை' நடத்துதல் (கைவினைப் பொருட்கள் செய்ய மற்றும் கோழி வளர்ப்பு- காளான் வளர்ப்பு - வீட்டுத் தோட்டங்கள் நிறுவ இப்படி...)

• தொழுநோய், எய்ட்ஸ் பற்றிய விழிப் புணர்ச்சி ஏற்படுத்துதல்..கிராமந் தோறும் மருத்துவ முகாம்கள்....டி.பி. என்னும் காச நோய் தீவிர ஒழிப்பு பற்றிய கருத்தரங்குகள்.. இது தவிர நோய் முற்றிய நிலையில் உள்ள பல நபர்களுக்கு நவீன மருத்துவ மனைகளில் நிவாரணப் பணிகள்.. இலவசமாக...

• அண்மையில் 'விஸ்கோஸ்' நிர்வாகத்திடம் உதவிபெற்று அதன்மூலம் சுமார் 12 இலட்சம் செலவில் நவீன மருத்துவ வசதிகள் அடங்கிய ஒரு நடமாடும் கண் மருத்துவ மனையை கிராம மக்களின் நலன் கருதி பெற்றுத் தந்திருக்கிறார்.. கோவை சங்கர நேத்ராலயா கண் சிகிச்சைப் பிரிவு மருத்துவர்களின் உதவி கொண்டு, கிராம மக்களுக்கு இலவச கண் சிகிச்சை கிடைக்க இதனால் வழி பிறந்துள்ளது.

• பொங்கல், தீபாவளி போன்ற விழாக் காலங்களில் மகளிர் மன்ற வளாகத்தில் துணிக் கடைகள். இன்னும் பல விற்பனைகள் மூலம் கிடைக்கும் இலாபம் பொதுப் பணிகளுக்குச் செலவிடப்படுகிறது.

• 'ஸ்ருதிலயா'- இவரது தலைமையின் கீழ் இயங்கும், இந்த வட்டாரத்தில் பிரசித்தி பெற்ற ஒரு இசைக்குழு, பல அறப்பணிக ளுக்கு இந்த இசைக் குழுவின் மூலம் பணம் வசூலிக்கப்பட்டு, நன்கொடையாக வழங்கப் பட்டு வருகிறது.

• அவ்வப் பொழுது பெரிய பெரிய பாடகர்களை அழைத்து வந்தும், பல புகழ்பெற்ற நடிகர்கள் நடத்தும் நாடகங்களை நடத்தியும், பல விதமான கலை நிகழ்ச்சிகள் நடத்தியும் நன்கொடைகள் வசூலிக்கப்பட்டு பொதுப் பணிகளுக்கு செலவிடப்படுகிறது.

• "எங்கள் மன்றத்தில் செகரெட்டரிகள் ராதா பிரபாகரன், கமலா வேலுசாமி, சித்ரா சுந்தர் மற்றும் கமிட்டி மெம்பர்கள், ஸ்ருதிலயா கீதா போன்ற பலரின் ஒத்துழைப்புடன்தான் என்னால் இத்தனை வெற்றிகளையும் பெற முடிகிறது" என்கிறார் போக.

அவர் சொல்லும் பெயர் பட்டியல் அனுமார் வால் போல் நீண்டு கொண்டே போகிறது. அமைதியாக, அடக்கமாக, அதிக ஆர்பாட்டமின்றி ஓசைப் படாமல் பல நல்ல காரியங்களை, பல அரிய உதவிகளை இந்த வட்டாரத்து கிராம மக்கள் திருமதி. போக அவர்களின் தலைமையில் இயங்கும் மகளிர் மன்றங்கள் மூலம் பெற்றுப் பயனடைந்து வருகிறார்கள். இவர் போல் மாவட்டத்திற்கு ஒருவர் அமைந்து விட்டால்! நிச்சயம் பல கிராமங்கள் மேன்மையுறும்!



# எங்கள் பச்சைப் பயறு

பச்சைப் பயறு என்று பலராலும் குறிக்கப்படும் இந்தப் பயறை சிறு பயறு என்றே நாங்கள் குறிப்பிடுவோம். நாங்கள் என்று நான் குறிப்பிட்டது நெய்தல் நிலத்து மக்களாகிய பரதவர்களைத்தான். சிறுபயறு எங்களுடைய பிரதான உணவு வகைகளில் ஒன்றாகும்.

பயறு வகைகளிலேயே எங்களுடைய அதிகமான நேசத்தைப் பெற்றதும், இந்தப் பயறுதான். அது மட்டுமில்லாமல் தோல் எடுத்து உடைத்த பயற்றம் பருப்பை விட முழு பயறையே அதிகமாக உபயோகப்



படுத்துகிறோம்.

வாரத்துக்கு ஒருமுறை காலை உணவாக இதை உட்கொள்கிறோம். மற்றும் மதிய வேளையில் துவையலாகவும், பயறு குழம்பாகவும், மாலை வேளைகளில் சுண்டலாகவும், இரவு வேளைகளில் கஞ்சியாகவும் மேலும் பல பலகாரங்களாகவும் செய்து உபயோகப்படுத்துகிறோம். நோயாளிகளுக்கும், குழந்தைகளுக்கும் அதிகமாக கொடுக்க வேண்டும் என்று டாக்டர்கள் பரிந்துரை செய்வதும் இதைத்தான். முழு சத்துணவான இதை பயறுகளின் ராணி என்றே குறிப்பிடலாம்.

நான்கு பேர் கொண்ட குடும்பத்திற்கு காலை உணவிற்கு அரை கிலோ பயறே போதுமானது. முந்தைய இரவே கல் பார்த்துத் தண்ணீரில் ஊறவைத்து விட்டால் காலையில் வேகவைத்து விடலாம். குக்கரில் போட வேண்டாம். நீர் சற்றுக் குறைவாக விட்டு வேக வைக்கவும். முக்கால் வேக்காடு இருக்கும் போது உப்பிட வேண்டும். 15 நிமிடங்களே ஆகும். பயறை விரல் வைத்து நசுக்கினால் நசுங்க வேண்டும். இந்தப் பக்குவத்தில் எடுத்து நீரை வடிய விட வேண்டும். இந்த நீர், பித்தத்தினால் அவதிப்படுவோருக்கு கண்கண்ட மருந்தாகும்.

காலை வேளைகளில் பித்தத்தின் பொருட்டு தலைவலி, தலைச்சுற்றல் வாந்தியால் கஷ்டப்படுவோருக்கு தொடர்ந்து மூன்று தினங்கள் சிறு பயறு வேகவைத்து வடித்த நீரை வெறும் வயிற்றில் கொடுக்க பித்தம் குணமாகும். மேலும் வடிய வைத்த சிறு பயறை முறத்தில் கொட்டி, வீட்டில் சிறு குழந்தைகள் இருந்தால் முன்னே உட்கார வைத்து அவர்கள் மீது சிறு பயறின் ஆவி படுமாறு புடைக்க வியாதி வெக்கை, நோவு முதலியவை குழந்தைகளுக்கு இருந்தால் அவைகள் நீங்கும் என்பது பரதவர்களின் ஒரு நம்பிக்கை.

இந்த வேகவைத்த பயறோடு தேவையான பூப்போலத் துருவிய தேங்காய்த் துருவலையும், சீனியையும் கலந்து காலை உணவாக உட்கொள்ளலாம். புட்டு, பயறு, பப்படம் கலந்த கலவையின் ருசி உங்களுக்குத் தெரியும்தானே.

இரண்டு கைப்பிடி அளவு கல் எடுத்த சிறு பயறை சிவக்க வறுத்து, அதோடு ஒரு கப் தேங்காய்த் துருவல், 10 சீரகம், சிறு மஞ்சள் துண்டு, 3 பூண்டு பற்கள், 3 மிளகாய் வற்றல் வைத்து அரைத்து கொட்டைப் பாக்களவு புளி, தேவையான உப்பு கலந்து குழம்பாகக் காய்ந்து தேங்காய் எண்ணெயில் தாளித்து கொட்டி சாப்பிட்டுப் பாருங்கள்.

மேலும் இவ்வாறு வறுத்த சிறுபயறை வைத்து பருப்புத் துவையல் போல அரைத்து நோயாளிகளுக்கு கஞ்சிக்கு தொட்டுக் கொள்ள கொடுக்கலாம்.

வேகவைத்த சிறுபயறோடு, தேவையான தேங்காய்த் துருவல், மஞ்சள், பூண்டு, ப. மிளகாய், சீரகம், சிறிது சிறிய உள்ளி ஆகியவை வைத்துத் தட்டி எடுத்த கலவையை கலந்து தேவையான உப்பிட்டு சிறிது நேரம் வேகவைத்து தாளித்து பருப்பு கூட்டாகச் சாப்பிடலாம். சப்பாத்திக்கு ஏற்ற பக்க உணவாகவும் அமையும்.

மாலை வேளைகளில் சுண்டலாக

செய்து கொடுக்கலாம். வேகவைத்த பயறோடு தேவையான அளவு தேங்காய்த் துருவலும், நாட்டுச் சர்க்கரை எனப்படும் கருப்புக் கட்டியையும் சேர்த்து உரலில் இட்டு நன்கு இடித்து உருண்டையாக்கி பிள்ளைகளின் கையில் கொடுத்து சாப்பிடச் சொன்னால் நிமிடத்தில் சாப்பிடுவார்கள்.

இரண்டு கப் புழுங்கல் அரிசி, அரை கப் தோல் எடுத்து உடைத்த பயற்றம் பருப்பு, ஒரு டேபிள் ஸ்பூன் வெந்தயம், 10 பூண்டு பற்கள் இவைகளை குக்கரில் வேகவைத்து பால் சேர்த்து கஞ்சியாக இரவு வேளைகளில் அருந்தலாம்.

இரண்டு கப் பயற்றம் பருப்பை சிவக்க வறுத்து குக்கரில் செபரேட்டரில் வைத்து தண்ணீர் குறைச்சலாக பருப்பில் விட்டு வேகவிடவும். நன்கு பெரிய தேங்காயில் ஒன்று எடுத்து துருவி பால் எடுக்கவும். தலைப் பாலை தனியே வைக்கவும். இரண்டாவதாக, 3 கப் தண்ணீர் விட்டு இரண்டாவது பால் எடுத்து அதில் அரை கப் ஜவ்வரிசியைப் போட்டு அடுத்த அடுப்பில் வைத்து வேகவிடவும். அடுத்ததாக மேலும் 3 கப் தண்ணீர் விட்டு மூன்றாவதாக பால் எடுத்து அதில் 4 கப் பொடித்த வெல்லத்தைப் போட்டு கலந்து மண், தூசி போக வடிகட்டி வைக்கவும். ஜவ்வரிசி முக்கால் பதம் வெந்ததும் வெந்த பருப்பையும்,வெல்லத் தண்ணீரையும் விட்டுக் கிளறவும். ஏலம், கிஸ்மிஸ், மு. பருப்புப் போட்டு சிறிது நெய் விட்டு கடைசியாக தலைப் பாலை விட்டு இறக்கவும். கிளறி விட்டு சிறிது நேரம் மூடிவைக்கவும். எங்களுடைய எல்லா விசேஷங்களிலும் செய்யும் பாயசம் இதுவேதான். குமரி மாவட்டத்தில் உள்ள சிறப்புப் பலகாரங் களில் ஒன்று முந்திரிக் கொத்து ஆகும். அரை கிலோ பயறை சிவக்க வறுத்து மிக்ஸியில் இட்டுப் பொடி ரவையாக பண்ணிக் கொள்ளவும். நன்கு முற்றிய ஒரு தேங்காயை பூப்போலத் துருவிக் கொள்ளவும். 3/4 கிலோ வெல்லம் வாங்குங்கள். அதில் இரண்டு கப் நீர் விட்டு மண் போக வடிகட்டி தேங்காயோடு சேர்த்து அடுப்பில் வைக்கவும். நான்கு ஏலக்காயைப் பொடி செய்து போடவும். தேங்காய் நன்கு வெந்து கலவை இறுகி வரும் போது உடைத்த ரவையைப் போட்டுக் கிளறி இறக்கவும். சற்று சூட்டோடு இருக்கும் பொழுதே சிறு சிறு உருண்டைகளாகப் பிடித்து முறத்தில் போட்டு ஒருநாள் ஆறவிடவும். இரண்டு கப் பச்சரிசியை நனைத்து இடித்துச் சலித்து மாவாக்கவும். அதில் சிறிதளவு எடுத்து, சிட்டிகை உப்பும், சிறிது மஞ்சள் பொடியும் கலந்து சற்று நீர்க்க கூழாகக் கரைக்கவும். அடுப்பில் எண்ணெயைக் காய வைத்து உருண்டைகளை எடுத்து இரண்டிரண்டாக மாவில் முக்கிப் போட்டுப் பொரித்து எடுக்கவும். நன்கு சிவக்க பொரித்தல் கூடாது. மாவுக் கலவை தீர்ந்து விட்டால் மேலும் கொஞ்சம் கலந்து கொள்ளுங்கள். தேங்காய் நன்றாக வெந்து விட்டபடியால் 10 நாட்கள் வரை கெடாமல் இருக்கும். டப்பாவில் போட்டுப் பயன்படுத்துங்கள். எங்கள் இனக் கல்யாணப் பலகாரங்களுள் இதுவும் ஒன்றாகும்.

இன்னும் எவ்வளவோ சொல்லலாம். வாய்வு உபத்திரவம் இல்லாத இந்தப் பயறை மாதந்தோறும் 2 கிலோ வாங்கி பல்வேறு பலகாரங்களாக செய்து ருசியுங்கள்.

- ஏஞ்சல் பாப்டிஸ்ட்

---

## சுலபமாக தளிவடகம் செய்யலாம்:-

நாலு ஆழாக்கு பச்சரிசிக்கு ஒரு ஆழாக்கு ஜவ்வரிசி என்ற கணக்கில் ஊற வைத்து வெட்கிரைண்டரில் நைசாக அரைத்துக் கொள்ளவும். ஒருநாள் விட்டு மூன்றாவது நாள் அதாவது இன்று அரைத்து வைத்து நாளை மறுநாள் மாவிற்குத் தேவையான தண்ணீர் சேர்த்து அடுப்பில் வைத்துக் கிளரவும். தோசைமாவு பதத்தை விட சற்று இளகிய நிலையில் மாவு இருக்க வேண்டும். பிறகு தேவையான உப்பு, ப.மிளகாய் அரைத்து விழுது, பெருங்காயம், ஓமம் சேர்க்கவும். ஆறின பிறகு ப்ளாஸ்டிக் ஷீட்டில் வடகமாக இடவும்.

- கௌரி



# வேர்க்குருவை எதிர்க்க

18 மூலிகைகள்!

## மெடிமிக்ஸ்

ஆயுர்வேத டாய்லட் சோப்

முகப்பரு
பொடுகு
கரும்புள்ளி
சொறி
தேமல்











ZEST/MS/115

## வாய்வு லேகியம்

சகல விதமான வாய்வு ரோகங்களையும் பஞ்சுபோல் பறக்க செய்யும் பசி தீ பண மில்லாத மந்த வாய்வு, மார்புவலி, மூலச்சூட்டினால் வாய்வு அதிகரித்து மலத்தை இறுக்கி, காற்று பிரியாமலே மேற்படி வாய்வு மேல் நோக்கி ஏறுவதினால் இரு விலா பக்கத்திலும், நெஞ்சிலும், முதுகு பக்கத்திலும், நறுக்கென்று குத்தி சரீரத்தை முறுக்கி திரும்பவும் வாய்வு தொந்தரவுகளை பூர்ண சுகப்படுத்தும். பத்தியமில்லை. இன்னும் தேகத்திலுள்ள சகல வாய்வுகளையும் பித்தத்தையும் குணப்படுத்தும் வாய்வுலேகியம் 1 புட்டி விலை ரூ. 35-00 VPP உண்டு. தேவைக்கு எழுதவும். தபால் செலவு இலவசம்.

## இருமலா ..? இளைப்பா ? தும்மலா ?

இருமல், இளைப்பு, தும்மல், மற்றும் பித்தத்தினால் ஏற்படும் மயக்கம் இருதயம் படபடப்பு, நெஞ்சுவலி, பிடரிவலி, உடம்புவலி, மலச்சிக்கல், பசிமந்தம், ருசியின்மை, அடிக்கடி ஜலதோஷம், ஓயாதும்மல், நீர்வடிதல், தலைபாரம், இருமல், கோழைக்கட்டு, மேல்மூச்சு, இளைப்பு, கர்முர் என்று இழுப்பு, உடல் பலஹீனம், உடல் தேறாமை, அசதி, சோர்வு, களைப்பு, போன்ற வியாதியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு நாங்கள் சிகிச்சை அளிக்கிறோம். பாதிக்கப்பட்டவர்கள் தேவையான சிகிச்சை பெறலாம். 1 மாத சிகிச்சைக்கு யன்மத டானிக்கு செட் 1க்கு விலை ரூ. 45-00 VPP உண்டு. தேவைக்கு எழுதவும். தபால் செலவு இலவசம்.

## மதன ரத்னகுளிகை.

திருமணம் ஆனவர்கள் இந்த குளிகையை தேவையான நாட்களில் உபயோகப்படுத்தி உடலில் ஏற்படும் பலஹீனத்தை மாற்றி விரைவில் தளர்ச்சியாவதை போக்கி உடல் பலமும், ஊக்க சக்தியும் பெறலாம். சாப்பிட்ட 2 மணி நேரத்தில் குணம் கிடைப்பதாக உபயோகித்தவர்கள் கூறுகிறார்கள். நீங்களும் இதன் குணத்தை பெற விரும்பினால் இன்றே உபயோகபடுத்தி பாருங்கள். 15 குளிகை கொண்ட புட்டி 1க்கு விலை ரூ. 45.00 ஆகும். ஆசை இருந்தும் செயல்படுத்த முடியாத நிலையில் உள்ளவர்களின் சிகிச்சைக்கு பஞ்சலோக பஸ்பம் கலந்த ஸ்பெஷல் மதனரத்ன குளிகை செட் 1க்கு விலை ரூ. 95-00 VPP உண்டு. தேவைக்கு எழுதவும். தபால் செலவு இலவசம்.

## மலசுத்தி சூரணம்

வயிற்றில் உள்ள வாயுவின் சீர்கேட்டால் பெருங்குடல் மந்தப்பட்டு பிசைகிற சக்தி குறைந்து போவதாலும், குடல்களில் நெய் பசை குறைந்து வறட்சி ஏற்படுவதாலும் மலபந்தம் ஏற்படுகிறது. இந்த குறையை எமது மல சுத்தி சூர்ணம் தீர்த்துவிடும். இரண்டு மூன்று நாட்களுக்கு ஓர் தடவை மலம் போதல் ஆட்டுப் புழுக்கையை போல் மலம் உருண்டை கட்டி காய்ந்து தீர்ந்து போதல், சரீரவறட்சி வாய் நாற்றம் மூலத்தில் அரிப்பு இரவில் நல்ல தூக்கம் மடியாமை, அஜீர்ணம் முதலிய மலச்சிக்கலால் ஏற்படும் வியாதிகளுக்கு இந்த சூரணத்தை இரவு படுக்கைக்கு போகும் முன் சாப்பிட்டு வந்தால் மல சோதனை சீர்பட்டு எல்லா நோய்களும் தீரும். சாப்பிட ருசிகரமானது. காலையில் மலம் தாராளமாக வந்து விடும். 1 புட்டி விலை ரூ. 30-00 VPP உண்டு. தேவைக்கு எழுதவும். தபால் செலவு இலவசம்.

விபரங்களுக்கு :-

**சரவணா சித்த வைத்தியசாலை MM**

Post Box No. 505, திருவாசகவுண்டனூர், (காவேரி மெடிக்கல்ஸ் அருகில்)

சேலம் ஜங்ஷன் - 636 005.

# ப்ரியசகி... துணிந்து நில்!

மின்னும் ப்ளாஷ் பல்புகள். வீடியோக் காமிராக்கள்.

மாலைகள்...கைதட்டடல்...

'இந்த ஆண்டின் தலை சிறந்த பெண்மணி' - "சகி" இனப் அவளைப் போற்றிக் கொடுத்த விருது மேஜைமேல் மின்னியது.

உணர்ச்சி மிகுதியில் கைகள் லேசாக நடுங்கியது மாதங்கிக்கு.. தொண்டைக் குழியில் ஏதோ பந்தாக அடைத்தது.

இதோ பத்திரிக்கைகாரர்கள்...! போட்டி போட்டுக் கொண்டு கேள்விகளைத் தொடுக்க..

"இப்படி, முற்றிலுமே பெண்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டு இத்தனை வியாபார நிறுவனங்களையும் நடத்தக் காரணம்?"

"பெண்ணுக்குப் பெண்ணே ஆதரவு அளிக்காட்டி யாரு அவளுக்கு உதவ வரப் போறாங்கங்கற எண்ணம் தான்."

"பெண்களுக்குப் பாதுகாப்புக்கு ஆண்களை..."

"ஒரு பெண்ணுக்குச் சிறந்த பாதுகாப்பு அவ மனசுதான்."

"ஒவ்வொரு வெற்றிகரமான ஆணுக்குப் பின்னாடியும் ஒருபெண் நிற்கிறாள் என்று சொல்வாங்களே...உங்களுக்குப் பின்னாடி..."

"........"

"அரசல் புரசலா காதுல விழுந்த போது நம்பலேம்மா... இப்ப இவர் போக்கே சரியில்லே..."

"அனுசரிச்சுப்போமா... பொண்ணுன்னா பொறுத்துத் தான் போகணும். எல்லாம் சரியாயிடும்."

பொறுத்துக் கொண்டாள்.

குடித்து விட்டு வந்து ஹால் முழுவதும் வாந்தியெடுத்துவிட்டு "எவனோடடீ இருந்தே இத்தனை நேரமா... கதவை உடனே திறக்க வரமுடியலெ" என்று கத்தியவனைப் பொறுத்துக் கொண்டாள்.

"நாய் கூட திங்காதுடி. உன் சமையலை...தூ..."

முகத்தில் விழுந்த சோற்றுத்தட்டை பொறுத்துக் கொண்டு உதட்டோரத்தில் கசிந்த ரத்தத்தை நாவால் நக்கியபடி டைனிங் ரூமைத் துடைத்தாள்.

"அந்த மூதேவி வாயைக் கொஞ்சம் மூடேன். மனுஷன் தூங்க முடியுமா இந்த வீட்டிலே..."

பொங்கி வந்த கோபத்தை அடக்கியபடி அழும் குழந்தையுடன் மின்விசிறியில்லாத வெராண்டாவில் ஒதுங்கிக் கொண்டாள்.

குழந்தை விடாமல் அழுது கொண்டிருந்தது.

"நிஜம்தானா..ப்ளீஸ் சொல்லிடுங்க... எதையும் மறைக்காம...ப்ளீஸ்"

"ஆமாம் மாதங்கி.. அதுவந்து.... எதிர்பார்க்கலெ..."

கெஞ்சினாள். அழுதாள்.

"விடமுடியாதும்மா...இப்ப லதிகா மூணுமாசம். எனக்குன்னு ஒரு பொறுப்பு இருக்கு பாரு... மாரல் ரெஸ்பான்சிபிளிடி..." ஆதரவாய்த் தொட்டு ஆறுதல் சொல்ல வந்தவளை குஷ்டநோயாளியாய்ப் பாவித்து தவிர்த்து நகர்ந்தான். கொதித்தாள். வெடித்தாள்.

"...எங்கேடி போவே...விட்டா பேசிண்டே போறியே...என்னடி பண்ணுவே வெளியே போயி...உனக்கு ஏதாவதுவேலை வெட்டி' யுண்டா அட்லீஸ்ட் டிகிரியாவது முடிச்சியா? எப்படிப் பிழைக்கறதா உத்தேசம்? எத்தனை நாள் உங்கண்ணன் சோறு போடுவான்? போடி உன்னே...என்ன குறை வச்சேன்...? ராஜாத்திமாதிரி இருக்கே...கைநிறைய செலவுக்குப் பணம், பீரோ வழியுற அளவு ஸில்க்கும் ஜார்ஜெட்டும்... அழகா குழந்தை...என்னவோ ஆகாத்தியம் பண்ணுறியே...

போ...போ.. நீ தாண்டி எனக்கு பெண்டாட்டி...வெளியில போனா உனக்கு ஊர்

**உஷா ஸ்ரீகுமார்**



- ஸ்ரீ.விஷ்ணுப்ப்ரியா

தர்றப்போற பட்டம் வேற... தெரியுமா?''

திராவகமாய் சொற்கள் மேலே வந்து விழ...

குழந்தை அழுகையை எப்போதோ நிறுத்தி விட்டது. சின்ன விரல்களை மூடிக் கொண்டு முஷ்டிகளை அழகு பார்த்துக் கொண்டிருந்தது.

**அ**ம்மா மடியில் தலை வைத்துப் படுத்துக் கொண்டு பிழியப் பிழிய அழுதபோது...

''இந்த வயசிலெ அப்படி இப்படி போறது தான். பெரிசுப் படுத்தாதேடீ கண்ணே...''

''எத்தனை காலம் உங்க தங்கை இங்கேயே டேராப் போடறதா உத்தேசம்?''

''உம் பொண்ணுக்கு எப்பவுமே அறிவில்லேம்மா. தங்கமான மாப்பிள்ளே... கை நிறைய சம்பாத்தியம், கார், வீடு, நல்ல போஸ்ட்....அனுசரிச்சின்டு நடக்கத் தெரியாம வாழா வெட்டியா வந்திருக்கா பாரு குழந்தை யோட....அத்தனையும் கொழுப்பு—அட்டம்.''

அண்ணன் வார்த்தைகளிலிருக்கும் அனலைத் தாங்க முடியாமல் குழந்தையை அணைத்துக் கொண்டு கண்களிலேயே ஆவியாக மாறி கன்னங்களைச் சூடேற்றிய கண்ணீரை துடைக்க முயன்றாள். தலை கிறுகிறுத்தது.

''...தாயே ஜகன் மாதா...துர்கே.. அம்பிகே காப்பாத்தும்மா பராசக்தி..

யாதேவீ சர்வ பூதே ஷு சக்தி ரூபேண சமன்விதா நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ் தஸ்யை நமோ நமஹ...''

''பத்து நாள்லெ சரியாப் போயிருண்டீ... விட்டுப் பிடி...ஜெயிக்கலாம்.''

சமாதானமாகப் பேசிய அப்பாவுக்கு பதிலாக ஒருவரண்ட புன்னகையை உதிர்த்துவிட்டு குழந்தையும் பையுமாக பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டிருந்தபோது தான் உண்மையிலேயே நாற்சந்தியில் நிற்கும் அனாதையாக உணர்ந்தாள்.

ஆதரவு வந்தது ராதிகா வடிவில்...

''ஹேய் மாதங்கி... எங்கே வெய்யில்லே ளம்பிட்டே பாப்பாவோட? ஏறு வண் டிலே...''

மூன்றாவது வகுப்பிலிருந்து கல்லூரி இறுதிவரை ஒன்றாகப் படித்த உயிர்த் தோழி. பரீட்சைக்கு நான்கு மாதங்கள் முன்பே அதிரடி வேகத்தில் நிச்சயிக்கப்பட்டு நடந்த கல்யாணத்தின் போது கூடவே இருந்து அலங்கரித்துவிட்டு நலங்கின் போது கிண்டல் செய்து கன்னம் சிவக்க வைத்த சகி... போனவருடம் நடந்த வளைகாப்பின்போது தோழியாய் மணையில் அமர்ந்து மஸ்கட்டிலிருக்கும் கணவனைப் பற்றிய கனவுகளைக் கண்களில் சுமந்தபடி வளையடுக்கிக் கொண்டே பிரிய தோழி...

''...இப்ப என்னடி பண்ணப்போறே—நா வேணா போயி பேசிப் பார்க்கட்டுமா?''

''வேண்டாம் ராதி....அவ வயத்துல குழந்தை... அவனே இருக்கட்டும்.வேண்டாம்.''

''அப்போ நீ?''

''தெரியல டீ...'' குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

குழந்தை கல்பகா மெதுவாக குப்புறத் திரும்பிப் படுத்தாள்.

''ஒரு வேலை தேடப் போறேன். குழந்தையை நல்லா வளர்க்கப் போறேன். முதல்ல தங்க ஒரு இடம் பிடிக்கணும்.''

''இத பார் மாதங்கி..கொஞ்ச நாள்லே எல்லாமே சரியாயிடும், அதுவரைக்கும் இங்கே என் வீட்டில் தங்கிக்கோ நானும் அடுத்தமாசம் மஸ்கட் கிளம்பறேன். பேமிலி க்வாட்டர்ஸ் அலாட் ஆயிருச்சாம். கண்டங்களை வீட்டில் வைக்கறதுக்கு யோசனை பண்ணிக் கிட்டிருந்தேன். நீயே இரேன்.''

ஜன்னலுக்கு வெளியே மாலை நேரத்து சூரியன் ஆரஞ்சு நிறத்தில் தெரிந்தது.

கால் நீட்டி உட்கார்ந்தாள்.

''தேங்க் யூ ராதீ...''

''இப்போ செலவுக்கு...''

''கவலையே இல்லை. அம்மா அடைக்கலம் தரலைன்னாலும் அவ போட்ட நகைகள் இருக்கு டீ.''

பாட்டி காலத்து ப்ளூ ஜாகர் தோடும் பின்னல் கொடியும், சிகப்புநெக்லசும், மினின் கட் வளையலும் கரன்சியாக மாறியதும் நிம்மதியாக மூச்சு விட்டாள்.

ராதிகாவின் சிறிய வீட்டில் ஊருக்கு ஒதுக்குப் புறமான காலனியில் குழந்தையுடன் தனிக் குடித்தனம் ஆரம்பமாக...

வேலை தேடும் படலம். ஒன்றும் தகையவில்லை. செருப்புதான் தேய்ந்தது. க்வாலிஃபிகேஷன்? முன் அனுபவம்? ரெகமண்டேஷன்?

அப்படியே கிடைத்தாலும் குழந்தை கல்பாவை யாரிடம் விட்டுச் செல்வது? இந்தப் பக்கம் மூன்றுகிலோ மீட்டர் விஸ்தீரணத்துக்கு குழந்தை காப்பகம் ஒன்று கூடக் கிடையாதே..

பொறி தட்டியது..

"கல்பகா குழந்தைகள் காப்பகம்" என்று வாசலில் புதிய பலகை அறிவிக்க..

ஒரே மாதத்தில் ஒன்றும் இரண்டுமாய் பன்னிரண்டு குழந்தைகள் மாதங்கியின் கைகளில்.

உதவிக்கு வந்த சரஸ்வதியம்மாள் வீட்டோடு தங்க ஆரம்பித்தாள். ஆள் சம்பளம், செலவுகள் போக மிஞ்சிய ஆயிரத்துச் சில்லரையிலிருந்து ராதிகாவுக்கு ஒரு தொகையை வீட்டு வாடகையாக அனுப்பிவைத்தாள்.

மற்ற குழந்தைகளோடு கல்பா நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள்.

அன்று அம்மா வந்து அழுது தீர்த்துவிட்டு "இப்படி வைராக்கியமாக வாழ்க்கையைக் கெடுத்துக்கறியேடீ..நாளைக்கு உனக்கு யாருடீ ஆதரவு"

ஆறு மாதங்களுக்குப்பின் சிவராமன் அனுப்பிய விவாகரத்து நோட்டீசுக்கு சம்மதித்து ஜீவனாம்சம் தேவையில்லை என்று எழுதிக் கொடுத்து விட்டு தளர் நடை போடும் கல்பாவைக் கையில் பிடித்துக் கொண்டு நடந்தாள் தெளிவுடன்.

தினசரிகாலையில் அரக்கப் பறக்க குழந்தைகளை காப்பகத்தில் கொண்டு வந்து விட்டுச் செல்லும் பெண்கள் மாலை சுமக்க முடியாமல் கறிகாய், வீட்டு சாமான்களுடன் வந்து குழந்தையைக் கூட்டிச் செல்வதைப் பார்த்த மாதங்கி சிறியதாக "கல்பகா அங்காடி" யை ஆரம்பிக்க தாய்மார்கள் அலைச்சலின்றி காய்கறிகளையும் சாமான்களையும், அவசர தேவைக்கான சேர்ஃபிரீ, பௌடர், சோப்பு முதலியவற்றையும் இங்கிருந்தே வாங்கிச் செல்ல ஆரம்பிக்க மாதங்கியின் நியாயமான விலையும், தரமான பொருட்களும், கனிவான கவனிப்பும் சுற்றுப்புற காலனிவாசிகளை தன் வசம் இழுக்க ஆரம்பித்தது. வியாபாரம் சூடுபிடிக்க கடையையும் "க்ரீஷ்"ஷையும் கவனித்துக் கொள்ள ஆறு பெண்கள் சேர்க்கப் பட்டார்கள்.

அத்துடன் வீட்டில் நடக்கும் விசேஷங்களுக்கு, சிறு வைபவங்களுக்கு விருந்து சாப்பாடும் பட்சணங்களும் செய்து அங்கே கொண்டு பரிமாறி வர வனஜாவும் ரங்கம்மாவும் நியமிக்கப்பட "கல்பகா கேட்டரர்ஸ்" சிறிய அளவில் ஆரம்பமானது.

மொத்தமாக ஹோல்சேல் வியாபாரியிடம் ஒரு தொகையை அட்வான்சாகத் தந்து இருநூறு சேலைகளை வாங்கி வந்தபோது ஒரே வாரத்தில் அறுபத்தியேழு புடவைகள் கலபத் தவணை முறையில் விற்றது. மேலும் சரக்கெடுக்க விரைந்தாள் மாதங்கி. அந்த தீபாவளி சீசனில் மட்டும் நிகர லாபமாக ஏழாயிரத்துச் சொச்சம் கையில் நின்ற போது பல நாட்களுக்குப்பின் சிரித்தாள். வேலை செய்பவர்களுக்கு இலவசமாய் புடவை கொடுத்தாள்.

"மம்மீ..நான் பாஸ்..செவந்த் ஸ்டேண்டர்டு போயாச்சு. இனிமே நான் பேபியில்லெ..." என்ற கல்பாவை கட்டி

---

## தயாரிப்பாளரின் கவனத்திற்கு

ரயிலில் நீண்ட தூர பிரயாணம் செய்யும் போது சின்னக் குழந்தைகளுக்குக் கொடுப்பதற்கு ஒரிண்டு வேளைக்குப் போதுமான பாக்கட்டுகளில் சிரலெக், ஃபேரக்ஸ், போனிமிக்ஸ் போன்றவற்றை விற்கலாம். 1-3 வயது உள்ள குழந்தைகளுக்குப் பால் எவ்வளவு கொடுத்தாலும் போதாது. ரயிலில் கொண்டு வரும் சாப்பாடு விரைத்துப் போய் விழுங்க முடியாது. இது நான் என் இரண்டு குழந்தைகளுடன் ரயிலில் நீண்ட பயணம் செல்கின்றபோது ஒவ்வொரு முறையும் ஏற்படும் அனுபவம்.

- ஆர்.வேதவல்லி



# Cool walks, long talks, & peace.



As you move into the tranquility of a retired life, you can trust a friend who understands your need for security and peace. For like you, we have seen four decades successfully! So start an attractive savings plan from **Dhandapani** today.

*For more details, call our office or any leading broker.*

AWARDED
FA
BY CRISIL




Finance and Investments Ltd.

Regd. Office: 141, Linghi Chetty Street, **Madras** 600 001
Admn. Office: 645, Mount Road, II Floor, **Madras** 600 006
**Tel**: 8268285, 8259264, 8251242, 8284280

**DECADES OF TRUST, A GLOWING TOMORROW.**

**BANGALORE:** 26/6, N.R. Road Cross, Bangalore 560 002. **COCHIN:** 41/406, Chittur Road, Ernakulam, Cochin 682 035 **COIMBATORE:** 391, Bharathiyar Road, New Siddha Pudur, Coimbatore 641 044 **CUDDAPAH:** 7/153-3B, N.G.O. Colony, Cuddapah 516 002 **MADURAI:** 7, West Masi Street, (2nd Floor), Madurai 625 001. Ph: 37977 **SALEM:** Opp. to Indian Bank, Five Roads Junction Main Road, Salem 636 004 **TRICHY:** B-13, Basement, Chitra Complex, Chintamani, Trichy 620 002

This is in continuation of our statutory Ad appeared in *News Today* & vernacular on 19/5/94



ஒருநாள் மாலை நேரத்தில் தோழி வீட்டிற்குச் சென்றோம். அடை, வடை, ஆப்பம் என்ன சாப்பிடுகிறாய் என்றாள். ஒரே நேரத்தில் எப்படி இத்தனை வகை என திகைத்தேன். இட்லிக்கு அரைக்கும் போதே, வடைக்குக் கொஞ்சம், அடைக்குக் கொஞ்சம், ஆப்பம் கொஞ்சம் என்று ஒரே நேரத்தில் அரைத்து தனித்தனி கிண்ணங்களில் வைத்து விடுவேன். தேவைபடும்போது எடுத்து உபயோகிக்கலாம். பிரிஜ்ஜில் வைத்து நான்கு, ஐந்து நாட்களுக்கு வைத்திருக்கலாம். அடிக்கடி கிரைண்டர் கழுவும் வேலையும் இல்லை என்றாள். இப்போது நானும் அதே போல் செய்து வருகிறேன்.

- எம்.குமுதம்.

---

முத்தமிட்டபடி "சரஸ்வதியம்மா.. எல்லாருக்கும் ஸ்வீட் தாங்க" என்றாள்.

துள்ளி ஓடினாள் கல்பா.

"மேடம்... தயாள் தாஸ் குப்தாவை பத்து மணிக்கு கார்மென்ட் செக்ஷனுக்கு வரச் சொல்லியிருக்கீங்க."

"சுமதி...அவரை ஒரு அரை மணி வெய்ட் பண்ணச் சொல்லி போஸ்ல சொல்லிடு. வழில நம்ம 'க்ரீஷ்'ஷைப் பார்த்துட்டுப் போவோம்..."

"தேனியிலிருந்து தெய்வானைன்னு ஒரு பொண்ணு லெட்டர் எழுதியிருக்கு. வேலை கிடையாது. தேடவேணும் கிடைக்கும் வரை இரண்டு மாதங்கள் தங்க ஹாஸ்டலில் கன்சஷன் தரமுடியுமான்னு கேட்டு"

"சரின்னு எழுது. வந்தவுடனே என்னைப் பார்க்கச் சொல்லு. கேன்டிடேட் ப்ரைட்டா இருந்தா அப்சார்ப் பண்ணிப்போம்."

"நம்ம ஹாஸ்டல் வார்டன் ஒருமாசம் லீவு கேட்டிருக்காங்க. அப்பாவுக்கு உடம்பு சுகமில்லை...ஊருக்குப் போகணுமாம்."

"ஒருமாச சம்பளத்தை அட்வான்ஸா குடுத்து அனுப்பிடு. அவங்க வர்ற வரைக்கும் விசாலியை ரெடி மேட் செக்ஷனிலிருந்து ஹாஸ்டலுக்குப் போயி கவனிக்கச் சொல்லு. சுதாவை ரெடிமேட்ஸை முழுசா கவனிக்கச் சொல்லிடு."

காரிலிருந்து இறங்கிய மாதங்கி மூன்று மாடிகளாக உயர்ந்திருக்கும் "கல்பகா காம்ப்ளெக்ஸ்" சைப் பார்த்து ரசித்தபடியே உள்ளே நுழைந்தாள்.

ஆறாயிரத்து எண்ணூறு சதுர அடிகளில் எண்ணையிட்ட சக்கரமாக தங்கு தடையின்றி இயங்கிவரும் சகல குடும்பத் தேவைகளையும் ஒரே கூரையின் கீழ் பூர்த்தி செய்யும் "கல்பகா டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ்", "கல்பகா கார்மென்ட்ஸ்", "கல்பகா ஹேண்டிக்ராப்ட்ஸ்", "கல்பகா ரெஸ்டாரண்ட்" மற்றும் "கல்பகா லேடீஸ் ஹாஸ்டல்" ஆகியவைகளை தன்னுள் அடக்கிய "கல்பகா காம்ப்ளெக்ஸ்"சை ஒரு தாயின் வாஞ்சை யுடன் ரசித்தபடி அங்கு வேலை செய்யும் பணியாளிகளை- அனை வருமே பெண்கள் மட்டுமல்லவா- பார்த்தபடி தன் அறையை நோக்கி நடக்கிறாள்.

"மேடம், உங்க வெற்றிக்குப் பின்னே?"

"ஆ...அ.நிச்சயமா பெண்தான். எத்தனை இடர்பாடு வந்தபோதும் கலங்காத மனவுறுதி தந்த அந்த அம்பிகை...துர்கை...தோள் கொடுத்த தோழி, எனது நிறுவனத்தில் வேலைசெய்யும் பெண்கள்... முக்கியமா நெஞ்சு நிமிர்த்தி வாழணும்...ஒரு அடிமையால இன்னொரு அடிமையைத்தான் உருவாக்க முடியும்... அநியாயத்தை எதிர்க்கிறவளால தான்... சிறுமை கண்டு பொங்குபவளாலதான்...ஒரு புதுமைப் பெண்ணை உருவாக்க முடியும் என்று நான் கலங்கி நின்ற கட்டத்தில் வார்த்தைகளின்றி எனக்கு நினைவுறுத்திய என் குழந்தை.என்பெண் கல்பகா..."

கடல்லையாய் எழுந்த கை தட்டல் அடங்க வெகு நேரம் ஆனது.

நியூ

# சீகா

கூந்தல் பராமரிப்பு




அரிய பரிசுடன்

நியூ

## 4 சீகா

பாக்கெட்டுகளுடன்
இரண்டு தீப்பெட்டிகள்

## இலவசம்!

இச்சலுகை
ஜூலை
15 வரை
மட்டுமே.




நியூ சீகா - இச்சலுகை
இல்லாமலும் கிடைக்கும்

# இன்பெண்டால்




குழந்தைகளின் சிறந்த
ஆயுர்வேத கிரைப்வாட்டர்

தயாரிப்பவர்கள் :

GROOSELL PHARMACEUTICAL
MANUFACTURING COMPANY

VALASARAVAKKAM, MADRAS - 600 087
PHONE : 4827969

UNIQUE/GP/5494

மாணவச் செல்வங்களுக்கு
ஸ்ரீபெட் வழங்கும் சிறப்புச் சலுகை



# இலவசம்

சிறுவர்களுக்கான
வாட்டர் பாட்டில்
ஒவ்வொன்றுடனும்
ஒரு பென்சில்!

முந்துங்கள்!
இந்த வாய்ப்பு 31.7.94 வரை
மட்டுமே.




ஸ்ரீபெட்

ஜார்கள் ◆ பாட்டில்கள்

ShriPET

உடையாதவை

உணவுத்தரம் காப்பவை ◆ சுகாதாரமானவை

ஸ்ரீராம் நிறுவனத்தின் தரமான தயாரிப்பு.
விநியோகஸ்தர்கள் : ஸ்ரீராம் சேல்ஸ் இண்டர்நேஷனல்.

இச்சலுகை அல்லாமலும் ஸ்ரீபெட் தயாரிப்புகள் கிடைக்கும்

AKSHAR SSI/94120

## இந்த மாதம் எப்படி? ஜூலை '98

### மேஷ ராசி :

அசுவினி, பரணி, கிருத்திகை 1ஆம் பாதம்.

நீங்கள் கன்யாலக்கினத்தில் பிறந்தவர்களானால் 10,11,12 தேதி களில் உங்களுடைய அபிலாஷை களில் ஒன்று கைகூடி வரும். குடும் பத்தில் குதூகலத்திற்குக் குறை விருக்காது. மாதத்தின் பிற்பகுதியில் நல்ல சூழ்நிலையே காணப்படுகிறது. இது அலுவலகப் பணியாளர்களுக் கும், வியாபாரம் மற்றும் பொருள் உற்பத்தியாளர்களுக்கும், நடிக, நடிகைகளுக்கும் நன்கு பொருந்தும். குருபலம் இருந்தும் திருமணம் தட்டிச் செல்லுகிறது எனில் தசா புக்தி அனுகூலமாக அமையாதது ஒரு காரணமாக இருக்கலாம். எனவே நடப்பு தசாபுத்தி நாதனுக்குரிய பரிகாரம் அறிந்து செய்தால் காரியம் கைகூடி வரும். வழக்குகளில் சிக்கி இருந்தால் அடுத்த மாதத்திற்கு வாய்தா வாங்கி விடுங்கள். இது போலவே நிலம் வாங்கும் விஷயத் திலும் அவசரம் வேண்டாம். திடீர் பிரயாணம் ஒன்றுக்கு வாய்ப்பு உள்ளது. அதனால் இலாபம் உண்டு. செல்வாக்கும் ஏற்படும். புதியதாக நட்பு ஒன்று வந்து சேரும். அது உங்கள் நிலைக்கு உகந்ததல்ல என்பதை பிறகு புரிந்து கொள்ள வேண்டிவரும். எனவே, ஆணோ, பெண்ணோ புதிதாக வரும் நட்பினை விலக்குவது நல்லது. குரு இருந்தாலும் 7ம் இடத்தில் இராகு நல்ல நிலையில் இல்லை. அது போல் இராசிநாதனும் சரியாக அமைய வில்லை. அதனால் கடன் தொல்லை. திருடர் பயம் என ஏதாவது ஏற்பட்டு மனஅமைதி கெடாமல் இருக்க அங் காரகனுக்கு அர்ச்சனை செய்யுங்கள். கந்தர் சஷ்டி கவசமும் படிக்க லாம்.

### ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.

இராகுவும், சுக்கிரனும் மாதம் பூராவும் உதவும் நிலையில் உள்ள னர். அதனால் வாகன யோகமும், வீட்டு யோகமும் உண்டு. இரண்டில் ஒன்றையாவது வாங்க முயற்சி செய்துதான் பாருங்களேன். பதி னைந்து மாதம் இராகுவின் அருட் கடாட்சம் உண்டு. எனவே வாகன சஞ்சாரமோ அல்லது சொந்த வாகன சஞ்சாரமோ கட்டாயம் உண்டு. மற்ற கிரகங்களின் அமைப் பைக் கொண்டு பார்த்தால் அரசு பணியாளர்களுக்கும், வாகன வோட்டிகளுக்கும் ஏதேனும் சலுகை கிடைக்கலாம். வேலைக்கு முயல்ப வர்கள் மாதத்தின் பிற்பகுதியில் சூரிய ஹோரையில் அல்லது இராகு வேளையில் இராகுவுக்கு விளக் கேற்றுங்கள். சாதாரண மண் அகல் நான்கினை எடுத்து வாரம் ஒருமுறை ஏற்றி வாருங்கள். உங்கள் எண்ணம் ஈடேறும். விளக்கு ஏற்றுவது என்பது எல்லா மதத்தினர்க்கும் பொதுவான ஒன்று. வேலை நிமித்தமாக அருள் மிகு அந்தோணியாருக்கோ, அல்லது சகாயமாதாவுக்கோ கூட விண்ணப் பம் எழுதி வேண்டலாம். சொந் தத்தில் வீடு வாங்க, மேலதிகாரியைச் சந்தித்து வேண்டுகோள் விடுக்க ஏற்றதோர் சமயம். எனவே பயன் படுத்திக் கொள்ளுங்கள். வெளிநாட் டில் வேலை தேட முயற்சிப்பவர் களுக்கு இந்த மாதத்தில் வெற்றி உண்டு. குறிப்பாக இசைக் கலை ஞர்கள், சமூக சேவகிகள், மற்றும் எழுத்தாளர்கள் ஏற்றம் பெறுவர். அரசியலில் ஈடுபட்டுள்ளவர் களுக்குச் சற்றுச் சோதனையான காலகட்டம். அது போலவே எத் துறையிலும், மேலதிகாரிகளாக இருப்பவர்களுக்குச் சில சோதனை கள் ஏற்படலாம்.

### மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 - ஆம் பாதங் கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

உங்களுக்குத் தாய் வழியில் வர வேண்டிய பூர்வீக சொத்துக்களில் பங்கு ஏதேனுமிருந்தால், இலாப ஸ்தானத்தில் உள்ள கேது அதைப் பெறுவதற்கு உதவுவார். முயற்சி செய்துதான் பாருங்களேன். அத்து டன் அப்படிப்பட்ட பாகத்தில் உங்கள் முன்னோர் மறைத்து வைத் திருக்கும் புதையல் கூட உங்களுக்குத்

கிடைக்கலாம். அந்த அளவிற்குக் கேதுவின் சஞ்சாரம் சாதகமாக உள்ளது. எனினும் உங்கள் சகோதரர் ஒருவரால் உங்களுக்கு மனநிம்மதி குறையலாம். அது அவரது உடல் நிலைபற்றியும் இருக்கலாம். அல்லது அவர் உங்களிடம் காட்டும் அலட்சியம் காரணமாகவும் அமையலாம். இரும்பு மற்றும் கருப்புக்கல், கட்டிடக் கலை சம்பந் தப்பட்டவர்கள் சற்று முன் எச்சரிக்கை யுடன் செயல்படுவது நல்லது. குருபார்வை பெறும் ஒன்பதாமிடத்துச் சனி ஒருபோதும் கெடுதல் செய்ய மாட்டார். எனினும் கண் பாதிக்கப்பட்டு சரியாகும். பணக் கஷ்டமும், மனக்கஷ்டமும் இருந்தாலும் குருவின் அரு ளால் விபரீதமாக ஒன்றும் ஏற்படாவண்ணம் நிலைமை சீரடையும். தசாபுத்தி சரியில்லை எனில் குருபலம் வந்தும் திருமணம் தட்டத் தான் செய்யும். அதற்கேற்ப பரிகாரங்களைச் செய்தாலே போதும். கைமேல் பலன் கிடைக் கும். எரிபொருள் துறையினர், காவல் துறை யினர் கவனமுடன் செயலாற்ற வேண்டிய நேரம். கடன் தொல்லையும், குழந்தைகளால் சிறு தொல்லைகளும் ஏற்படலாம். ராசி நாதன் ஆட்சியிலிருப்பதால் அவன் அருள் பெற புதனுக்கு அர்ச்சனை, திருமாலின் சன்னதி சென்று சேவித்து சடாரி சாற்றப் பெறுதல் ஆகியவை நன்மை தரும்.

## கடக ராசி :

புனர்பூசம் 4- ஆம் பாதம், பூசம், ஆயில் யம்.

சுக்கிரனும், அங்காரகனும்தான் உங்க ளுக்குச் சாதகமாக இருக்கிறார்கள். மற்ற வர்கள் உதவாவிட்டாலும் உபத்திரவம் தரா திருந்தால் போதுமெனும் நிலை. பூச நட்சத் திரத்தில் பிறந்தவர்கள் தமது மதிநுட்பத்தால் நிலைமையைச் சமாளிப்பார்கள். ஆனால் ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஓரொரு காலத்தில் தாம் வாழ்ந்த நிலை யையும் இன்றைய நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்து மனவிரக்தி அடையும் நிலை. எனவே திடமான மனதும், தெய்வத்தின் பால் நம்பிக் கையும் கொண்டு அமைதியுடன் இருந்தாலே போதும். சுக்கிரன் தானாக வந்து சுகத்தை யும், அங்காரகன் அருளையும் தந்து உங்களை நல்ல நிலையில் வைப்பார்கள். சென்னை திருவான்மியூரில் உள்ள ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் மகாசமாதிக்குச் சென்று, அலைபாயும் மனதை ஷண்முகன் பால் நிலைநிறுத்தி அடிகளால் அருளப் பெற்ற ஷண்முகக் கவசத்தைப் பொருளுணர்ந்து ஆறு முறை படியுங்கள். சிந்தித்த பொருள் கைகூடும். இது எத்துறையினர்க்கும் பொருந்தும். கிறித் துவ சகோதரிகள் அருள்மிகு அந்தோணியார் விரதமேற்கொள்ளுங்கள். மற்றபடி கட்டிடக் கான்ட்ராக்டர்கள் மற்றும் நிலம் வாங்கிப் பிரித்து விற்பனை செய்பவர்களுக்கு ஏற்ற தொரு சூழ்நிலை. எனவே பயன்படுத்திக் கொள்ளுங்கள். சகோதரர்களால் ஒருசிலர் நன்மை அடைவார்கள். தாங்களாக அவர்கள் உதவ வரவில்லை எனினும், நீங்களாகச் சென்றால் பாசத்துடன் உதவ வருவார்கள். தான் ஆடா விட்டாலும் தன் சதை ஆடும் என்பதைக் காண்பீர்கள் - உங்கள் புதல்வன் அல்லது செல்வமகள் திருமணம் இவற்றிற்காக நீங்கள் இத்தகைய முயற்சியை மேற்கொள்ள வேண்டியது காலத்தின் கட்டாயமாக வந்தமையும்.

## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1 - ஆம் பாதம்.

இலாபத்தில் உள்ள இராசிநாதனுக்கு மாதத்தின் முற்பகுதியில் குருவின் பார்வை உண்டு. எனவே எத்துறையினர்க்கும் ஏற்ற தொரு சூழ்நிலை. வீடு, வாகனம் வாங்க, விற்கத் தகுதியான மாதம். மூன்றில் உள்ள இராகுவால் நீங்கள் செயல்படும் எத்துறை யிலும் எப்படியும் வெற்றி பெறுவீர்கள். கல்வி, கலை, தொழில், உத்தியோகம், வரன் தேடும் படலம் ஆக எந்த நிலையிலும் சிம்மமாக நின்று உங்கள் காரியத்தைச் சாதித்துக் காட்டு வீர்கள். 7ல் உள்ள சனீஸ்வரன் ஒரு வெகுதூரப் பிரயாணத்திற்கு வாய்ப்பளிப்பார். 10ல் உள்ள அங்காரகனும், 3ல் உள்ள குருவும் உங்கள் பெயருக்கும், பதவிக்கும், புகழுக்கும் கூட சோதனை தருவார்கள் என்றாலும் 11ல் உள்ள புதன் பாதுகாப்பாக இருந்து, சோதனைகளைத் தாங்கும் மனநிலையையும், பிறகு அதிலிருந்து விடுபட்டு மகிழும் மாட்சியையும் தருவார்.

வாழைக்காய் வறுவல் மீந்து விட்டதா? கவலை வேண்டாம். மசாலாக்களை வறுத்துக் கொண்டு மிக்ஸிக்கு அனுப்புங்கள். வாழைக் காய்ப் பொடி கனஜோராக இருக் கும்.

- ரோஜி



மாதத்தின் பிற்பகுதியில் உயர் பதவியில் உள்ளவர்கள் செயலிலும், சொல்லிலும் பிறர் குற்றம் காண முடியாதவாறு எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டிய கால கட்டம். குறிப்பாக அரசியல், பத்திரிக்கை, மற்றும் தனியார்த் துறையில் உள்ள உயர் மட்டத்தினர் அனைவருக்குமே இது பொருந்தும். ஏற்பட இருக்கும் எந்தச் சங்கடத்தையும் போக்கிக் கொள்ளச் சங்கடஹர சதுர்த்தியன்று அருள்மிகு கணபதியின் சன்னதிக்குச் சென்று அவனை சரணடையுங்கள். யானை, சிங்கத்தைக் கண்டலறுவது உண்மை. சங்கடம் என சிம்மராசிக்காரன் அருகம்புல் லுடன் ஆனைமுகத்தானிடம் சென்றால் அவர் அலற மாட்டார். அதற்குப் பதிலாக ஆனந்தமடைவார். அபயமும் தருவார். கவலை வேண்டாம்.

## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

அஷ்டமத்துக் கேதுவும், ஒன்பதாமிடத்து அங்காரகனும், இரண்டாமிடத்து இராகுவும் உங்களுக்குக் கடன் தொல்லை, மற்றும் உடல் நலக் குறைவு என ஏதோ ஒருவிதத்தில் தொல்லை தர முயன்றாலும், மற்ற கிரகங்கள் அனைத்துமே உங்களை அரவணைத்து அரணாக நின்று, உங்கள் செயலில், ஆற்றலில் எடுக்கும் முயற்சியில், குழந்தைகளை உயர்க் கல்வி நிலையங்களில் சேர்ப்பதில் ஆகிய அனைத்து முயற்சிகளிலும் நீங்கள் வெற்றிவாகை சூட ஆவன செய்ய இருக்கிறார்கள். எத்துறைகளிலும் பணிபுரிவோருக்கும் எதிர் பார்க்கும் பதவி உயர்வு உண்டு. தசாபுத்தி சரியாக அமையாதவர்களுக்கு மட்டுமே சிறு தடங்கல் ஏற்படலாம். இது திருமண விஷயத்திலும் சரி மற்றும் எதிர்பார்க்கும் பதவி உயர்விலும் சரி கண்கூடாகக் காணலாம். அப்படிப்பட்டவர்கள், புதனின் அதிபதியான திருமாலின் ஆலயம் சென்று அவரது ஆயிரம் நாமங்களையும் ஆத்மார்த்தமாக மனதை ஒருமனப்படுத்தி, உச்சரித்துச் சரணடையுங்கள். கைகூடி வர வேண்டிய திருமணத்தடையை நீக்கிச் சுபநிகழ்ச்சியை நன்கு நடத்தித் தர, திருமாலின் அருகில் உள்ள சடாரி எனும் சடகோபுரத்தாழ்வார், பெயருக்கு நம்மாழ்வார் என்றாலும், அவர் நம்முடைய ஆழ்வாராகவே மாறி உதவுவார்.

## துலா ராசி :

சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

சுவாதி நட்சத்திரத்தில் பெண்ணெடு - அல்லது சுவாதி இலக்கினத்தில் திருமணம் செய் என்பர். அத்தகைய நட்சத்திரத்தை நடுநாயகமாகக் கொண்டுள்ள துலா ராசியில் பிறந்துள்ளவர்களுக்கு, உங்கள் இராசிநாதனாகிய சுக்கிரன் மட்டுமே மாதம் பூராவும் உதவுகிறார். அதனால் தாம்பத்ய உறவிலும் குடும்பச் சூழ்நிலையிலும் மகிழ்ச்சியைத் தருவார். மாதத்தின் முற்பகுதியை விட, பிற்பகுதியில் சூரியனால் நீங்கள் எடுக்கும் எந்த ஒரு முயற்சியிலும் வெற்றி உண்டு. தசாபுக்திகள் நன்கமைந்தவர்களுக்கும், குறிப்பாக செவ்வாய், இராகு, குரு ஆகியவர்கள் விசாகத்தில் ஆட்சி, உச்சத்தில் அமர்ந்து அவர்களது தசை நடைபெறுபவர்களுக்கும் கவலை தேவையில்லை. மற்றபடி வீட்டில் நவக்கிரக ஹோமம் ஒன்று செய்வது நல்லது. அல்லது எள் கலந்த அன்னத்தைக் காகத்திற்குப் போடவும். எந்தவித புது முயற்சிக்கோ, அல்லது படத்துறையினர் புதுப்படத்திற்கு ஆரம்ப பூஜை செய்வதற்கோ, ஏற்ற சூழ்நிலை அமையவில்லை. இடமாற்றத்திற்கு விண்ணப்பிக்க வேண்டாம். மேற்படிப்புக்கு இடம் கிடைப்பதில் சிறு தடங்கல்கள் ஏற்படலாம். உங்கள் மதியின் மூலம் முயற்சி செய்யுங்கள். நிதியை உபயோகிக்க வேண்டாம். தானாக நடந்தால் உண்டு. அதற்குச் சூரியன், சுக்கிரன் உதவுவார்கள். அதை விட்டு நிதியை இழந்து பிறகு உங்கள் விதியையும் மதியையும் சேர்த்தே நோக வேண்டி வரும்.

## விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

மேஷகேது உங்களுக்கு உறுதுணையாக நின்று, வரும் தடங்கலைத் தகர்த்தெறிந்து, வெற்றி நடைபோட வைக்கும் நேரத்தில், அவருக்கு இணையாக நின்று இழந்த நகைகளையும், மதிப்பையும் பெற்றுத் தர புதனும்

வாழைத்தண்டு, வெள்ளரி, தக்காளி பச்சடியில் நீர்விட்டுக் கொள்ளும். வற்றலை வறுத்துப் போடுங்கள். நீரும் மிச்சம். பேரும் நல்ல பேர் கிடைக்கும்!
- ரோஜி





டிரான்ஸ்பரில் எங்கள் வீட்டு அழகான பீரோவின் கதவில் நிறைய தழும்புகள். பார்க்கப் பார்க்க அழுகையாய் வந்தது. என் மைத்துனர் அழகான ப்ளாஸ்டிக் ஷீட் (டேபிள் கிளாத்) பூப்போட்டது வாங்கி அந்தக் கதவின் அளவிற்குக் கச்சிதமாய் வெட்டி செலோடேப்பால் ஓரங்களை ஒட்டி விட்டார். மிகப் பிரமாதமாய் கண்ணைக் கவர்ந்தது. என்ன ஆணியால் பீரோ கதவைப் பிறாண்டுகிறீர்கள்? ஓ! இதுபோல் செய்யவா!

- கி. மஞ்சுளா

உதவுவார். எனவே செல்வாக்குக்குப் பங்கமி ல்லை. பணத்திற்குப் பஞ்சமில்லை. இதுவரை முயன்றும் முடிக்க முடியாததொரு முக்கிய மான விஷயத்தில், நல்லதொரு திருப்பத்தைக் காண இருக்கிறீர்கள். அது தொழிலிலும் இருக்கலாம், அல்லது வீடு, மனை, நிலம், வாகனம் போன்றவற்றை விற்கவோ, வாங் கவோ செய்யும் முயற்சியிலும் இருக்கலாம். ஆனால் உங்கள் வாழ்க்கையில் ஒரு பெண் குறுக்கிட்டு மன அமைதியை இழக்கச் செய்ய லாம். அது உறவினர் ஒருவராகவும் இருக்கும். அல்லது மாற்று குடும்பத்திலும் இருக்கலாம். நீங்கள் பெண்ணாக இருந்தால், ஒரு ஆணா லும், ஆணாக இருந்தால் பெண்ணாலும் உங்களுக்கு இத்தகைய வேண்டாத வம்பு வந்து சேரலாம். மனம் கூற பேனா எழுதி விட்டது. இனம் கண்டு விலகுவதோ, விலக்கு வதோ உங்கள் மனம் செய்ய வேண்டிய வேலையல்லவா? மற்றபடி அடகு வைக்கப் பட்ட நகை மீட்கப்படலாம். அல்லது பொன் னகை வாங்கியணிந்து புன்னகை புரியலாம். எனினும் தசாபுக்திக்கு ஏற்ப அதிருஷ்டம் அமையும். மற்றபடி மாதாவுக்கோ அல்லது மனைவிக்கோ சற்று உடல் நிலை பாதிக்கப் படலாம். அலட்சியம் செய்யாமல் உடனடி யாகக் கவனித்தல் நல்லது. தாயின் பாசமும் மனைவியின் நேசமும் அவர்கள் அருகில் இருக்கும் போது புரிவதில்லை. பிறகு புரிந்து என்ன பயன்? ஆகவே இந்த மாதத்தில் கிரக சஞ்சாரம் இது விஷயத்தில் சற்று சலனம் தர இருப்பதால் முருகனையும், சனீஸ்வரனை யும் ஆராதியுங்கள். சகல நோய்களும் நீங்கி விடும்.

## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1- ஆம் பாதம்.

உங்களுக்கு உகந்த நேரம், நீங்கள் நடிப்புத் துறையைச் சேர்ந்தவரா? புதியதொரு படத்தில் நீங்கள் வெகுநாளாக ஆசைப் பட்டுக் கொண்டிருந்த பாத்திரத்துடன் நடிக்க ஒப்பந்தமாகும். எழுத்தாளரா? உங்களுக் கொரு உயர்ந்த பரிசு உங்கள் புத்தகம் ஒன் றிற்காக வர இருக்கிறது. அரசியல்வாதியா? அமைச்சராகி விடுவீர்கள். இப்படி எத்துறை யினர்க்கும் அவர்களது முயற்சியின்றியே வெற்றி கிடைக்கும். கட்டிடக் கலையானால் புதிய ஒப்பந்தமும், இரும்பு வியாபாரியானால் அபரிமிதமான இலாபமும் வர இருக்கிறது. அந்த அளவிற்கு குரு, இராகு, சனி, சுக்கிரன், செவ்வாய் என ஒரு கிரகக் கூட்டமே உங்க ளுக்கு உதவும் நிலையில் சஞ்சரிக்கும். இத் தருணத்தில் குடும்பத்தில் சில பிரச்னை களை உருவாக்க புதனும், சூரியனும், கேதுவும் காரணமாகவும் இருக்கிறார்கள் என்பதை மறந்து விட வேண்டாம். ஐந்தாமிடத்துக் கேது, உங்கள் குழந்தைகளின் கல்விக்கான முயற்சியில் தடங்கல் தரலாம். அதனால் எதிர்பார்த்தபடி மருத்துவத் துறையில் இடம் கிடைக்கத் தாமதமாகலாம். தொழில் நிமித்த மாகவோ, தூரதேசத்தில் வேலைக்குப் போகும் வாய்ப்பின் காரணமாகவோ சில காலம் குடும்பத்தை விட்டுப் பிரிந்திருக்க வேண்டி வரலாம். மற்றபடி அரசு பணிய ாளரானால் பதவி உயர்வு ஒன்று வரலாம். தினத்தாள்க ளில் எழுதுபவர்கள் எச்சரிக்கை யுடன் எழுதுங்கள். இல்லையேல் எழுத்தில் குற்றங்கண்டு பிடிக்கப்பட்டு, அரசாங்கத்தால் எச்சரிக்கப்படலாம். மற்றபடி வயிற்றைக் கட்டுங்கள். இல்லையேல் மருத்துவருக்கும் பணம் கட்ட வேண்டி வரும். தக்ஷிணா மூர்த்தியை நினைத்தால் மேலும் நன்மைகள் பெறலாம்.

## மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திரு வோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

சூரியனும், புதனும், சுக்கிரனும் உதவு வார்கள். இராசிநாதனுக்குக் குருவின் பார்வை இருப்பதால், புத்திரர்களின் கல்வி விஷயத்தில் வெற்றி கிடைக்கும். எனினும் தசாபுக்திகள் சரியில்லாதவர்களுக்கு ஐந்தில் உள்ள செவ்வாய் புத்திரர்களின் மேல் படிப்பு விஷயத்தில் பிரச்சினைகளை உருவாக்கலாம். எனவே, ஸ்ரீமத்பாம்பன் சுவாமிகளின் ஷண்முகக் கவசத்தையோ அல்லது நக்கீரர் அருளிய திருமுருகாற்றுப் படையையோ சம்பந்தப்பட்ட குழந்தைகளைப் பொருளு ணர்ந்து மனம் விட்டுப் படிக்கச் சொல் லுங்கள். மற்றபடி சுபகாரியம் ஒன்று தடை யின்றி நடக்கும். மாதத்தின் பிற்பகுதியில் கதிரவனின் சஞ்சாரம் கண்களுக்குச் சிறு தொல்லை தரலாம். கேதுவால் தாயாருக்கோ,

அல்லது தாய் வழி உறவினர்க்கோ உடல்நலம் பாதிக்கப்படலாம். குறிப்பாக ஆகார விஷயத்தில் கட்டுப்பாடு தேவை. எதிர்பார்த்த இடத்திற்கு மாற்றம் வரலாம். குற்றமற்ற நிலையில் பதவியிறக்கம் செய்யப்பட்டவர்கள் நிரபராதிகள் என நிரூபிக்கப்பட்டு மீண்டும் உயர் பதவியைப் பெற புதன் அருளுவார். எனவே அப்படிப்பட்டவர்கள் இந்த மாதத்தில் சுதர்ஸன வேள்வியின் மூலம் சக்கரத் தாழ்வாரின் அருளால் இழந்ததைப் பெறுவீர்கள். குறைந்தபட்சம் ஸ்ரீசுதர்ஸன மந்திரத்தையாவது பக்தியுடன் உச்சரியுங்கள். வெற்றி கிடைக்கும்.

## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

சுக்கிரன் ஒரு பெண்ணின் மூலம் குடும்பத்து அமைதியை இழக்கச் செய்யலாம். பக்தியுடன் ஆராதியுங்கள். அல்லது உங்கள் குல தெய்வத்திற்குரிய பூசனையைச் செய்யுங்கள். குறிப்பாக நீங்கள் இறித்துவர்களானால் அருள்மிகு சகாயமாதாவை மனம் திறந்து வேண்டுங்கள். இராசியில் உள்ள சனீஸ்வரனுக்கு குருவின் பார்வை இருப்பதால் விபரீதமாக ஒன்றும் நடக்காது. தாயாரின் உடல்நிலை பாதிக்கப்பட அங்காரகன் காரணமாகலாம். எனவே கந்தர் சஷ்டிக் கவசம் பாராயணம் செய்யச் சொல்லுங்கள். மூன்றில் உள்ள கேதுவால், முருகனது அருள் கிடைக்கும். நினைத்தது நடக்கும். பணிபுரியும் பெண்களுக்குப் பதவி உயர்வு வரும். இது வரை இருந்த நோய் ஒன்று நீங்கும். வெளிநாட்டிலிருந்து நல்ல செய்திகள் எதிர்பார்த்தபடி வரும். அதனால் குடும்பத்தில் சுபிட்சம் நிலவும். அதே சமயம் கணநாதனை மறந்து விடாதீர்கள். பணம் வரும் வாய்ப்பு வந்துள்ளது. எனவே அதை எப்படிச் சிக்கனமாகச் செலவழிக்க வேண்டுமோ அப்படிச் செய்வது நல்லது. எப்போதுமே வரும் எனத் தாராளமாக இருந்தீர்களானால் பிறகு ஏராளமான துன்பத்திற்கு ஆளாக வேண்டி வரும். கோட்சாரப் பலன் என்பது நிலையானதல்ல. அது மாறிக் கொண்டே இருக்கும். வந்த பணம் போய் விட்டது எனில் மனம் நொந்துதானே ஆக வேண்டும்! மற்றபடி கலைத் துறையினர் சற்று எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. மாதத்தின் பிற்பகுதியில் சூரியனும் உதவுவார்.

## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

இந்த இராசியில் பிறந்து, கன்னியை இலக்கணமாகக் கொண்டவர்களுக்கு மாதத்தின் பிற்பகுதியில் கிரகமாலிகா யோகம் எனும் இராஜயோகம் ஏற்படும். எனவே அப்போது நீங்கள் தொடங்கும் எந்தச் செயலிலும் வெற்றி உண்டு. மகரத்திலிருந்து விருச்சிகம் வரை எல்லா வீடுகளிலும் கிரகங்கள் இருப்பதைக் காணலாம். மற்றபடி முருகனது அருள் உண்டு. குருவின் பார்வை சனி, கேது, புதனுக்கும் மாதத்தின் பிற்பகுதியில் மட்டும் சூரியனுக்கும் உண்டு. பிற்பகுதியில் சூரியன் ஆறில் இருந்து ஆரோக்கியத்திற்கும், தனலாபத்திற்கும், கீர்த்திக்கும் உத்திரவாதம் அளிக்கிறார். எனவே தொழில் முன்னேற்றம், நடிப்பில் ஆற்றல், எழுதும் எழுத்தில் ஏற்றமிகு கற்பனை என பலவிதத்தில் பல துறைகளில் உள்ளவர்களுக்கு நல்லதொரு சூழ்நிலை உண்டு. கோட்சாரத்திற்கு ஏற்ப பலன் கூறப்பட்டாலும் தசாபுக்திகளுக்கு ஏற்ப பலன்கள் மாறலாம். 1-இல் சனி விரயத்தில் இருப்பதால் சுலபமாக முடிக்க வேண்டியதற்குக் கூட பணத்தை விரயமாக்க வேண்டிய நிலை. உங்கள் குழந்தைகளின் மேற்படிப்பு விஷயத்தில் எதிர்பார்த்தது கைகூடும். இந்த இராசி மாணவிகளுக்கும், மாணவர்களுக்கும் கூட இது பொருந்தும். நல்ல இடம் கிடைக்க ஆலங்குடி அருள்மிகு தக்ஷிணாமூர்த்தியை வேண்டினாலே போதுமே!

## சனியினால் சாதகமா? பாதகமா?

வரகவி பாரதியார் "வேதம் என்றும் வாழ்கவென்று கொட்டு முரசே" என அவற்றின் பெருமையை உலகெங்கும் பறைசாற்றும்படிக் கூறுகிறார் என்றால் அதற்குக் காரணம் உலக வாழ்விற்குத் தேவையான அனைத்தும் அவ்வேதங்களில் அடங்கியுள்ளன என்பதேயாகும். அத்தகைய வேதத்தின் ஒரு அங்கமாக விளங்குவது ஜோதிடம். நாம் பிறக்கும் போது

ஆட்டுக்கல்லில் அல்லது கிரைண்டரில் அரிசி சிக்காமல் அரைக்க ஒருகை உளுத்தம்பருப்பை அரிசியுடன் சேர்த்து அரைத்தால் அரிசி அரைக்க சுலபமாகவும் இருக்கும். மாவும் சீக்கிரம் வெண்ணெய் போல் மசியும்.

– வசந்தி ஆனந்த்



அண்டவெளியில் நவநாயகர்கள் எந்தெந்த நக்ஷத்திரக் கால்களில் நிற்கிறார்களோ அதைக் கொண்டு அமைக்கப்படுவதே நமது ஜென்ம ஜாதகமாகும். அதன் அடிப்படையில் தான் நமது வாழ்வில் இன்பமும், துன்பமும், நோயுடையும் பதவியும், மக்கட்பேறும் மற்ற செல்வ, குணநலன்களும் அமைகின்றன எனலாம். அப்படிப்பட்ட ஜாதகத்தை, எவர் ஒருவர் கோள்களின் செயலாற்றல்களை நன்கு அறிந்து கூறுவாரோ அப்படிப்பட்டவரிடம் கொடுத்து, ஆராய்ந்து நமக்குப் பலன் கூறும்படி கூறுகிறோம். அப்படி கோள்களை நன்கு ஆராய்ந்து, அவற்றின் உச்ச, நீச்ச, ஆட்சித் தன்மை, பார்வை இவைகளைச் சோதித்துச் சரியான முறையில் பலன் கூறுபவர்களையே சோதிடர் என்பர். வடமொழியில் தெய்வக்ஞன் என்பர். இது போலவே நமது கையில் உள்ள ரேகைகள் மேடுகள் இவைகளைக் கொண்டும் பலன்கூறுவது கைரேகைக் கலையாகும். ஜாதகக் கட்டத்தில் உள்ளது போலவே நமது உள்ளங்கையிலும் ஏழு கிரகங்களுக்கும் மேடுகளை ஒதுக்கி, அத்துடன் உள்ளங்கையில் உள்ள ரேகைகளையும் அக்கிரகங்களின் பெயராலேயே அழைக்கிறார்கள். ஜாதகம், கைரேகைக் கலை இரண்டுமே நமது வாழ்வில் நடக்கும் இன்பதுன்பங்களுக்குரிய காரண காரியங்களை ஆராய உதவுவதுடன் அத் துன்பங்களிலிருந்து விடுபட கிரகங்களைத் திருப்தி செய்வதற்குரிய பரிகாரங்கள் பலவற்றை எடுத்துக் கூற உதவுகின்றன.

ஒருவரின் ஜாதகத்தில் சனீஸ்வரன் மேஷத்திலிருந்து, அவருடைய தசை நடக்கும் போது சில துன்பங்கள் ஏற்படலாம். அது போலவே உள்ளங்கையில் சனீஸ்வரமேட்டில் ஒரு நக்ஷத்திரக் குறி (s) இருந்ததென்றால், அவருக்குச் சனீஸ்வரன் சாதகமான சூழ்நிலையில் இல்லை என்பதைக் கூற முடியும். அதே சமயம் ராசியில் சனி நீச்சம் பெற்று அம்சத்தில் உச்சமாக துலாத்தில் நின்றால், அப்போது சனீஸ்வரனால் ஏற்படுகின்ற பலன் நல்ல நிலையிலேயே அமையும். உள்ளங்கையில் விதிரேகை எனப்படும் சனி ரேகை கங்கண ரேகையிலிருந்து, சனிமேடு வரை நன்கு எந்தவித குறியுமின்றி சென்றிருந்தால் (x-y). அவருக்குச் சனி சாதகமான நிலையிலே உள்ளார் என்றும், ஆனால் அந் நக்ஷத்திரக்குறி காரணமாக அவரது தலையில் சிறு வயதில் அடிபடும் வாய்ப்பைத் தந்திருக்கும் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். சனிமேட்டில் அந்த நக்ஷத்திரக் குறி இருக்கும் இடத்தைக் கொண்டு காலம் நிர்ணயிக்க வேண்டும். ஜாதகத்திலும் சரி, உள்ளங்கையிலும் சரி சனியின் அமைப்பு சரியாக அமையவில்லை என்றால் அதனால் ஒருவரது ஆயுளின் தன்மை, சிறைவாசம், தொழிலில் தோல்வி, அடிபடுதல், வறுமையால் வாடுதல் என ஏதேனும் ஒரு விதத்தில் துன்பப்பட வேண்டி வரும். அது சமயம் சோதிடர்களை அணுகி, சோதிட ரீதியாகச் சனிக் கிரகத்துக்குரிய ப்ரீதி அல்லது பரிகாரம் என்ன என்பதை அறிந்து அதன்படி செய்தால் அத்துன்பத்திலிருந்து விடுபடலாம்.

அப்படிப்பட்ட பரிகாரங்களை சோதிடத்தில் மணி, மந்திரம், மருந்து என மூன்றாகப் பிரித்துக் கூறியுள்ளனர். மணி என்ற நிலையில் சனீஸ்வரனுக்கு நீலக்கல் வைத்த வெள்ளி, தங்க மோதிரங்கள், பின்பக்கம் திறந்திருக்கும்படி கட்டி அணியலாம். உடல் நிலை பாதிப்பு எனில் மருத்துவரை அணுகி மருந்து வகை மூலம் குணமடையலாம். மந்திரம் எனும் முறையில் சனிக்குரிய வேள்வியை, அதாவது ஹோமத்தைச் செய்யலாம். பொதுவாக கணபதி, நவக்கிரக ஹோமம் என்பன வற்றை எல்லாக் கிரகங்களுக்கும் பொதுவாகவே செய்து பரிகாரம் பெறலாம் என்றாலும் சில ஹோமம் எனும் வேள்வி சனீஸ்வரனுக்கு மட்டுமே பிரதானமாகச் செய்யப்படுவதாகும். சில மந்திரங்களைச் செய்வதன் மூலமும் துன்பத்திலிருந்து விடுபடலாம். உள்ளங்கையில் உள்ள ரேகைகளில் 1. ஆயுள் ரேகை, 2. விதிரேகை, 3. இருதய ரேகை, 4. புத்திரேகை, 5. புதன் ரேகை, 6. சூரிய ரேகை, 7. செவ்வாய் ரேகை முதலானவை நன்கு அமைந்திருந்தால் தீர்க்காயுசுடனும், திடமாகவும், செல்வச் செழிப்புடனும் வாழலாம். அவை சம்பந்தப்பட்ட மேடுகளில் தீய குறியிருப்பின் அவற்றினால் வாழ்வில் ஏற்ற இறக்கமும் ஏற்படலாம். அத்தகைய நிலையில் மேற்கண்ட மூன்று முறைகளில் பரிகாரங்களைச் செய்து பலன் பெறலாம். எனினும் சனீஸ்வரன் ஜாதகத்திலும் சரி அல்லது உள்ளங்கையிலும் சரி சாதகமாக அமைந்து விட்டால், கிடைக்கும் நன்மைகளுக்கு அளவே இல்லை. அந்த அளவிற்கு சனி பகவான் உதவுவார். இதற்கு ஜாதக அமைப்பிலும், உள்ளங்கையிலும் அவரது இடம் உயர்ந்த நிலையில் அமைந்திருக்க வேண்டும்.

- ஜெயலட்சுமி கிருஷ்ணன்

# திருமண மலர்

## மணமகள் தேவை

* Vadama, Srivatsam, M.Com., Avittam, Jr. A/O, shriram, 29, 2000 seeks employed qualified bride sub-sects no bar. Apply with horoscope & Bio-data. Box No. 11088

* Horoscope and Bio-data invited from Non-Shatamarshna Vadakalai Central Govt/Bank/LIC employed transferable bride 23/160/good looking/ domestically trained for groom Avittam/25/163/4000/ Nasik based Firm. Box No. 11089

* Vadama /Uthiradam/Sandilya/B.Com/174/25½/2200/ S. Railway/Madras/transferable/owning house/savings/ seeks State or Central employed/trained teacher bride +2 and above. Any Brahmin subsects acceptable, no dowry. Box No. 11090

• சற்றே கால் ஊனமுள்ள 30, 5.2", 2500, மத்திய அரசு பணியில் உள்ள காஸ்யப கவ்ணட ஸ்மார்த்தா ஐயர் வகுப்பைச் சார்ந்த மணமக னுக்கு பரந்த மனப்பான்மையுள்ள தமிழ் ஐயர் வகுப்பைச் சார்ந்த படித்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11091

• வன்னியர் குலத்தைச் சேர்ந்த 30 வயது நிரம்பிய பம்பாயில் செட்டிலாகி சொந்த பிஸினஸ் செய்யும் இஞ்சினியருக்கு நல்ல அழ கான, பட்டப் படிப்பு முடித்த, 26 வயதிற்குட் பட்ட நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 11092

• சைவ வேளாளர், சொந்த வீடு, சொத்து வசதி யுள்ள 31, 165, 5000, MBA, Computer Professional Manager, Public Ltd Company-ல் வேலையிலிருக்கும் மணமகனுக்கு நல்ல குணமுள்ள, வசதியுள்ள மணமகள் தேவை. பிள்ளை/ முதலியார் சம்மதம். பெட்டி எண் : 11093

* Tamil Maruthuvar parents seeks alliance for son 27, 5.7", 5000/- Diploma Electronics Engineer. Own Electronic Business from fair educated girl , subsect no bar. Write to Box No. 11094

• ஐயர் வடமாள், கௌசிக கோத்திரம், 28/2500 தஞ்சாவூர் தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் பையனுக்கு வரன் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண் : 11095

• ஐயங்கார், வடகலை, பாரத்வாஜ கோத்திரம், கேட்டை, பி.எஸ்ஸி., நல்ல வசதியுள்ள சொந்தத் தொழில் மாதம் ரூ. 5000க்கு மேல் வருமானம். வயது 37, விவாகரத்தானவர். குழந்தைகள் இல்லை. நல்ல அழகான குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11096

* Palghat Iyer Vadama, Srivatsa, Pusam, 27, 160 cms, 5000, M.Com., Nationalised Insurance Company Officer seeks alliance from unemployed domestically well trained graduate girls. Tamil Iyers, sub-sects no bar. Send horoscope with family details. Box No. 11097

• மத்திய அரசு, டெல்லியில் Assistant Programmer பதவியில் ரூபாய் 4600/- மாத வரு வாயில் பணிபுரியும் (பெர்மனென்ட்) 28 வயது நிரம்பிய 163 செ.மீ. உயரமுள்ள M.Sc., PGDCA, DSA படித்த நாயுடு இனத்தைச் சேர்ந்த பைய னுக்கு, அதே இனத்தைச் சேர்ந்த நல்ல குடும்பத் தைச் சார்ந்த படித்த, வேலை பார்க்கும் அழ கிய மணமகள் தேவை. பெட்டி எண் : 11098

• வடமாள், பூரம், கௌசிக கோத்திரம், 32, 5.7", 7000/- சொந்தத்தில் சிறுதொழில் புரியும் வர னுக்கு, ஆயில்யம், கேட்டை, மூலம் நீங்கலாக DOB 1-1-1967-க்குப் பிறகு நல்ல, நடுத்தர வகுப்பு, குடும்பப்பாங்கான பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். உடன் திருமணம் செய்ய விருப்பம் உள்ளவர்கள் ஜாதகத்துடன் தொடர்பு கொள்ள வும். பெட்டி எண் : 11099

* Required suitable bride, employed, any caste, religion, vegetarian, for Agamudai Mudaliar, 30, 162 cms, 2000/- +2, apply to Box No. 11100

• திருச்சி சோழிய வேளாளர், DEEE, 28, 5'6", 3500/-தனியார் நிறுவனத்தில் சைட் இஞ்சினியர் ஆக பணிபுரியும் வசதியுள்ள ஒரே பையனுக்கு அதே இனத்தில் பட்டதாரி குடும்பப்பாங்கான பெண் தேவை. நட்சத்திரம் ரேவதி, ஜாதகம், குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11101

• நைத்ருபகாஸ்யப கோத்திரம், சுவாதி நட்சத்திரம், வடமாள், வயது 25, அஸிஸ்டெண்ட் ஷெஃப் புரோக்கராக மாதம் ரூ. 4000/- வரை சம்ப ளம் உள்ள பையனுக்கு நல்ல வரன் தேவை. பெட்டி எண் : 11102

• சௌராஷ்டிரா தந்தேஷி கோத்திரம், MBBS, PG Diploma Anaesthesiology 28/167 வரனுக்கு அதே இனத்தில் டாக்டர், இஞ்சினியர் மற்றும் பட்ட தாரியும், அழகான, சிவப்பு நிறமுள்ள நல்ல குடும்பத்தைச் சார்ந்த மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 11103

* Wanted alliance for Brahacharanam, Srivatsa, Swathi, 31, 166cm, Nationalised Bank Clerk, M.Com., C.A. I.I.B. PGDCA., salary Rs. 5500/- Sub-sect no bar, employed girl preferred, but not a must for well educated good looking girl. Box No. 11104

* Iyer Vadamal, Goundinya, Sadhyam 33, 172, 3500 B.Sc., Assistant TVS Suzuki, Hosur seeks employed girls in Bank, Insurance, State, Central Govt, reputed Private Industry, owns plots, contact with horoscope to Box No. 11105

* Brahacharanam, Bharadhwaja, Mrigaseerisham, 31, 5'4", employed in Sister concern of SPIC group Rs. 1650/- BA first class boy seeks employed bride only.

sub-sect no bar. Suddha Jadhagam. Reply with family details bio-data & horoscope to Box No. 11106

• குருக்கள், ஹஸ்த நட்சத்திரம், கௌசிக கோத்திரம், வசதியான தொழில் செய்யும் மணமகனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த, 28 வயது, படித்த, அழகான, குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11107

• ஐயர், வடமாள், 33, 170 செ.மீ., 5400, வசதியுள்ள மத்திய அரசு அலுவலர்க்கு (7ம் இடத்தில் செவ்வாய்) நல்ல ஆசாரமான குடும்பத்தைச் சேர்ந்த குடும்பப்பாங்கான மிக அழகுள்ள மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். உட்பிரிவுகள் சம்மதம். வரதட்சணை தேவையில்லை. பெட்டி எண் : 11109

* Wanted graduate good looking girl for Hindu Chettiar M.Com., 30, 175 Programmer in Private Company, good family background right hand polio mildly affected. Caste no bar. Send horoscope to Box No. 11110

• வடமாள், காஸ்யப கோத்திரம், பூரட்டாதி, 29 வயது, உயரம் 5'7", பி.எஸ்ஸி., ரூ. 2000/- தனியார் கம்ப்யூட்டர் நிறுவனம், படித்த வேலைக்குச் செல்லும் மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண் : 11111

• வடமாள், தஞ்சாவூர் ஜில்லா, ஆசாரமான வசதியான குடும்பம், பாரத்வாஜ கோத்திரம், ரோஹிணி நட்சத்திரம், பி.எஸ்ஸி., படித்த 31 வயது, 175 செ.மீ., மாதம் ரூ. 10,000/- சென்னையில் ஷேர் புரோக்கர், வியாபாரம் செய்யும் அழகான மணமகனுக்கு அழகான குடும்பப்பாங்கான பெண் தேவை. உட்பிரிவு இருக்கலாம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11112

• இந்து செங்குந்த வெள்ளாளர், DCE, B.E. AMIE, 29, 3300/- 168 அஸ்வினி, தமிழ்நாடு அரசு நிரந்தரப் பணியில் இருக்கும் நடுத்தர வகுப்பு மணமகனுக்கு மணமகள் தேவை. மணமகளின் பெற்றோர் முஸ்லீம், இந்து கலப்புமண தம்பதியினர். இந்துக்கள் மட்டுமே விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11113

• பாலக்காடு ஐயர், வடமாள் பாரத்வாஜ கோத்திரம், விசாகம் (B.A.) Doing M.A. (Final) 32, 175, 1700 தனியார் துறை வரனுக்கு ஏற்ற பெண் தேவை. பெட்டி எண் : 11114

* Telugu Niyogi Brahmin Boy 31, M.Sc., MLISC, Koundinya, Rohini, Central Government, employed seek alliance from well educated girls with decent family background. Apply with horoscope to Box No. 11115

• விஸ்வகர்மா, தமிழ், மத்திய அரசில் அதிகாரியாக பணிபுரியும் பையனுக்கு, வயது 30, உயரம் 162 செ.மீ., சம்பளம் 4000/- படித்த, அழகிய, குடும்பப்பாங்கான வரன் தேவை. நாகை, தஞ்சாவூர், திருச்சி மாவட்டங்களில் உள்ளவர்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 11116

* Parents of groom Iyer, Ashtasahasram, Srivatsa, fair, 34 years, 5.'6", M.Com., (C.A.), Rs. 4500/- Independent profession seek alliance from brides below 30, employed/unemployed, preferably knowing music. Subsect no bar. Box No. 11117

• ஆர்ய வைஸ்யா அரசு வங்கி ஆபீசர் வயது 36, உயரம் 5'7" மனைவி இறந்தவர், 3½ வயது மகளுடன் உள்ளவர், பண்புள்ள குடும்பத்தைச் சேர்ந்தவருக்கு படித்த லட்சணமுள்ள, குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண் : 11118

* Alliance invited for Vadakalai, Bharadhwajam Boy fair, well built, B.Com., 34, 165, 3500 reputed concern, defective right eye due to an accident at the age of 3. can do all duties as a normal person. Reply from broadminded girls with horoscope to Box No. 11119

* Sengunthar bridegroom 30, 159, 5000 B.Tech., (Textiles) working in a reputed mill at Coimbatore seeks educated employed/Business background bride. send bio-data and horoscope to Box No. 11120

• தமிழ் பிராமின், 31, பட்டதாரி, 2500 தனியார், சென்னை, 165 செ.மீ., மணமாகி சில மாதங்களில் மனவேற்றுமை காரணமாக பிரிந்த, நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த மணமகனுக்கு, அழகிய பிராமண பெண் தேவை. விவாகரத்து பெற்ற/ பெறாத, விதவைகள் எழுதவும். பெட்டி எண் : 11121

• ஐயங்கார், வடகலை, நைத்ருவ காஸ்யப கோத்திரம், கிருத்திகை, பி.எஸ்ஸி., 28, 160, 4000/ Medical Representative, Madars, No tour, no bad habits, அன்பும், பண்பும், கதை, கவிதை எழுதுவதில் ஆர்வமும் உள்ள இளைஞனுக்கு ஆழ்ந்த அன்பு செலுத்தக்கூடிய மனமும், நற்குணமும், இலக்கிய ஆர்வமும் உள்ள பட்டதாரி பெண் தேவை. பெட்டி எண் : 11122

• ஸ்ரீவத்ஸ கோத்திரம், தமிழ் ஐயர், பிரஹசரணம், அவிட்ட நட்சத்திரம், 36 வயது, எஸ்.எஸ்.எல்.சி., படித்து சொந்தமாக வியாபாரம் செய்யும் 5'7" அங்குல உயரமுள்ள பையனுக்கு நல்ல குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண் : 11123

• வடமாள், பாரத்வாஜ கோத்திரம், மகம், 1969, 157 செ.மீ., DME, திருச்சியில் தனியார் நிறுவனத்தில் ரூ 2500/- சம்பளம் பெறும் வரனுக்கு, வேலைக்குச் செல்லும் மணமகள் தேவை. ஜாதகத்துடன் அனுப்பவும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 11124

• காசியப, ஹஸ்தம், வாத்திமா 7-ல் செவ்வாய், குரு பார்வையால் தோஷமில்லை. 34, 168, 5500, பி.எஸ்ஸி., (CAIIB) Nationalised Bank Clerk வரனுக்கு பட்டப் படிப்பு படித்த வேலையிலுள்ள/வேலையில்லாத பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண் : 11125

* Tamil Iyer, Bharadwaja Gothram, Thiruvathirai 28/ 178 MASc., Electronic Engineer, settled in Canada with parents, vegetarian, Teetotaller, horoscope optional write to Box No. 11126





* Bride around 27 years +2 and above employed willing for employment for Tamil Hindu, 32 years, 175 cm, 3500/- reputed firm Madras Religion language no bar. Madras based preferred. Box No. 11127

* Vadamal, Kousigam, Thriuvathirai, 34, 165 cms, graduate, employed reputed firm Kanpur, 5000/- p.m. seeks graduate employed/unemployed girl. Subsects acceptable. Apply with horoscope to Box No. 11128.

• வடமாள் ஐயர், காஸ்யப கோத்திரம், பூராடம் நட்சத்திரம் 4-ம் பாதம், 29 வயது, எம்.ஏ., உயரம் 165 செ.மீ., சென்னை, தனியார் கம்பெனியில் சேல்ஸ் எக்ஸிகியூட்டிவ் ஆக பணிபுரியும், சம்பளம் ரூ. 2000/- உட்பிரிவு சம்மதம். வேலைக்குப் போகும்/போகாத மணமகள் தேவை. பெட்டி எண் : 11129

* Vadamal, Bharadwaja boy, Revathi, 28, 162 cms, B.Sc., Rs. 3000/- Public Ltd., Company in Baroda, wanted graduate girl, apply with horoscope to Box No. 11130

* Ashtasahasram, Smartha, Kausika, Uttarastar, graduate boy Central Government employed 27, 175, 4500/- seeks alliance from suitable graduate girl or same subsect correspond with horoscope to Box No. 11131

* Wanted Non-Bharadwaja graduate, preferably employed girl for Iyer Boy, Brahacharanam, Anusham 30, 5'6" Central Government employee, Delhi. Sub-sect no bar. Reply with horoscope, family details to Box No. 11132

* Suitable alliance invited for Vadagalai Iyengar groom Srivatsa, Sadhayam, B.Com., 40, 170, 4000/- Public Sector employed in Tamil Nadu. Sub-sect acceptable. Please send horoscope with family details. Box No. 11133

* Alliance for Brahacharanam Boy, Revathi, 36, 159 cms, B.Com., working with reputed Multinational Company, New Delhi, 5500/- same sect girl Govt, Bank, Public sector employed. Reply horoscope and family details to Box No. 11134

• வடமாள், ஐயர் 33, 170, 5400/- ஏழாம் இடத்தில் செவ்வாய். தற்பொழுது பம்பாயில் மத்திய அரசு அதிகாரியாக பணிபுரியும் நல்ல வசதியுள்ள மணமகனுக்கு ஆசாரமான குடும்பத்திலிருந்து 25 வயதுக்குக் குறைவான நல்ல அழகுள்ள, குடும்பப்பாங்கான மணமகள் தேவை. வரதட்சணை இல்லை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11135

* Alliance invited from suitable employed brides for Brahacharanam Koundinya Boy, BA, 26, 183, 3000/- Chitrai, employed Central Government, New Delhi. Subsect no bar. Horoscope details to Box No. 11136

* Kurumans 29, 167, Professional working in reputed PSE at Bombay invites alliance from well educated, working girls with good family background. send details and horoscope to Box No. 11139

* Alliance invited with horoscope from parents of girls below 25 years of Velanadu or Mulakanadu subsects, for Telugu Brahmin Velanadu boy aged 31, B.Com., Accountant in a Private Company. Rs. 3200/- Krithigai, Kasyapa Gothram. Box No. 11160

• வயது 27, உயரம் 5.7", பி.ஏ. பட்டதாரி, ரியல் எஸ்டேட் வியாபாரம் செய்யும் தொழிலதிபரின் ஒரே வாரிசான, இந்து ஆதி திராவிட வகுப்பைச் சார்ந்த நல்ல அழகும், வசதியும் உடைய வரனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல வசதியும், அழகும், குணமும், பட்டம் படித்த பெண் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 19991

• ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடகலை அய்யங்கார், மூலம் (4-ம் பாதம்) பி.ஏ., கம்ப்யூட்டர் தேர்ச்சி பெற்று சென்னையில் கப்பல் கம்பெனியில் கம்ப்யூட்டர் ப்ரோகிராமராக பணிபுரியும் 36, 2000, 164 உள்ள வரனுக்கு நல்ல வேலையிலுள்ள மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 19992

• ஆத்ரேய கோத்திரம், தென்கலை பூராடம், 5'8", 2500, 34 தந்தி அலுவலகத்தில் வேலை பார்க்கும் பையனுக்கு அரசு, நல்ல கம்பெனியில் பணிபுரியும் பெண் தேவை. பெட்டி எண் : 19993

* Alliance invited from Non-Bharadwaja girl, employed with transferable job for Brahacharnam Iyer Boy, 29 years, Uthiradam, employed in State undertaking, Bhopal DEE PGDCA doing MBA 167/5500 Box No. 19994

• 19-12-56-ல் பிறந்த வடகலை ஐயங்கார், புனர்பூச நட்சத்திரம், கௌண்டின்ய கோத்திரம், பி.காம்., படித்து ஓஎனில் வேலை பார்க்கும் பையனுக்கு 28 லிருந்து 30 வயதுக்குட்பட்ட பட்டப் படிப்பு படித்த ஐயங்கார் வடகலை/தென்கலை பெண் தேவை. பெட்டி எண் : 19995

* Vadama Sreevatsa 33, 175, Higher secondary Typing, Shorthand, Computer course passed employed Private concern salary plus other income 3000. good family property good looking. Madras employed girl preferred. subsect no bar. Box No. 19996

* Wanted fair, slim, minimum 163, professional, PG very beautiful cultured girl for fair, very handsome Iyer, Vadama, Kaushika, Krithikai, 31, 180, BE, MBA, STATES employed boy. Contact with horoscope, bio-data to K. Natarajan, 88 AG Colony, New Bell Road, Mathikere Post, Bangalore - 560 054.

• ஐயர், அஷ்டசகஸ்ரம், ஆத்ரேயம், ஆயில்யம் முதல் பாதம், 5'.5", 32, 2000, டீ.வி. நிறுவனத்தில் சூபர்வைசர், பி.யு.சி. மற்றும் டிப்ளோமா வேலையில் உள்ள அல்லது வேலைக்குச் செல்ல தகுதியான பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. ஆர். சாவித்திரி, 79/ஏ, பெருமாள் கோவில் தெரு, சென்னை - 600 015.

• ஐயர், நைத்ருவ காஸ்யப கோத்திரம், கேட்டை நட்சத்திரம், ரூ. 2000/- சம்பாதிக்கக்கூடிய 27 வயது Machinist வேலை செய்யக்கூடிய 5 அடி 6 அங்குலமுள்ள மணமகனுக்கு பிராமண வகுப்பைச் சேர்ந்த மணமகள் தேவை. முகவரி : திரு. திருஞானமூர்த்தி, 7, கிழக்கு சித்ரகுளத் தெரு, மயிலை, சென்னை - 600 004.

* Wanted employed match for handsome Telugu Brahmin boy, Govt. Servant, Delhi, Ayilyam 32, 3500,

175. Accomodation, phone. Contact : Smt. S. Sarada, 57, Pocket 8, Sector 8, Rohini, Delhi - 110 085.

• பார்க்கவகுல நந்தம உடையார், பி.எ., 27, 175, சென்னையில் சிம்ஸன் குரூப்பில் பணிபுரியும் நல்ல தோற்றமுள்ள மணமகனுக்கு, அழகான, குடும்பப்பாங்கான, டிகிரி படித்த நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. முகவரி : ஏ. சிவகுமார், 6, முதல் தெரு, பெரம்பூர் நெடுஞ் சாலை, சென்னை - 600 012.

* Decently employed girl for Pune employed Tamil, Iyer boy, Kaundinya Gothram, Brahacharanam, Pooradam, Diploma, 28, 165, 7000. Sub-sect acceptable. Avoid Moolam, Aayilyam & Visakam stars. Reply with horoscope to M.D. Nagarajan, C/o Vangal Cafe, Vangal - 639 116. Karur (TK) Trichy Dt. Tamil Nadu.

• தென்கலை ஐயங்கார், காச்யப கோத்திரம், 34, 170, 4500 மத்திய அரசாங்கத்தில் (BARC) பணிபுரியும் பரணி, மணமகனுக்கு, வேலைக்குச் செல்லும் தென்கலை பெண் தேவை. தொடர்பு கொள்க. பட்டம்மாள், 12, சீனிவாச ரெட்டி தெரு, தி. நகர், சென்னை - 17. போன் : 402440.

* Vadama, Koundinya, Sathayam, 32, handsome doing business, Rs. 3000/- boy seeks good looking educated unemployed/employed girl. Contact : S. Rajaraman, No. 5 Jambu Apartments, Single Street, Thiruvanaikovil, Tiruchirapalli - 620 005.

* Athreya Gothram, Brahacharanam, Iyer, 34 years, SSLC, Monthly income Rs. 1000/- wants bride, employed, ready to go for employment, simple early marriage. Contact : S. Ramakrishnan, 98 LIG Colony, Mahaligapuram, Pollachi - 642 002.

---

திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்யக் கட்டணம் ரூ. 75/- தொகையை 'மங்கையர் மலர்' பெயருக்குச் சென்னையில் மாற்றலாகக் கூடிய MICR டிமாண்ட் டிராப்டாக மட்டுமே அனுப்ப வேண்டும். மணியார்டரோ, போஸ்டல் ஆர்டரோ ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஒரு விளம்பரத்தில் ஒரு வரனுக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்பவர்களின் விலாசங்களைக் கொடுப்பதற்கில்லை. விளம்பரங்களுக்குப் பதில் அனுப்புபவர்கள், 'விளம்பரதாரர், பெட்டி எண்: C/o. மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097 என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். தனிப்பட்ட எந்தக் கடிதப் போக்கு வரத்தும் கிடையாது.

• *வடமாள், கௌசிகம், பரணி, எம்.ஏ., 29, 5.8',* ABT Ltd, *கோயம்புத்தூரில் வேலை பார்க்கும் பையனுக்கு படித்த வேலை பார்க்கும் பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். முகவரி* : R. Sankara Iyer, 2A, Pillayar Koil St, S.S. Colony, Madurai - 16.

* Mudaliyar Bangalore Public Sector employee as Draughtman Star Ashwini 25, 5'.7", 3500/- seeking fair graudate girl below 22 years. Please apply suitable only. Contact : M. Namasivayan, No. 326, Krishnarajapuram Extn. Bangalore - 560 036.

• *சௌராஷ்டிரா குலம், ஜனக மகரிஷி, ரோகிணி,* B.Sc., PGDSM, 28, 160, *டாடா கம்பெனியில் வேலை பார்க்கும் மணமகனுக்கு அதே குலத்தைச் சேர்ந்த பட்டப் படிப்பு படித்து வேலைக்குப் போகும்/போகாத குடும்பப்பாங்கான அழகிய மணமகள் தேவை. பெண்ணின் ஜாதகத்துடன் பெண், மற்றும் குடும்பத்தினரின் முழு விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். முகவரி* : V. Thulasi Raman, B.E., Chief Engineer, TNEB, A/3, Power Appartments, 47, Kodambakkam High Road, Madras - 600 017.

* Brahacharanam Iyer, fair, smart boy, Gargya, Mirigaseerisham, 30, 5500, 160, DME (Hons) AMIIM employed. SAIL, Bhilai steel plant (M.P.) seeks fair, cultured, graduate girl around 25 preferably north based. Apply with full details. Contact : R. Sridharan, Block No. 210/F Risali Sector, Civic Centre, Bhilai. Pin - 490 006.

* Tanjore Vadama Non-Kousika girl, beautiful tall, slim, well educated proficient in Music, dance for Mechanical Engineer, 24½ without encumberance employed in established Company at Pune. Send horoscope biodata. Contact : Mrs. Venkateswaran, A/3, Rams Maruti, 111, Muthalamman Koil St, Madras - 600 033.



* Wanted graduate smart girl, 24-28 for Thanjavur, Vadamal, Pooradam, graduate, Bharadwajam, 5'.4", 32, 2200/- Assistant Elgi Equipments Ltd, Bhopal, decent early marriage. Contact : Mr. Venkataraman, G. 25, Kancheepuram High Road, Chengalpattu - 603 002.

* Alliance invited from graduate, good-looking, domestically trained girl for Delhi based Palghat Iyer boy, Kaundinya Gothram, Uthrashada, 29, B.Sc., 6'.1", working as Sr. Sales Representative in qualigens (Glaxo) Rs. 8000/- Reply with horoscope, family background to T.S. Ananthakrishnan, EA-14, SFS Flats, Hari Nagar, New Delhi - 110 064.

• *தமிழ் ஐயர், பிரஹசரணம், கௌண்டின்யம், பூர்வீக சொத்துள்ள எம்.ஃ., 36, 180 செ.மீ., 4000, பூரம் தமிழ்நாடு மாநில அரசு என்ஜினியருக்கும், இவன் சகோதரன் பி.எ.எல்.எல்.பி., 34, 175 செ.மீ., 4000/- மூலம், வக்கீல் தொழில்புரியும் பையனுக்கும் நன்கு படித்த வேலையில் உள்ள/இல்லாத 32 வயதுக்குட்பட்ட வசதியான குடும்பத்து பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். முகவரி : டி. எம். சுப்ரமணியன். தெ. 4, சந்நதி தெரு, திருத்துறைப் பூண்டி., தஞ்சை ஜில்லா - 614 713.*

• *தேவாங்கர் தெலுங்கு 26, 170, பி.ஃ. (கம்ப்யூட்டர்) படித்து சென்னையில் வேலையில் உள்ள மணமகனுக்கு அழகான பி.ஃ., எம்.பி.பி.எஸ்., படித்த இதே இனத்தில் மணப்பெண் தேவை. முகவரி : டாக்டர். எஸ். நாகராஜன், சங்கரன் தெரு, நாமக்கல், சேலம், போன் : 21334.*

* Alliance invited for Boy Brahacharanam, Shadamarshanam, Uttarattadi, 31, 170, 12th Std, Government Job, Having Leucoderma write with horoscope to K. Narayanan, 81/8, Railway Colony, Andheri (East), Bombay - 400 069.

* Alliance invited for Boy, Brahacharanam, Shadamarshnan, Pooradam, 37, 175, BA, PVT Job, salary 5000/- pm, divorcee without encumberance write with horoscope to K. Narayanan, 81/8, Railway Colony, Andheri (East), Bombay - 400 069.

• *தமிழ் பிராமின் வடமாள் சண்டிகரில் ஸொார்க் ஆக பிரைவேட் கம்பெனியில் வேலை பார்க்கும் பையனுக்கு (வயது 30) மாத வருமானம் ரூ. 1500/எஸ்.எஸ்.எல்.ஸி.,/+2 படித்து ஷார்ட் ஹாண்ட், டைப் தெரிந்து வேலைக்கு போகக்கூடிய பெண் தேவை. தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:* N. Suresh, House No. 1132, Phase III B 2, Mohali - 160 509. Near Chandigarh.

• தென்கலை ஐயங்கார், சாண்டில்ய கோத்திரம், மிருகசீரிஷம் 1-ஆம் பாதம், சென்னையில் தனியார் நிறுவனம் ஒன்றில் நிரந்தர வேலை ரூ. 2500/- வருமானம் பெறும் 30 வயதுள்ள பையனுக்கு அழகுள்ள நல்ல வேலையிலுள்ள மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். முகவரி : Sri. K. Ranganathan, 9/3 Buddar Street Lane, East Tambaram, Madras - 600 059.

* Alliance invited from good looking graduate girls for Tamil, Vadama, Sirvatsa, Mirugaseer sham, 30, 170 Non-commissioned Officer, IAF, Agra. Reply with horoscope V. Srinivasan, 8/11845 (1st Floor), Sat Nagar, Karolbagh, New Delhi - 110 005.

• உறவினர், வயது 44, நடுத்தர வசதி வியாபாரம், ஊனமுற்ற, காது கேட்காத, பெண்கள் மட்டும் வெளிநாட்டில் இருப்பினும் எழுதுக. முகவரி : S. Thiraviam, Jesi Press Compound, Ramanputhur Jn. Nagercoil - 629 002.

* Arcot Mudaliar Boy, 26 years, Star Aswini, M.Com., Fair, height 170 cm, employed in a Private Scheduled Bank at Ahmedabad. decent marriage expected. should be a good housewife. Contact : A.B.K. Pathy, 77, Bhuvaneswari Street, Madipakkam, Madras - 600 091.

* Alliance invited for Tamil Iyer Brahmin boy, Punarpusam, Kaasyapa Gothram, M.E., 29, 162 cm, 4000/- working as Assistant Executive Engineer in A.P. State Government, wanted graduate, good looking girl from good family. Reply with horoscope and family details to K.S. Mani, 2/180, Balaji Nagar, Cuddapah - 516 003 (AP).

• தென்கலை ஐயங்கார், அனுஷம், ஸ்ரீவத்ஸ கோத்திரம், 30 வயது, ரூ. 2200/- வருமானமுள்ள பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தில் RURAL WELFARE OFFICER ஆக பணிபுரியும் வரனுக்கு அதே பிரிவில் மாற்றத்தக்க வேலையிலுள்ள பெண் தேவை. தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி : எஸ். மைதிலி, 11, மூன்றாவது அக்ரஹாரம், சேலம் - 636 001.

* Engineer, salary 6500/- working in a Private Company settled in Bangalore. Vadagalai, Thengalai no bar. Educated smart looking girl. Above 22 years employed/ unemployed preferred. write to A. Rajagopal, 2136, 16th 'B' Main Road, H.A.L. II Stage, Bangalore - 560 008.

• வாணிய செட்டியார், டி.எம்.ஈ., 26 வயது, ரூ. 3000/- Maintenance Supervisor, படித்த மணமகள் தேவை. தொடர்பு கொள்க : ஏ. ஜெயசிம்மன், 303, அண்ணா சாலை, செங்கல்பட்டு, சென்னை எம்.ஜி.ஆர். மாவட்டம் - 603 002.

* Graduate employed girls for Boy 31, 167, 4600, Central Govt, Saiva Chettiar, Brahmins, Saiva Pillai, Mudaliars welcome. Apply with horoscope, details to A. Venkatachalam, 4895/133/7, C.G.S. Quarters, Antop Hill, Bombay - 400 037.

* Alliance for Vadagalai Iyengar Goundinya, Utirattathi, practising Advocate & Rotary Madras, widower without encumberance, educated employed girls contact Sri. K. R. Govindarajan, 7/5 Peters Colony, Royapettah, Madras - 600 014. Phone : 8523723.

## மணமகன் தேவை

* Vadamal, Bharadhwaja Gothram, Hastham 24/153 cms, B.Com., ICWA, B.A. Hindi படித்துள்ள, அரசாங்க வங்கியில் வேலை செய்யும் ஒரே பெண்ணிற்கு அதே பிரிவில், CA, MBA, ICWA, Professionally qualified, Bank Officer போன்ற 30 வயதிற்குள் நல்ல வரன் தேவை. பெட்டி எண் : 21035

• 24 மனை தெலுங்கு செட்டியார், 24 வயது, 5'4", எம்.எஸ்ஸி., நல்ல அழகுள்ள, வசதியான பெண்ணுக்கு அதே இனத்தைச் சேர்ந்த டாக்டர், இஞ்ஜினியர், சென்ட்ரல், ஸ்டேட் உயர் அதிகாரி, வங்கி அதிகாரி போன்ற பணியிலிருக்கும் 30 வயதுக்குள் வரன் தேவை. பெட்டி எண் : 21036

* Alliance for Konkan, fair, smart GS Brahmin girl (Gowda Saraswat) professionally qualified, Executive 26, 159, from equally qualified and well-employed Engineers, Officers of the same community. Box No. 21037

• தந்தை பிராமின், தாய் நாயுடு தம்பதிகளுக்கு பிறந்த நல்ல சிவப்பு நிறமுடைய 26 வயது நிரம்பிய நல்ல வசதியான, மெட்ரிகுலேஷன் படித்த, குடும்பப்பாங்கான, விவாகரத்தான பெண்ணுக்கு நல்ல வருமானம் உள்ள சென்னையைச் சேர்ந்த 34 வயதுக்குட்பட்ட வரன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 21038

• ஸ்ரீரங்கம் சாத்தாத ஸ்ரீவைஷ்ணவா பெண்ணுக்கு அதே இனத்தைச் சேர்ந்த நல்ல மணமகன், வயது 34 முதல் 38க்குள் தேவை. பெட்டி எண் : 21041

• வன்னியர் குலத்தைச் சேர்ந்த 24 வயது நிரம்பிய சிகப்பு, பட்டப் படிப்பு முடித்து ஆசிரியை வேலை பார்க்கும் அழகான பெண்ணிற்கு அதே இனத்தைச் சேர்ந்த படித்து, வேலையில் உள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 21042

* Wanted groom for Vadagalai, Hastham, Koundinya, only daughter, SSLC, 25, 5'1", domestically trained, fair complexion, tailoring known. Box No. 21043

* Alliance invited from well settled boys for Madhwa girl, Pooram, 28, 150, B.Com., Passed English & Tamil typewriting, Upamanya, Vasista Gothram, fair complexion. Write to Box No. 21044

• செங்குந்த முதலியார், 23 வயது, மாநிறம், பி.காம்., மற்றும் கம்ப்யூட்டர் டிப்ளமா படித்த, குடும்ப வேலைகளில் தேர்ச்சி பெற்ற, தெய்வ பக்தி மிகுந்த அழகிய பெண்ணிற்கு, வேலையில் உள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. படிப்பு, வேலை ஜாதகக் குறிப்புகளுடன் விண்ணப்பிக்க. பெட்டி எண் : 21045

• 25, 5'2" ஜிப்மரில் நர்ஸாக பணிபுரியும் ரெட்டியார் பெண்ணுக்கு அதே இனத்தைச் சார்ந்த பட்டதாரி, அரசாங்க உத்யோகத்தில் உள்ள மணமகன் தேவை. மணமகன் பாண்டிச்சேரி அல்லது சுற்றுப்புறத்தில் வேலை மாற்றல் செய்ய வேண்டும். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 21046

• வாதூல கோத்திரம், வடமாள், கார்த்திகை, வயது 31, ஐயர், எஸ்.எஸ்.எல்.சி., நல்ல குணமுள்ள, வீட்டு வேலைகள் நன்கு தெரிந்த, குடும்பப்பாங்கான பெண்ணிற்கு வரன் தேவை. பெட்டி எண் : 21047

